## உங்களுடைய கேசம் ஆரோக்யமாகவும் பளபளப்புடனும் விளங்கும்

# பிரில்க்ரீம்

### தடவி நேர்த்தியாக தலையை வாரிக்கொண்டால்!




**பிரில்க்ரீம் மட்டுமே**

* அதிக எண்ணெய்ப்பற்று இல்லாமலும், தாறுமாறாக உரோமம் கலையாமலும் நேர்த்தியாக தலையை வார உங்களுக்கு உதவுகிறது.
* மிகவும் சிக்கனமானது—ஒருமுறை தடவி வாரிக்கொண்டால் நாள் முழுவதும் உங்கள் தலை கலையாது அழகாக தோற்றமளிக்கும்.
* உரோமம் உதிர்ந்து வழுக்கை விழாமல் தடுக்கக்கூடிய, ஆரோக்யமான உரோம வளர்ச்சியைத் தூண்டக்கூடிய, நேர்த்தியான கலவை வாய்ந்தது.
* உங்களுடைய கேசத்தின் இயற்கையான வண்ணத்தைப் பாதுகாக்கிறது.

**எனவே இனிமேல் பிரில்க்ரீமையே உபயோகியுங்கள்!**

**உலக முழுவதிலும் லக்ஷக்கணக்கான நேர்த்தியான மனிதர்கள் இதையே உபயோகிக்கிறார்கள்**

B/P/1/P/1/65 TM

நினைவுத் திரையில்...

ருஷ்யாவில் ஜெர்மானியர்கள் அதிவேகமாக முன்னேறி வந்தனர். ருஷ்ய சைனியம் பின் வாங்கிய போதிலும் ருஷ்யக் கொரில்லாக்கள் மறைந்திருந்து போர் புரிந்தனர். அச்சமயம் ருஷ்யப் பொதுஜனங்கள் அவர்களுக்குப் பல விதங்களிலும் உதவினர். ஓர் உதாரணம்: ஜெர்மன் ஸோல்ஜர்கள் ஒரு டெலிபோன் கட்டடத்தை நாசம் செய்வதற்காக ஓடிச் சென்றார்கள். வழியில் மொச்சைக் கொட்டை விற்கும் கிழவி ஒருத்தி உட்கார்ந்திருப்பதை அவர்கள் பொருட்படுத்தவில்லை.

ஜெர்மானியர்கள் போன பிறகு அங்கு சில ருஷ்யக் கொரில்லா வீரர்கள் வந்தார்கள். 'எத்தனை ஜெர்மானிய வீரர்கள் போனார்கள் தெரியுமா?' என்று கிழவியைக் கேட்டார்கள். மிக முக்கியமான தகவல் அல்லவா இது?

கிழவி தனியாக வைத்திருந்த மொச்சைக் கொட்டைகளை எடுத்துக் கொடுத்தாள். 'எனக்கு எண்ணத் தெரியாததாகையால் ஒவ்வொரு ஸோல்ஜர் என்னைத் தாண்டிச் சென்றதும் ஒவ்வொரு கொட்டையை எடுத்து வைத்தேன். நீங்களே கணக்குப் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்றாள்.

'கல்கி ருஷ்ய வெற்றி மலர்' மே 6, 1945

# கல்கி

## பொருளடக்கம்

பராபவ, ஆடி 8 : ஜூலை 24



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

தீப்தி

இல்லந்தோறும் பிரபலமாகிவிட்ட பெயர்

தி ஓரியண்டல் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிட்.
67, 77, [illegible]
கல்கத்தா - 12.


தீப்தி லாந்தர்கள்


காஸ் ஜனதா


எனாமல் சாமான்கள்

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிட்டி பாப்பா — பாரதியார்



மலர் 25 ● இதழ் 52



நிமித்த மாத்ரம் பவ -

# ஜனநாயகத்தை மீட்போம் வாரீர்!

ராஜாஜி

சர்க்காரின் அதிகாரத்தை மிகவும் பெருக்கி, மக்களின் அடிப்படைச் சுதந்திரங்களைக் குறைத்துவிட்ட காங்கிரஸ் கட்சியையும் அதன் கீழ் வேலை செய்யும் சர்க்காரையும் காந்திக்கு விரோதமான கட்சி, காந்திக்கு விரோதமான சர்க்கார் என்று கருதுகிறேன். 'காந்தியின் கருத்துக்கு விரோதமாகச் செய்கிறோம்' என்று அவர்கள் வெளிப்படையாகச் சொல்வதில்லை. ஆயினும், சர்க்காருக்கு எவ்வளவு அதிகாரம் இருக்க வேண்டும், உற்பத்தியிலும் வியாபாரத்திலும் பிரஜைகளுக்கு எவ்வளவு சுதந்திரம் இருக்க வேண்டும் என்கிற விஷயங்களில் காந்திஜியின் கொள்கைகள் ''கர்னாடகம்'' ஆகிவிட்டதாக அவர்கள் நினைக்கிறார்கள்; அதற்கு மாறாகத் தாங்கள் செய்வதே தற்காலத்துக்கு உகந்தது என்றும் தேசத்தின் நலனுக்கு உதவும் என்றும் எண்ணுகிறார்கள்.

பார்லிமெண்டில் பல கட்சிகள் தங்களது கருத்துக்களை எடுத்து வாதிப்பது அவசியம் என்று இவர்கள் கருதவில்லை. ஒரு கட்சி ஆட்சியே சரி என்பது இவர்கள் உள் எண்ணம். காங்கிரஸ் கட்சியின் நிர்வாகக் கமிட்டி எடுக்கிற முடிவுகளே முடிவு, அவற்றைச் சர்க்காரின் உத்தரவாக ஆக்கிவிட வேண்டும் என்பது இவர்கள் கருத்து. சட்டசபை விவாதமில்லாமல் இவற்றை ராஷ்டிரபதியின் அவசரப் பிரகடனங்களாகச் சட்டமாக்கிவிடலாம் என்று எண்ணுகிறார்கள். சட்டத்துக்கு உட்பட்டு நடப்பதற்குப் பதில் நெருக்கடி கால அதிகாரங்களை எப்போதுமே பிரயோகிக்க விரும்புகிறார்கள். பாதுகாப்புச் சட்ட விதிகளை நிரந்தரமாக்கிவிட விரும்புகிறார்கள். மக்களின் உரிமைகளைக் காக்கும் நீதிபதிகளின் அதிகாரத்தை இவர்கள் ரசிப்பதில்லை. வெளிவேஷம் எதுவாயினும் இதுவே உண்மை நிலை. மொத்தத்தில், தங்கள் நிர்வாகத்தின் தோல்வி எவ்வளவு விதத்தில் பகிரங்கமாகிவிட்ட போதிலும் அதிகாரத்தை வேறெந்தக் கட்சிக்கும் போக விடாமல் தங்களிடமே வைத்துக் கொள்ள வேண்டும் என்பதுதான் காங்கிரஸ்காரர்களின் ஆசை. மக்களின் பொருளாதார வாழ்க்கையைத் தங்கள் கையில் பத்திரமாகப் பிடித்து வைத்துக் கொண்டால் தேர்தல் சுதந்திரத்தை அழித்துத் தங்கள் ஆட்சியை நீடிக்க முடியும் என்பதைக் கண்டு கொண்டு விட்டார்கள். அரசியல் சாஸனத்தின்படி தேர்தல் முறை செல்வது போல் காட்டிக் கொண்டாலும், மக்களின் தொழிலும் வியாபாரமும் தங்கள் ஆதிக்கத்தில் இருப்பதால் அதைக் கொண்டு தேர்வுமுறையைப் பொய்யாக்கி விட்டார்கள்.

அந்நிய நாடுகளினின்று பெருங் கடனைப் பெற்றுச் சுமந்தும், வாழ்க்கைச் சுதந்திரத்தைப் பெரும்பாலும் இழந்துமே தேசத்தில் தொழிலபிவிருத்தி காண முடியும் என்றால், இத்தகைய அபிவிருத்தியே வேண்டாம் என்று காந்திஜி சத்தியத்தின் மீது ஆணையிட்டுச் சொல்லியிருப்பார். அவ்வழியில் சென்றால் ஒரு நாளும் க்ஷேமம் இல்லை என்று ஆணையிட்டிருப்பார். காங்கிரஸ் தேசத்தை 'இன்ஸால்வென்ட்' நிலைக்குக் கொண்டு போய்விட்டது என்று தெரிந்தவுடன், காங்கிரஸ் சர்க்காரைப் 'பதவியிலிருந்து இறங்கு' என்று கண்டிப்பாய்ச் சொல்லியிருப்பார். நமக்குக் கடன் கொடுத்திருக்கும் நாடுகளில் நம்முடைய ரூபாயின் மதிப்பை மூன்றில் ஒன்றுக்கு மேல் குறைத்து விட ஒப்புக் கொண்டதே, 'இன்ஸால்வென்ட்' நிலைக்கு நிரூபணம் என்று கருதி, இந்த ஆட்சியைப் பதவியிலிருந்து இறங்கச் செய்திருப்பார்.

காங்கிரஸ் சர்க்கார் எல்லாவிதத்திலும் தோற்று விட்டது என்று நாடு

நன்றாக உணரத் தொடங்கி விட்டது. எதிர்ப்புணர்ச்சி பலமாகப் பரவி வருகிறது. பூர்வீக சேவையின் பெருமையால் ஓர் உயர்ந்த ஜாதியாகவும் பிறப்புரிமையாகவும் காங்கிரஸ் நமது சமூகத்தின் மீது தற்போதைய செல்வாக்குப் பெற்று நிற்கிறது. அது ஓர் அரசியல் கட்சி என்பதால் அந்த ஸ்தானத்தைப் பெற்றிருக்கவில்லை. ஒரு மேல் ஜாதியாகப் பதவி வகித்து வருகிறது.

ஃ ஃ ஃ

ஆள்கிற கட்சிக்கு எதிராக நாட்டின் உணர்ச்சி கொந்தளித்து எழுந்திருப்பதால், எதிர்க்கட்சிகளிடையே நிலவிய வேறுபாடுகள் தளர்ந்து வருகின்றன. யாவருமாக ஒன்று சேர்ந்து காங்கிரஸுக்குத் தோல்வி தந்து அதை ஆட்சியிலிருந்து விரட்ட வேண்டும் என்பதில் எதிர்க்கட்சிகள் ஆர்வம் கொண்டிருக்கின்றன. எதிர்க்கட்சிகள் சேர்ந்து பணியாற்றுவதை மக்களும் திருப்தியுடன் கவனித்து வருகிறார்கள். நல்ல நிர்வாகமும், நியாய நீதியும் மீண்டும் நிலவ வேண்டும் என்று மக்கள் விரும்புகிறார்கள். அந்நியர் ஆட்சி செய்த போது கிடைத்து வந்த சுதந்திரம், தொழிலிலும் வியாபாரத்திலும் இருந்த சுய ஆதீனம் மறுபடியும் மக்கள் பெற வேண்டும், பர்மிட்—லைசென்ஸ் ராஜ்யம் ஒழிய வேண்டும் என்று ஆசைப்படுகிறார்கள். எதிர்காலத்தில் என்றோ ஒரு நாள் ஐந்தாண்டுத் திட்டங்கள் பலனளிக்கத் தொடங்கும் என்று மாய மானை நம்பி இன்று அடிப்படைச் சுதந்திரங்களை இழப்பது பெரு நஷ்டம் என்று மக்கள் உணரத் தொடங்கி விட்டார்கள். ''கண்ணிரண்டையும் விற்றுச் சித்திரம் வாங்கினால் கைகொட்டிச் சிரியாரோ?'' என்று பாரதி பாடியதன் பொருள் இன்றைய அரசியல் நிலைக்கும் பொருந்தும் என்பதை உணரத் தொடங்கி விட்டார்கள்.

வரிப் பளுவும், கடன்களுக்காக வெளி நாடுகளுக்குக் கட்ட வேண்டிய தொகைகளும், விலைவாசி உயர்வும், ராணுவச் செலவும் — இவையெல்லாம் உள்ள வரையில் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டுப் பலனளிக்கத் தொடங்குவது இயலாது என்பதை மக்கள் புரிந்து கொண்டு விட்டார்கள். டம்பாச்சாரித்தனம் எதுவுமே வேண்டாம், நல்ல நிருவாகமும் நிலையான பொருளாதாரமும் இருந்தாலே போதுமெனக் கருதுகிறார்கள். மழை வருவதற்கு முன்பாகவே அதன் வாசனையை மோப்பது போல், காங்கிரஸுக்கு எதிர்ப்பு வளர்ந்து பெருகி வருவதை வானத்தில் நான் காண்கிறேன்.

பிரதம மந்திரியாக இருக்கும் பெருமாட்டியின் விவேகமும் தேசப் பற்றும் நிறைந்த சிந்தனைகளையும், பேச்சுக்களையும் பாராட்ட வேண்டும். என்றாலும், காங்கிரஸ் கட்சி சீர்திருந்தத் தயாராக இல்லை. இந்திரா காந்தி அவர்கள் சம்மதமின்றிக் கட்சிச் சிறையில் அகப்பட்டுக் கிடக்கிறார். எனவே, அவருக்கு எவ்வளவு மதிப்புத் தந்த போதிலும், காங்கிரஸ் கட்சிக்கு நாம் தோல்வி தந்தேயாக வேண்டும்.

இதில் சிரமமான அம்சம் என்னவெனில், காங்கிரஸிடம் வரம்பற்ற பண பலம் இருக்கிறது. அரசியல் மூலம் அதைச் சம்பாதித்து விட்டிருக்கிறது. எனவே, தேர்தல் செலவுகளைத் தாங்களே ஏற்றுக் கொள்ளக் கூடிய தகுதியுள்ள, தீரமுள்ள, நன்னடத்தை வாய்ந்த கனவான்கள் முன்வந்து சுதந்திரக் கட்சியின் அபேட்சகர்களாகத் தேர்தலில் நிற்குமாறு கேட்டுக் கொள்கிறேன். முன் ஜாக்கிரதைச் சிந்தனைகள் செய்து கொண்டு பின் வாங்காமல் துணிச்சலாகவே முந்நூறு முதல் நானூறு தொகுதிகள் வரை சுதந்திரக் கட்சி அபேட்சகர்களை நிறுத்தி வைத்துக் காங்கிரஸுடன் நேருக்கு நேர் போரிடலாம் என்ற யோசனை சுதந்திரக் கட்சியில் நடந்து வருகிறது. ஜனநாயகத்தை மீட்பதற்கு 1967ம் வருஷத் தேர்தல் ஒரு நல்ல வாய்ப்பாக நம் முன் நிற்கிறது. கம்யூனிஸ்ட்களின் எதிர்ப்பைப் பொருட்படுத்த வேண்டியதில்லை. அது காங்கிரஸ் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளும் ஒரு மிரட்டலே. பயத்தையும் அதிஜாக்கிரதையையும் உதறித் தள்ளி, தாற்காலிகமாகக் கிடைக்கக் கூடிய க்ஷேமலாபங்களைப் பெரிதாகக் கருதாமல், தயக்கமின்றி எல்லா நன் மக்களும் காங்கிரஸ் சர்வாதிகாரத்தை அகற்ற முன்வர வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன்.

காங்கிரஸின் நிர்வாகம் ஏற்கனவே தோல்வியடைந்து விட்டது. அந்தத் தோல்வியை நடைமுறையில் பகிரங்கத்துக்குக் கொண்டு வருவதற்குக் கருவிகளாக மாத்திரம் அபேட்சகர்கள் முன்வர வேண்டும்.

ஃ ஃ ஃ

''நிமித்த மாத்திரமாகவே நீ போர் புரிவாய்'' என்று பார்த்தனைத் தூண்டிய கண்ணனின் வாக்கை நினைவு கொள்வோம். அந்நிலையே காங்கிரஸ் நிலைமை.

நமது முயற்சிகளின் விளைவாக வெற்றி கிட்டினாலும் சரி, கிட்டாவிடினும் சரி ஜனநாயகத்தைக் காப்பதற்காகச் செய்த முயற்சிகள் ஒரு போதும் நஷ்டம் தர மாட்டா. அதற்குச் செய்கிற சிறிதளவு முயற்சியும்கூட தேசத்தைச் சர்வாதிகாரம் என்ற பெரும் பயத்திலிருந்து மீட்க உதவும். நஷ்டம் என்பது கிடையாது.

நேஹாபிக்ரம நாசோஸ்தி
ப்ரத்யவாயோ ந வித்யதே!
ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய
த்ராயதே மஹதோ பயாத் ॥

''இதில் முயற்சி வீணாவது இல்லை; இந்த மருந்தில் எதிரிடைப் பலன்கள் உண்டாகா. இந்த முறையைக் கொஞ்சம் அநுஷ்டிப்பதும் கூடப் பெரும் பயத்தினின்று காக்கும்'' என்ற கண்ணன் வாக்கியத்தை நினைவு கொள்வோம்.

# பருவ மழை பெய்யாதோ!

‘**ப**ம்பாயில் மழை இல்லையாம்! பம்பாய் நகர மக்கள் தண்ணீர் தட்டுப்பாட்டினால் பெரும் அவதிக்குள்ளாகி யிருக்கிறார்களாம்! பம்பாய் மக்களைக் காலி செய்து கொண்டு போகச் சொல்லப் போகிறார்களாம்!' என்றெல்லாம் பம்பாய் நகர சரித்திரத்தில் கேட்காத செய்தியைக் கேட்டுத் தேசம் முழுதும் விசனத்தில் ஆழ்ந்தது.

பம்பாயைப் பற்றி இதுவரை ஆண்டுதோறும் கேட்ட செய்திகள் எல்லாம் பம்பாயில் மூன்று நாட்களாக வானம் பொத்துப் போய் விட்டதோ என்று சொல்லும்படி அடை மழை, போக்குவரத்து சாதனங்கள் தடைப்பட்டு விட்டன, வேலைகள் ஸ்தம்பிதம்-இப்படிப்பட்டவையே. சென்னையிலிருந்து பம்பாய்க்குப் போகும் மக்கள், பம்பாயில் நாலாவது மாடியில் தண்ணீர் எவ்வளவு வேகமாகத் தட்டின்றிக் கொட்டுகிறது என்று வியப்பார்கள். இவையெல்லாம் இவ்வாண்டு பொய்யாகப் போய்விட்டிருந்தன.

பம்பாயில் இந்நிலை என்றால், காவிரியின் உற்பத்தி ஸ்தானமான குடகு நாட்டில் போதிய மழை கிடையாது. அதன் விளைவாகக் காவேரியில் போதிய தண்ணீர் இல்லை. கிருஷ்ணராஜசாகரத்திலும் மேட்டூர் அணையிலும் தண்ணீர் இல்லை என்ற ஓலம்தான் தினம் பத்திரிகைகளில் பார்த்து வந்தோம். மேட்டூரில் தண்ணீர் இல்லை என்றால் தஞ்சை மாவட்டத்தில் குறுவை சாகுபடி பாழாகிறதே என்று அங்கலாய்க்க வேண்டியதுதான். சென்ற ஆண்டுப் பஞ்சத்துக்குப்பின் இந்தப் பருவ மழையும் தவறியுள்ளது. ஆங்காங்கே மழைக்காகப் பிரார்த்தனை, ஜபம் எல்லாம் நடைபெறுகின்றன. இதை எழுதும் போது பம்பாயிலும், மேற்கு மலைப் பகுதிகளிலும் நல்ல மழை பொழியத் தொடங்கியிருப்பதாகச் செய்தி வந்துள்ளது. இறைவன் கருணையில் இது பெருக வேண்டும்.

ஆட்சிக்கும் இயற்கைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்று நம் பெரியோர்கள் சொல்லுவார்கள். ஆட்சியாளர்கள் நல்லவர்களாக இருந்தால், இரக்கமுள்ளவர்களாக இருந்தால் மாதம் மும்மாரி பொழிந்து தேசம் சுபிட்சமாக இருக்குமாம்! இப்போது ஏற்பட்டுள்ள பஞ்ச நிலையைக் காணும் போது, நமது ஆட்சி பீடத்திலுள்ளவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்று வானம் தீர்ப்புக் கூறுகிறது என்று ஊகிக்கலாம்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

**ச**மீபத்தில் ஒரு நாள் நான் சென்னை நகரத் தெருவொன்றின் வழியே செல்லும்போது சாதாரணமான ஒரு ஹோட்டல் வாசலிலுள்ள அறிவிப்பில் பார்வை சென்றது. ''ஒரு சாப்பாடு 2 ரூபாய்'' என்று அதில் கண்டிருந்தது. இதில் ஹோட்டல்காரரின் லாபத்துக்கும், சாப்பாட்டிலிருந்து நீக்கக் கூடிய வியஞ்சனங்களுக்குமாக அரை ரூபாய் தள்ளுபடி செய்யலாம். பட்டணத்து விலைவாசிக்காக இன்னோர் அரை ரூபாய் குறைக்கலாம். எப்படியாயினும் வயது வந்த ஒருவரின் ஒரு வேளைச் சாப்பாட்டுக்கு ஒரு ரூபாய் பிடிக்கும் என்றாகிறது. அதாவது வருடாந்தரமாக ஒருவர் இரண்டு வேளையும் சாப்பிடுவதாயின் அதற்கான செலவு எழுநூறு ரூபாய்க்கு மேலாகும். ஆனால் நம் நாட்டில் சராசரி வருமானம் 437 ரூபாய் தான். இதில் உணவு மட்டுமின்றி, உடை, வீட்டு வாடகை, மண்ணெண்ணெய் எல்லாம் வாங்கியாக வேண்டுமெனில் பலர் இரண்டு வேளை நல்ல சாப்பாடு பெற முடியவில்லை என்றுதானே பொருள்? பதினைந்து வருட மத்தியத் திட்டத்துக்கும், ''அபிவிருத்தி''க் காரியங்களுக்கும் அப்புறம் நமது நிலை இது. இதுபோன்ற அரசாட்சியை நீடிக்க விடக் கூடாது என்பதற்கு வேறு நிரூபணமும் வேண்டுமா? ஆலைத் தொழிலாளிகள் உட்பட நகரத்தில் வாழ்கிறவர்கள் சர்க்காரைக் கெடுபிடி செய்து உதவி பெற முடியும். இவ்வாறு நகர்ப்புறத்தில் உள்ளவர்கள் தங்கள் வருமானத்தை உயர்த்திக் கொள்ள முடிகிறதெனில் அந்த அளவுக்கு நாட்டுப்புறத்தில் வாழும் எண்பது சத விகிதத்தினர் தங்களது சராசரி வருமானத்தை இழந்தாக வேண்டும். இது மட்டும்தான் அவர்களது கஷ்டமா? கிராமங்களில் அவர்களுக்குக் குடிக்கச் சுகாதாரமான நீரேனும் உண்டா? வியாதி வராதபடி காக்கக் கழிவுகால்கள் உண்டா?

ஃ ஃ ஃ

**ப**ஞ்சாயத்துக்களிடமும் மற்ற ஸ்தல ஸ்தாபனங்களிடமும் உள்ள ஜீப்புக்கள் தேர்தல் சமயத்தில் கட்சிக் காரியங்களுக்குப் பயனாகாதிருக்க வேண்டும் என்பதற்காக, தேர்தலுக்கு இரண்டு மூன்று மாதங்கள் முன்பே அவற்றை அரசாங்கம் எடுத்துக் கொண்டு விடப் போவதாகச் சொல்லப்படுகிறது.

இதுவரையில் எவ்வளவு துஷ்பிரயோகம் நடைபெற்றது என்பதற்கு இதுவே போதுமான சான்று. பச்சாத்தாபம் எதுவும் இல்லாமலேதான் இப்போது சர்க்கார் புது முடிவு செய்திருப்பதாக நினைக்கத் தோன்றுகிறது. திடீரென்று ஆள்கிற கட்சியாரின் மனப்பான்மையில் பெரிய மாறுதல் நிகழ்வதற்குக் காரணம் இல்லை அல்லவா? காலந்தள்ளி இப்போது பிறந்துள்ள சீலமான எண்ணத்துக்கு லௌகிக லாபமாக ஏதோ காரணம் இருக்க வேண்டுமென்றே பலரும் நினைக்கிறார்கள். ஜீப்களை வாபஸ் பெற்றால் மட்டும் போதாது; தேர்தல் காரியங்களுக்காக ஸ்தல ஸ்தாபனங்களின்மீது ஆள்கிற கட்சி செலுத்தும் ஆதிக்கத்தையே வாபஸ் பெற்றாக வேண்டும்.



இந்தியாவில் முதன் முதலாக, டெலிவிஷன் மூலம் இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் கதீட்ரல் காரி-யாலயத்தில் சில விநாடிக்குள் உங்கள் காரில் இருந்தபடியே உங்கள் செக்கிற்கு பணம் பெறலாம். இதே மாதிரி பணமும் கட்டலாம்.

மவுண்ட் ரோடு



# இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்

தலைமைக் காரியாலயம்: 151, மவுண்ட் ரோடு, சென்னை-2.

எம். ஸிடி. முத்தையா
சேர்மன்

கே. எம். நஞ்சப்பா
ஜெனரல் மானேஜர்

# மேதைகம் சிறப்பிக்கும் மேனன்

முசிரி ஸ்ரீசுப்பிரமணிய அய்யர்

சர்வ தேச சங்கீதக் குழுவின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கும் அகில இந்திய ரேடியோ டைரக்டர் ஜெனரல் டாக்டர் நாராயண மேனன் இவ்விதழ் அட்டையை அலங்கரிக்கிறார். அவரைப் பற்றி முசிரி அவர்களின் கட்டுரையை மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறோம். - ஆசிரியர்

இருபது வருஷங்களுக்கு முன் ஒரு நாள். என் நண்பர் ஸ்ரீ ஆர். ஐயாத்துரை டெலிபோன் செய்தார். ''நம்ம வீட்டுக்குச் சீமையிலிருந்து வந்த டாக்டர் தம்பதிகள் உணவருந்த வருகிறார்கள். நீங்களும் அதில் கலந்து கொள்ள வேணும்!'' என்றார். 'சீமை டாக்டர் விருந்தில் இந்தச் சங்கீதக்காரனுக்கு எதற்கு அழைப்போ?' என்று எண்ணிக் கொண்டே சென்றேன்.

சீமையிலிருந்து சில நாட்களுக்கு முன்பு தான் அந்தத் தம்பதிகள் வந்திருந்தாலும் நம் பண்பாட்டைக் கைவிடாமல் எல்லோருக்கும் முக மலர்ச்சியுடன் கைகூப்பி வணங்கி அறிமுகப்படுத்திக் கொண்டது என்னைக் கவர்ந்தது.

''இவர்தான் டாக்டர் நாராயணமேனன். பி. பி. ஸி. ரேடியோவில் பணியாற்றிவிட்டு இப்போது இந்தியாவுக்கு வந்திருக்கிறார். இவர் அவரது மனைவி ஸ்ரீமதி ரேகா. கவியரசர் தாகூர் பிறந்த வங்காளத்தைச் சேர்ந்தவர்'' என்று எனக்கு அறிமுகப்படுத்தினார்கள்.

டாக்டர் மேனன் சாதாரண டாக்டர் இல்லை. கலைகளிலெல்லாம் தேர்ந்த டாக்டர்; எடின்பரோ சர்வகலாசாலையில் பி. எச்டி. ஆராய்ச்சிப் பட்டம் பெற்றவர்; சங்கீதம், இலக்கியத் துறைகளில் வல்லுநர் என்று தெரிந்து கொண்டேன். டாக்டர் மேனனது அறிமுகம் இப்படிக் கிடைத்தது.

நான் தயங்கியபடியே, ''நீங்கள் எங்கள் வீட்டுக்கும் உணவருந்த வரவேண்டும்'' என்று வேண்டிக் கொண்டேன். அவர் பிகு ஒன்றும் செய்யாமல் மிகுந்த அன்போடு என் அழைப்பை ஏற்ற சௌலப்யத்தை என்றும் என்றும் மறக்க இயலாது.

நிறைகுடம் தளும்பாது என்பார்கள். டாக்டர் மேனன் அவர்களுக்கு வட நாட்டு ஹிந்துஸ்தானி சங்கீதம், மேல் நாட்டு சங்கீதம், கர்நாடக இசை ஆகியவற்றில் தேர்ந்த ஞானமுண்டு என்பதை அவருடன் சங்கீதச் சர்ச்சை செய்த தருணங்களிலெல்லாம் தெரிந்து கொண்டேன். சீமையிலேயே படித்து, மேனாட்டு இசை நுணுக்கங்களையெல்லாம் நன்கு அறிந்திருக்கிறார். மேனாட்டில் கற்று வந்திருக்கும் அவரிடம் நம் சங்கீதத்தைப் பற்றி இவ்வளவு தேர்ந்த ஞானமிருக்கிறதே என்று வியப்பும் ஏற்பட்டது.

நம் கர்நாடக சங்கீதத்தில் தெளிவான அபிப்பிராயம் படைத்த இவர் நம் தேசத்து ரேடியோ நிலையங்களில் பணியாற்றினால் எவ்வளவோ நன்றாக இருக்குமே என்று என் மனத்தில் பட்டது. நான் நினைத்தபடியே அவர் இந்திய நாட்டின் ரேடியோ நிலையங்களில் பணியாற்றத் தொடங்கிய போது எனக்கு மிகுந்த மகிழ்ச்சி உண்டாயிற்று.

அகில இந்திய ரேடியோவின் பல நிலையங்களில் டைரக்டராகப் பணி புரிந்து உதவி டைரக்டர் ஜெனரலாகப் பதவி உயர்வு பெற்றார் டாக்டர் நாராயண மேனன். அப்பதவிக் காலத்தில் 1963ம் வருஷம் ஜூன் மாதம் முதல், இரண்டு வருஷ காலம் அவரது

யுனெஸ்கோ மகாநாட்டில் நமது சக அங்கத்தினர்களுடன் டாக்டர் நாராயண மேனன்.



சேவையை மத்திய சங்கீத நாடக அகாடமிக்கு மாற்றி வழங்கி உதவினார்கள். மத்திய சங்கீத நாடக அகாடமியின் காரியதரிசியாகப் பணியாற்றிய சொற்ப காலத்துக்குள் சங்கீத வித்துவான்களுக்கும், குறிப்பாக கர்நாடக சங்கீதத்துக்கும் அவர் ஆற்றிய சேவைகள் கணக்கிலடங்கா. அகில உலகமும் பிரதட்சணம்செய்து பெற்ற அனுபவமும், யோக்கிய நாம்சங்களும், இசைக் கலைத் தேர்ச்சியும் அவருக்குப் பெரும் பொறுப்பைத் தேடித் தந்தன. 1965ம் வருஷம் ஜூன் மாதம் அகில இந்திய ரேடியோவின் டைரக்டர் ஜெனரலானார்.

**ப**த்துப் பன்னிரண்டு வருஷங்களுக்குமுன் நான் சென்னை கர்நாடக சங்கீதக் கல்லூரி பிரின்ஸிபாலாக இருந்த சமயம் கோமகன் ஹார்வுட்டும் அவரது சீமாட்டியும் சங்கீதக் கல்லூரிக்கு விஜயம் செய்தார்கள். அந்தச் சமயம் டாக்டர் மேனனும் வந்திருந்தார். டாக்டர் மேனன் அவர்களை ஹார்வுட் தம்பதிகளுக்கு அறிமுகப்படுத்த விரும்பி, ''இவர்தான் டாக்டர் மேனன்!'' என்று தொடங்கு முன்பே, வெகு நாட்கள் பரிச்சய மானவர்களான அவர்கள் உரையாடத் தொடங்கிவிட்டனர். நாடறிந்த பிரமுகருக்கு அறிமுகம் எதற்கு? ஹார்வுட் போன்ற ரசிகப் பிரமுகருடன் நாராயண மேனனுக்கு நெருங்கிய நட்பு இருந்ததில் ஆச்சரியம் என்ன?

சங்கீதத்தை மிக்க ஞானத்துடன் அனுபவிக்கும் ரஸிகர் கூட்டமே பாடகனுக்கு உயிரூட்டும் 'டானிக்'. தலைசிறந்த ரஸிகரான டாக்டர் மேனனும், உலகிலேயே தலைசிறந்த பிடில் மேதை யெஹூதி மெனுஹினும் அருமை நண்பர்கள்.

அவர் சங்கீத ரசிகர் மட்டுமல்ல. வீணை வாசிப்பதிலும் வல்லுநர். மேனாடுகளில் பல இடங்களில் வீணைக் கச்சேரியும் செய்திருக்கிறார். அதுமட்டுமல்ல; பலரக சங்கீதங்களைக் கேட்டு, அனுபவித்துப் பிறருக்குத் தெளிவுறச் சொல்வதிலும் டாக்டர் மேனன் மகா நிபுணர். அவர் எடின்பரோ சங்கீதக் கலை விழாவில் நம் சங்கீதக் வகைகளைப் பற்றி மேனாட்டார் வியந்து போற்றும்படியாக விளக்கிய மகிமையை மறந்துவிட முடியுமா? 1960-ல் சர்வ தேசச் சங்கீதக் குழுவுக்குத் தமது தனித் திறமை காரணமாகவே தேர்ந்தெடுக்கப்பட்ட உலக இசை நிபுணர்களான ஒன்பது அங்கத்தினர்களில் ஒருவர் ஸ்ரீ மேனன். பிறகு இச்சபையின் நிர்வாகக் குழு பொறுப்பாளராகவும் மகாசபையின் உபதலைவராகவும் அவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். இன்று சர்வதேச சங்கீதக் குழுவின் தலைமைப் பதவியையே அவர் பெற்றிருப்பது நம் இந்திய சங்கீதக் கலைக்குக் கிடைத்த கௌரவமாகும். பன்னிரண்டு சர்வதேச ஸ்தாபனங்களின் அங்கத்தினர்களும், நாற்பது நாடுகளிலிருந்து தலைக்கொரு பிரதிநிதியும், தனித் திறமை படைத்த ஒன்பது நிபுணர்களும் அடங்கிய சபையே சர்வதேச சங்கீதக் குழு. 1967 ஜனவரியிலிருந்து இரண்டாண்டுகளுக்கு இக் குழுவின் மதிப்புக்குரிய தலைமைப் பதவியை ஸ்ரீ மேனன் வகிப்பார்.

நமது கர்நாடக சங்கீதம் மேல்நாடுகளில் கொஞ்சம் கொஞ்சமாகப் பரவி வருகிறது. சங்கீதப் பாலம் போல் விளங்கும் டாக்டர் நாராயண மேனன் இப்பொழுது 'இண்டர் நாஷனல் மியூசிக் கௌன்ஸிலி'ன் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருப்பதால் நமது சங்கீதக் கலை வெளிநாடுகளில் நல்ல முறையில் பரவும் என்பது என் முழு நம்பிக்கை.

---

## ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள் ஸ்ரீமுகம்

கும்பகோண க்ஷேத்திரத்துக்குச் சமீபத்தில் புண்ணிய நதியான காவேரியின் வடகரையில் விளங்குவதும், ஹேரண்ட முனிவரின் தபோபலத்துடன் கூடியதும், அப்பர் முதலிய நாயன்மார்களின் பாடல்கள் பெற்றதும், ஆமணக்குச் செடியின் கீழிருந்து தோன்றின ஈசுவரனின் ஸான்னித்தியத்தினால் கொட்டையூர் என்று புகழ்பெற்றதுமான க்ஷேத்திரத்தில் அருள்பாலிக்கும் பந்தாடுநாயகி ஸமேத ஸ்ரீ கோடீச்வர ஸ்வாமியின் ஆலயம் ஜீர்ணமாயிருப்பதை உத்தாரணம் செய்ய இந்த ஆலயத்தில் பரம்பரையாகத் தொண்டு செய்து ஈடுபட்டு வரும் ஸ்ரீ குஞ்சிதபாதம் செட்டியாரும் மற்றும் தர்மகர்த்தாக்களும் முன்வந்திருப்பதையும், இத்திருப்பணி நிதி உதவிக்காக ஸ்ரீ திருமுருக ஸரஸ்வதி கடாக்ஷாம்ருத கிருபானந்தவாரியாருடைய மஹாபாரத விரிவுரைக்கு ஏற்பாடு செய்திருப்பதையும் அறிந்து ஸ்ரீ மஹா சந்நிதானத்தில் சந்தோஷிக்கிறார்கள். *



ஆஸ்திகர்கள் இவ்வுத்தமத் திருப்பணிக்குப் பூரணமாக உதவி செய்து இதைப் பூர்த்தி செய்வித்து ஸ்ரீ கோடீசுவரரின் கிருபையை அடைந்து எல்லா மங்களங்களையும் அடையும்படி ஸ்ரீ மஹா சந்நிதானத்தில் அநுக்கிரகிக்கிறார்கள்.

---

* ஜூலை 17 முதல் 31ந் தேதி முடிய குடந்தை டவுன் ஹைஸ்கூல் மைதானத்தில் விரிவுரைகள் நடைபெறும். பொருள் அனுப்பவேண்டிய முகவரி: பொருளாளர், கோடீசுவர ஆலயத் திருப்பணிக்குழு, திருக்கொட்டையூர், (கும்பகோணம் சமீபம்)

## செய்திப் படங்கள்

1. ராஷ்டிரபதி பவனில் திரு கே. சுப்பாராவ் இந்தியாவின் பிரதம நீதிபதியாகப் பிரமாணம் எடுத்துக் கொள்ளுமுன் டாக்டர் ராதாகிருஷ்ணன் அவரைக் கைகுலுக்கி வரவேற்கிறார்.

★






★

2. 'வக்த்' இந்திப் படத்தில் நடித்த நடிகர் ராஜ்குமார் லண்டனில் அப்படம் வெஸ்ட் எண்ட் சினிமாவில் முதலில் திரையிடப்பட்டபோது நேரில் தோன்றினார். அவர் லண்டன் பி.பி.ஸி. இந்தி நிகழ்ச்சியில் பேட்டியளிக்கும் காட்சி.

★

3. நார்வே சர்க்கார் ஆராய்ச்சி சாதனங்கள் அனைத்தும் பொருத்தப்பட்டுள்ள மீன் பிடிக்கும் கப்பல் ஒன்றைக் கேரளத்துக்குப் பரிசாக வழங்கியுள்ளனர்.

★

4. கல்கத்தாவில் 'அமெச்சூர் நாடகக் குழு'வினர் பேராசிரியர் கல்கியின் 'சிவகாமியின் சபதம்' சரித்திர நாடகத்தைத் தியாகராஜ ஹாலில் விமரிசையாக நடித்துக் காட்டினர்.





# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இம் மாதிரி அபாயக் குறிகளை அசட்டை செய்யாதீர்கள்:



★ கேசம் குறைதல்

★ மெழுக்கேறிய, துவண்ட ரோமம்



இளமையில் வழுக்கை
முன்பே ஏற்படுவதைப் பெரும்பாலும்
தடுத்திருக்க முடியும்.

கேசம் குறைதல், ரோம உதிர்வு ஆகியவை உங்களைப் பாதித்தால் இன்றே ப்யூர் சில்விக்ரின் உபயோகிக்கத் தொடங்குங்கள். உங்கள் ரோமத்திற்கு ஆக்கம் தரும் பதினெட்டு அமினோ-அமிலங்கள் யாவும் அடர்வான நிலையிலே செறிந்துள்ளது ப்யூர் சில்விக்ரின். உச்சந் தலையிலே அழுத்தித் தேய்த்தால் ப்யூர் சில்விக்ரின் மயிர்க்கால்களை ஊடுருவி, நீடித்த நலனைக் கேசத்திற்கு மீட்டுக் கொடுக்கத் தேவைப்படும் இயற்கையான ஊட்டத்தை வழங்குகிறது.

ஆல் அபௌட் ஹேர் (ALL ABOUT HAIR) என்ற, படங்கள் கொண்ட இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினீர்களானால் இவ் விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மெண்ட் K-1, சில்விக்ரின் அட்வைசரி சர்விஸ், தபால் பை 727, பம்பாய் 1.




**ப்யூர் சில்விக்ரின்**
கேசக் கோளாறுகளின் சிகிச்சைக்கான தோரு தீவிர குணம் செறிந்த தயாரிப்பு. ஒரு மாத சிகிச்சைக்குப் போதுமானது

**சில்விக்ரின் ஹேர் டிரஸ்ஸிங்**
நாள் முழுதும் உங்கள் கேசத்தைப் பாங்காகப் படிய வைத்திருக்கும். கேசக்கோளாறுகள் ஏற்படாமல் தடுக்கப் போதுமான ப்யூர் சில்விக்ரின் அடங்கியது




# Silvikrin

**சில்விக்ரின் – கேச ஆரோக்கியத்திற்கான வழி**

SP/UP/2/66

# சிவனருட் செல்வர்





திருமுருக கிருபானந்த வாரியார்

## 11. 'வென்ற ஐம்புலனால் மிக்கீர்!'

**நா**ட்கள் நகர்ந்தன; மாதங்கள் ஓடின. ஆண்டுகள் பல கழிந்தன. திருநீல கண்ட நாயனருக்கு வயதாகி விட்டது. நாயனரது தூய நிலையை உலகு உணர்ந்து உய்யும்பொருட்டு அத்திரு வோட்டை வைத்திருந்த இடத்தி லிருந்தும் மறைத்தருளினர் இறைவர். பெட்டியில் வைத்த ஓடு ஓடி விட்டது. எம்பெருமான் முன்பு போல் சிவ யோகியாகித் திருநீலகண்டரிடம் வந் தார். தொண்டராய திருநீலகண்ட நாயனர் அண்டர் நாதனை எதிர் கொண்டு வரவேற்ருர். திருவடிகளைப் பூசித்தார். ''அன்பனே! முன்பு உன் னிடம் கொடுத்து வைத்திருந்த திரு வோட்டைக் கொண்டு வா'' என்ருர் எம்பெருமான். ''இதோ கொண்டு வருகிறேன்'' என்று வீட்டுக்குள் சென்று வைத்த இடத்தில் தேடினர் திருநீலகண் டர். அங்கு திருவோடு இல்லை. திகைத்து நின்ருர். ''திருவோடு எங்கே?'' என்று மனைவியாரைக் கேட்டார். வீடு முழுவ தும் தேடினர். எங்கும் கிடைக்கவில்லை. மிகவும் வாடினர். 'வர்துள்ள பெரிய வருக்கு என்ன சொல்வேன்?' என்று வருந்தினர். இதையெல்லாம் கவனித் துக் கொண்டிருந்த பெரியவர், ''ஏனப்பா இத்தனை தாமதம்? விரை வில் கொண்டுவா. நான் அவசரமாகப் போக வேண்டும்'' என்று கூறினர்.

திருநீலகண்டர் வந்து அவரைத் தொழுதார். ''ஐயனே! சிறியேன் பிழையைப் பொறுத்தருளல் வேண்டும். தேவரீர் கொடுத்து விட்டுச் சென்ற திருவோட்டைப் பத்திரமான இடத்தி லேயே வைத்தேன். அதைக் காண வில்லை. எல்லா இடங்களிலும் தேடி னேன். கிடைக்கவில்லை. அது பழைய ஓடு. அதைவிடச் சிறந்த ஓடு தரு கிறேன். அதனை ஏற்றுக் கொண்டு மன்னித்தருள்வீர்'' என்று பணிந்தார்.

சிவயோகியாருக்குச் சீற்றம் பொங் கியது. ''நன்ருயிருக்கிறது! தானமாக ஓடு தருகிறேன் என்று சொல்லி அடி யார்களிட மிருந்து ஓடு வாங்கிக்கொள் கிருயா? ஓடு கெட்டுவிட்டது என்ரு சொல்கிருய்? பொன் ஓடே தந்தாலும் எனக்கு வேண்டாம். நான் கொடுத்த மண் ஓட்டைக் கொண்டுவா'' என்ருர்.

திருநீலகண்ட நாயனர் எவ்வளவோ மன்ருடியும் சிவயோகி சிறிதும் மனம் இறங்கவில்லை.

''என் ஓடு உன்னிடம் கொடுத்து வைத்த அடைக்கலப் பொருளன்ருே? அடைக்கலப் பொருளையே அபகரித்துக் கொண்ட நீ என்னதான் செய்ய மாட் டாய்! பழி பாவத்துக்கு அஞ்ச மாட் டாயே? நான் கொடுத்து வைத்த திரு வோட்டை உன்னிடமிருந்து பெருமல் போய்விடுவேன் என்று எண்ண வேண் டாம். இந்த ஊரார் அனைவரும் காண உன்னை வளைத்துத் திருவோட்டைப் பற்றுவேன். என்னை என்ன என்று நினைத்து விட்டாய்? உன்னை விடமாட் டேன்'' என்ருர் சிவயோகியார்.

''எம்பெருமானே! சிறியேன், தாங்கள் கொடுத்துச் சென்ற திருவோட்டைக் களவாடி வைத்துக் கொள்ளவில்லை. களவு என்பதை அடி யேன் கனவிலும் கருதாதவன். பொறுத் தருள வேண்டும்'' என்ருர் நாயனர்.

''ஓடு உள்ளபடியே கெட்டுவிட்டதா? அவ்வாருயின் நீ உன் மகன் கையைப்



பற்றிக் கொண்டு குளத்தில் மூழ்கிச் சத்தியம் செய்'' என்று பகர்ந்தார் சிவயோகியார்.

திருநீலகண்டருக்குக் குழந்தையில்லை என்று சுவாமிக்குத் தெரியாதா?

''பெருமானே! தாங்கள் அருளிச் செய்தவாறு செய்வதற்குப் புதல்வன் இல்லையே? அடியேன் வேறு என்ன செய்யப் பணித்தாலும் செய்கிறேன்'' என்றார் நாயனார்.

''உனக்கு மகன் இல்லையானால் உன் மனைவியின் கரம் பற்றிக் குளத்தில் மூழ்குவாய்'' என்றார் சிவயோகியாக வந்துள்ள சிவபெருமான்.

''சுவாமி! எங்களுக்குள் ஒரு சபதம் உண்டு. அதனால் அடியேன் அவளைத் தீண்டுவதற்கில்லை. அடியேன் மட்டும் மூழ்கி உண்மையை உரைப்பேன்'' என்றார் நாயனார்.

''நன்று! நன்று! உன் பேச்சு! நான் தந்த திருவோட்டைத் தரவும் இசையவில்லை. உனது மனைவியின் கரம் பற்றிப் புனல் மூழ்கி உண்மை உரைக்கவும் மறுக்கின்றாய். உனது ஒழுக்கம் மிகவும் நன்று. இதுதான் நீ அடியார்க்குத் திருவோடளிக்கும் திருத் தொண்டு போலும்! தில்லை வாழ் அந்தணர்களது அவையில் உன் செயலைப் பற்றிக் கூறி நியாயம் பெறுவேன்'' என்றார் எம்பெருமான்.

சிவயோகியார் அங்கிருந்து நடந்தார். அவர் பின்னே தொடர்ந்து சென்றார் திருநீலகண்ட நாயனார். மூவருங் காணாத முழு முதல் அந்தணர் அவைக்களம் சென்று முறையிட்டார். ''பெரியோர்களே! இந்த வேட்கோவ விடம் நான் திருவோடு கொடுத்துச் சென்றேன். திரும்பி வந்து கேட்கும் போழுது கொடுக்க மறுக்கிறான். ஓடு கெட்டுவிட்டதாம். 'உள்ளபடியே அந்த ஓடு கெட்டுவிட்டதாயின் மனைவியின் கரம் பற்றிக் குளத்தில் மூழ்கிச் சத்தியம் செய்' என்றேன். அவ்வாறு

சத்தியம் செய்யவும் மறுக்கின்றான். நீங்களே நியாயத்தைக் கூறுங்கள்'' என்றார்.

கங்கையையும், திங்களையும், அரவையும் மறைத்து வந்த இறைவரது சொற்களைக் கேட்ட மறையவர்கள் திருநீலகண்டரை நோக்கி, ''நீர் இதற்கு என்ன சொல்கின்றீர்?'' என்று கேட்டார்கள்.

''தூய மாமறையோர்களே! திருஒடு ஒன்று இவர் என்னிடம் கொடுத்து வைத்தது உண்மை. அதனை மிகவும் பத்திரமான இடத்தில் நான் வைத்திருந்தேன். எம்பிரான் திருவிளையாடலோ, அவர் புரியும் சோதனையோ அன்றி எனது பண்டை வினையின் விளைவோ, திருவோட்டினைத் தேடியும் காணவில்லை. எளியேனது வாய்மையும், தூய்மையும், இந்த ஊரவர் அறிந்ததே. மனத்தாலும் பிழை செய்யாதவன்; ஒடு கெட்டு விட்டது; என் செய்வேன்?'' என்றார் திருநீலகண்ட நாயனார்.

அந்தணர்கள் நாயனாரை நோக்கி, ''ஐயா! இவர் தந்த ஒடு கெட்டு விட்டது என்று சொல்கிறீர்கள். அவ்வாறாயின் இந்தச் சிவயோகியார் கூறுகிறபடி மனைவியைப் பற்றி நீரில் மூழுகி உண்மையை உரைப்பதே நியாயம்'' என்று தீர்ப்புக் கூறினர்.

அருந்தவம் புரியும் தொண்டர் அதனைக் கேட்டு, தம்மனைவியைத் தீண்டுவதில்லை என்ற செய்தியைக் கூறவில்லை. ''பொருந்திய வகையில் நீரில் மூழ்கி உண்மையை உரைக்கின்றேன்'' என்று கூறிப் பெருந்தவ முனிவரோடு தம் இல்லம் சென்றார். இல்லம் சென்ற நாயனார் தம் மனைவியை அழைத்துக் கொண்டு திருப்புலீச்வரத்துக்கு முன் ஒரு சோலைக்கு நடுவேயுள்ள இருக்குளத்துக்குச் சென்றார். முற்காலத்தில் தாம் கூறிய சூளுரை பழுதாகாதபடி மூங்கில் தண்டின் ஒரு முனையை மனைவியாரும் மற்றொரு முனையைத் தாமும் பற்றிக்கொண்டு புனலில் மூழ்குவாராயினர்.

தண்டிரு தலையும் பற்றிப்
புகும்அவர் தம்மை நோக்கி
வெண்திரு நீற்று முண்ட
வேதியர் ''மாதைத் தீண்டிக்
கொண்டுடன் மூழ்கீர்'' என்னக்
கூடாமை பாரோர் கேட்கப்
பண்டுதம் செய்கை சொல்லி
மூழ்கினார் பழுதிலாதார்

தண்டின் இரு தலையையும் பற்றி முழுகத் தொடங்கிய அடியவரை நோக்கிய ஆண்டவர், ''அப்பா! என்ன இது! உன் மனைவியின் கையைப் பிடித்து மூழ்க வேண்டும் என்றால் கோலைப் பற்றி மூழ்குகின்றாயே! இதிலிருந்தே ஒடு கெட்டுவிட்டது என்று சொல்லி நீ ஏமாற்றியது தெரிந்து விட்டதே. நான் இதற்கு இசையேன்'' என்றார்.

மாது சொன்ன சூளால் இளமை துறந்த பெரியவர் தமக்கும் தம் மனைவிக்கும் முன் நேர்ந்த பிணக்கையும், திருநீலகண்டத்தின் மீது மனைவியார் ஆணையிட்டதையும் அன்று தொட்டு இன்றுவரை மாதர் யாரையும் சிந்தையாலும் தீண்டாது இருந்த தன்மையையும் அப்போதுதான் உலகில் உள்ளவர் யாவரும் கேட்க உரைத்தார். அனைவரும் அதிசயித்தனர்.

''இதை முதலிலேயே சொல்லியிருந்தால் இவ்வளவு பேசியிருக்க மாட்டேனே'' என்றார் சிவயோகியார்.



பின்னர் குலால மன்னர் தண்டின் முனையைப் பற்றி இல்லாளுடன் வாவியில் மூழ்கி எழுந்தார்.

**வாவியின் மூழ்கி ஏறுங்**
**கணவரும் மனைவி யாரும்**
**மேவிய மூப்பு நீங்கி**
**விருப்புறும் இளமை பெற்றுத்**
**தேவரும் முனிவர் தாமும்**
**சிறப்பொடு பொழியும் தெய்வப்**
**பூவின்மா மழையின் மீள**
**மூழ்குவார் போன்று தோன்ற.**

நாயனாரும், கற்பின்மிக்க அவரது மனைவியாரும் அவர்களது முதுமை நீங்கி, சூள் செய்த தருணத்தின் இளமை பெற்று எழுந்தனர். அவர் களது திருமேனியில் அழகின் ஒளி வீசி யது. அருள் வெள்ளம் பெருகியது. இமையவரும் இருடியரும் தெய்வமலர் பொழிந்தனர்; துதியுரை மொழிந்த னர். பூ மழையில் முழுகிய அத் திருவாளர்களைக் கண்ட எல்லோரும் தொழுதனர். அந்த அதிசயத்தைக் கண்ட அனைவரும் சிவயோகியைக் காணவில்லை. ''அவர் எங்கே?'' என்று மருண்டனர். அலைபுனற் சடையெம் அண்ணல் மலைமகளோடு விண்மேல் விடை மீது காட்சி தந்தருளினார். அண்டருங் காணாத நீலகண்டரைத் திருநீலகண்ட நாயனாரும், கற்பின் மிக்க அவரது மனைவியாரும் கண்டு பன்முறை பணிந்து போற்றினார்கள். அருகில் இருந்தவர்களும் தொழுதனர்.

''வென்ற ஐம்புலனால் மிக்கீர்! என்றும் இந்த இளமை நீங்காது. நம் அருகில் இருப்பீர்களாக'' என்று அருள் புரிந்து எழுந்தருளினார் சிவபெருமான்.

உபமன்னியு பக்திவிலாசத்தில் நாய னார் இன்ப வேட்கை சிறிதுமின்றிப் பக்தி மாத்திரமே பூண்டிருந்தாராயின் அம்மையின் ஆணை கேட்ட மாத்திரத் தில், ''சட்டி சுட்டது. கை விட்டது'' என்று பெண்ணாசையை விட்டிருக்க லாம். அவ்வாறு ஆசையைத் துறப் பது அவருக்குப் பெருமையாகாது. பசியில்லாத ஒருவனை நோக்கி, 'இந்த அன்னத்தை அருந்தாதே' என்று ஆணையிட்டால், அவனுக்கு அது சிரமமாகுமா? மிகப் பசித்த ஒருவனை நோக்கி ஆணையிடும்போது, அவன் அந்த ஆணைக்குக் கட்டுப்பட்டு உணவை வெறுத்திருப்பதே பெருமை யும் அருமையும் ஆகும். திருநீலகண்ட நாயனார் திருவினும் உருவின் மிக்க மனைவி இருந்தும்கூட ஒரு பரத்தையை விரும்பினார். அவருடைய மனம் காதல் என்னும் புயலினால் அலைந்தது: அதனால் பரத்தையை அணைந்து வந்தார்; தவறு செய்தார். அந்தத் தவறு செய்த தால் தானே வாழ்நாள் முழுவதும் பெண்ணலமுறாது நிற்கும் தன்மை ஏற்பட்டது? அல்லாமலும் அவருக்கு இன்பத் துறையில் அளவற்ற வேக மிருந்தது. ஆனால் அதனினும் கோடி மடங்கு திருநீலகண்டத்தின் மீது பக்தியின் வேகம் இருந்தது. ஆண்ட வன் மீது இருந்த அன்பு வேகம் இன்ப வேகத்தை வென்றது!

இவரைச் சேக்கிழார் பெருமான், ''பேதியா ஆணை கேட்ட பெரியவர்'' என்று கூறுகின்றார். திருநீலகண்டரைப் போல் புலன்களை வென்றவர் ஐந்து கண்டங்களிலும் இல்லை. இறைவரும் அவரை, ''வென்ற ஐம்புலனால் மிக்கீர்'' என்று அழைத்து விட்டார்!

திருநீலகண்ட நாயனார் தமது அன்பின் மிக்க மனைவியாருடன் என் றும் அகலாத இளமை பெற்று, சிவ லோகமெய்திப் பேரானந்தப் பெருவாழ் வில் இன்பமுற்றார்.

திருத்தொண்டத் தொகையில் முதலாவதாகப் புகழப் பெறும் பெற்றி திருநீலகண்ட நாயனாருக்கே அமைந் தது. தில்லைவாழ் அந்தணர் தொகை யடியாராவார். தனியடியார் அறுபத்து மூவரில் முதலில் நிற்பவர் திருநீல கண்டரே. அன்றியும் ''தில்லைவாழந்த ணர்'' என்பது இறைவர் திருவாக்கு. நம்பியாரூரர் அடுத்து வணங்கியது இவரையே.

நாயனாருடைய மனைவியார் விழுமிய கற்புடையவர்; பிறனை மருவிய நாயகியை நாயகன் தீண்டாது விலக்கு வது போல், பிற பெண்ணை மருவிய நாயகனை நாயகியும் தீண்டாள். இத னால் பெண்ணுரிமை இனிது விளங்கும்.

மனைவியின் சிறுமையைப் பறை சாற்றி மகிழும் ஆடவரும், கணவ னது கொடுமையைத் தூற்றி இகழும் மகளிரும் இவர்கள் தங்களது ஆணைகளை இரகசியமாகக் காத்த பெருமையை எண்ணிப் பார்க்க வேண்டும்.

பட்டினத்துச் சுவாமிகள் மூன்று நாயன்மார்களை எடுத்துப் பாராட்டி னார். பிள்ளைக் கறி படைத்த சிறுத் தொண்டர், மனைவியிடம் துறவு காத்த நீலகண்டர், கண்ணை எடுத்தப்பிய கண்ணப்பர் ஆகிய மூவரைத்தான். அவர்களுள் நடுநாயகமாக அமைந்தவர் இவரே எனின் இவரது அருமையை என்னென்பது?

**(தொடரும்)**

ரா. கணபதி எழுதும்

# ஹர ஹர சங்கர

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி
காமகோடி சங்கராசாரிய
ஸ்வாமிகளின்
திவ்விய சரிதம்

ஆகஸ்ட் 7ந் தேதி
இதழில் ஆரம்பமாகிறது



# கல்கி

வெள்ளிவிழா
பரிசுத் திட்டம்

ரூ 10,000

முதல் பரிசு நாவல்

ஆகஸ்டு 7ந் இதழில்
ஆரம்பமாகிறது

இதே விசேஷ இதழில்

ரூ 1,000

முதல் பரிசுச் சிறுகதை
மற்றும் பல புதிய அம்சங்கள்.

இரண்டாவது, மூன்றாவது பரிசு பெற்ற
சிறுகதைகள் ஆகஸ்டு 14ந் இதழிலிருந்து
தொடர்ந்து வெளிவரும்.

## "கடிப்பது அல்லவே !"



ஆச்சாரிய க்ஷிதி மோகன் சென், சாந்திநிகேதனில் இராமதாஸ் பற்றிப் பிரசங்கங்கள் செய்து கொண்டிருந்தார். ஒருநாள் அவருக்குப் பல் வலி ஏற்பட்டது. அதனால் பிரசங்கம் நிகழ்த்தவில்லை. எனவே பலர் வந்து 'ஏன் இன்று பிரசங்கம் இல்லை?' என்று நச்சரிக்க ஆரம்பித்தனர். அவர்களில் ஒருவர் குருதேவ் ரவீந்திர நாதர் ஆவார்.

அவர் கேட்டார்: "ஏன் இன்று பிரசங்கம் இல்லை?"

"எனக்குப் பல்வலி, அதனால் முடியவில்லை." இது க்ஷிதி பாபுவின் பதிலாகும்.

இதைக் கேட்டதும் ரவீந்திரநாத் சிரித்துக் கொண்டே சொன்னார்: "உங்களுக்கு வேலை-பிரசங்கம் செய்வதே தவிரப் பிரசங்கம் கேட்க வந்தவரைக் கடிப்பது அல்லவே!" என்றார்.

- அடந்தை பாண்டியன்



"இந்தப் பையன், சீடை என்று எண்ணி, மண் கோலி உருண்டையை எடுத்துத் தின்று விட்டான்....!"

"ஐயையோ! அப்புறம்......?"

"அப்புறம் என்ன, அதிலேயிருந்து 'டிப'னுக்குக் கோலி உருண்டை தான் வேணுமென்கிறான்!"

— சா. உடையார்

கோடிட்ட இடங்களைப் பூர்த்தி செய்க:

(1) ஆங்கில மொழியின் வயது ——— ஆண்டுகள்.
(2) நிலக்கரி, காற்று, நீர் முதலியவைகளை இரசாயன முறையில் சேர்த்துத் தயாரிக்கும் பொருள் ———
(3) ஒரு தலைமுறை என்பது ——— ஆண்டுகள்.
(4) மணியார்டரில் ——— ரூபாய்க்கு மேல் அனுப்ப முடியாது.

- வேங்கடராமன்

விடைகள்: 1. தொள்ளாயிரத்து ஐந்து. 2. நைலான். 3. முப்பது. 4. அறுநூறு.

## "வீட்டிலும் உள்ளன !"



ஒரு 'பஸ் ஸ்டாப்பில் பஸ் வந்து நின்றதும், மங்கை ஒருத்தி தனது ஐந்தாறு குழந்தைகளுடன் பஸ்ஸில் ஏறலானாள். குழந்தைகளும் முண்டியடித்துக் கொண்டன.

"தயவுசெய்து இவைகளைக் கொஞ்சம் தூக்கிச் சீட்டில் உட்கார வையேன்" என்று கண்டக்டரிடம் அந்தப் பெண்மணி கேட்கவும், அதன்படியே கண்டக்டரும் செய்தான்.

பிறகு, 'டிக்கட் ப்ளீஸ்' என்றான்.

"இந்தாப்பா, இந்தக் குழந்தையைக் கொஞ்சம் பிடித்துக் கொள், காசு எடுத்துக் கொடுக்கிறேன்" என்று சொன்னாள் அப்பெண்மணி.

"ஏனம்மா, சில குழந்தைகளை வீட்டிலேயே விட்டு விட்டு வந்திருக்கக் கூடாதா?" என்று கண்டக்டர் அலுத்துக் கொண்டான்.

"வீட்டிலும் சில குழந்தைகளை விட்டுவிட்டுத்தான் வந்திருக்கிறேன்" என்றாள் அந்தப் பெண்மணி நிதானமாக.

— ஆறு. சீனிவாசன் ஆதாரம்: 'காரவெட்'



## புரட்சிகரமான சீர்திருத்தம்

சிகரெட் விளம்பரங்கள் வெளியிடுவதில் புரட்சிகரமான சீர்திருத்தங்களைச் செய்ய, மேற்கு ஜெர்மனியில் சிகரெட் தயாரிப்புக் கம்பெனிகள் ஒன்று கூடி முடிவு செய்துள்ளன. இளைஞர்களை சிகரெட் புகைக்கத் தூண்டும் வகையில் இனி விளம்பரங்கள் வராது. பள்ளிப் பத்திரிகைகள், இளைஞர் பத்திரிகைகள் ஆகியவற்றிலும் இனி சிகரெட் விளம்பரங்கள் தலைகாட்டாது. இளைஞர்கள் போற்றிப் புகழ்ந்து கொண்டாடுகிற நடிகர்கள் போன்றவர்கள் சிகரெட் பிடிக்கும் விளம்பரங்களும் இனி வெளி வராது.

நிறைய சிகரெட் குடிக்கத் தூண்டும் வகையிலோ, 'புகையை இழுக்க இழுக்க இன்பம்' என்ற ரீதியிலோ விளம்பரங்கள் இருக்காது. சிகரெட் குடிப்பதால் உடல்நலத்திற்குத் தீங்கு நேராது என்று சொல்ல மாட்டார்கள். ஜெர்மன் சுகாதார அமைச்சுத் துறையின் இசைவுடன் சிகரெட் கம்பெனிகள் இவ்விதம் உடன்பாடு செய்து கொண்டுள்ளன. இதை மீறினால் பத்தரை இலட்சம் ரூபாய்வரை அபராதம் விதிக்கப்படலாம்.

- யூ. பி. என்.

## இரண்டு கால் ஓட்டு



சமுதாய வாழ்வை உருவாக்குவதற்குச் சட்டம் ஒரு சக்திவாய்ந்த சாதனம். ஆனால் சட்டம் செங்கல்லைப் போன்றது. செங்கல்லை ஒழுங்காக அடுக்கி வீடு கட்டியும் வாழலாம். அதே கல்லைப் பிறர்மீது வீசவும் பயன்படுத்தலாம்.

அடுத்த தேர்தலைக் கவனத்திற் கொண்டு சட்டமியற்றும் போக்கு மாறி, அடுத்த தலைமுறையின் நன்மையைக் கருத்தில் கொண்டு சட்டமியற்ற வேண்டும். மனிதன் இரண்டு கால் முளைத்த ஓட்டு அல்ல.

—இந்திய அட்டர்னி ஜெனரல் திரு நி. கே. தப்தரி.
தகவல்: குத்தாலம் வீ. சம்பந்தன்.

## எங்கள் குடும்பத்திலும் உண்டே!



எடின்பரோ கோமகன் ஒருசமயம் ஆஸ்திரேலியாவுக்கு வருகை தந்திருந்தார். ஒரு வைபவத்தில் முக்கியமான நபர்கள் அவருக்கு அறிமுகம் செய்து வைக்கப்பட்டனர்.

அப்பொழுது ஒருவர், "இவர் டாக்டர் ராபின்சன் அம்மையார். அவர் இவருடைய கணவர்" என்று ஒரு தம்பதியை அறிமுகம் செய்து வைத்தார். அவர் கணவனை விட்டு விட்டு மனைவியை முதலில் அறிமுகம் செய்து வைத்தது கோமகனுக்கு வியப்பாக இருந்தது. அவர் இப்படி வியப்படைந்ததைப் புரிந்து கொண்ட அந்த அம்மையாரின் கணவர், ஓர் அசட்டுப் புன்னகையுடன் கோமகனிடம் விளக்கம் சொன்னார்: "என் மனைவி தத்துவத் துறையில் ஒரு டாக்டர். நான் ஒன்றும் அப்படியில்லை. அதனால் தான் அவள் என்னைவிட முக்கியமானவளாகக் கருதப்படுகிறாள்......"

"அப்படியா விஷயம்? இது மாதிரி சங்கடம் எங்கள் குடும்பத்திலும் உண்டே....!" என்றார் எலிசபெத் ராணியின் கணவரான எடின்பரோ கோமகன்.

-- பிரம்மசாரி

## உலகிலேயே மிகச் சிறிய பள்ளிக்கூடம்!



உலகின் மிகச் சிறிய பள்ளிக்கூடம் எங்கு இருக்கிறது தெரியுமா? ஜெர்மனியிலுள்ள 'குரோட்' என்னும் தீவில்தான் இருக்கிறது. இதற்கு 'சில்வியா' என்னும் 65 வயது அம்மையார்தான் ஆசிரியை, தலைமை ஆசிரியை எல்லாம். இந்தப் பள்ளிக்கூடத்தில் எத்தனை பேர் படிக்கிறார்கள் தெரியுமா? ஒரே ஒரு மாணவன். ஆம், ஏழு வயது நிரம்பிய வால்கர் மம்ஸன் என்னும் ஒரே ஒரு மாணவன்தான். அடுத்த வருடம் இந்தப் பள்ளிக்கூடத்தில் படிப்பவர்களின் எண்ணிக்கை இரு மடங்காக, அதாவது இரண்டு பேராக அதிகரிக்குமாம். எப்படியெனில் வால்கருடைய தங்கையும் அடுத்த வருடம் பள்ளிக்கூடத்தில் சேருகிறாள். இந்தத் தீவின் ஜனத்தொகை என்ன தெரியுமா? இருபது பேர்.

— தகவல்: ஸ்ரீதரன்



உங்கள் குழந்தைக்கு புட்டிப் பால் குடிப்பது மகிழ்ச்சிகரமாக்க

# எவர்ஃப்ளோ ஃபீடர்

எவர்ஃப்ளோ குழந்தைக்கு திருப்திகரமானது. இந்த சூப்பானின் அமைப்பு குழந்தைக்குத் தாயின் நினைவையே தரும். அது மிருதுவாக இருக்கிறது. ஆகவே இது குழந்தைக்குத் தாய்ப்பாலைக் குடிக்கும் சுகத்தை அளிக்கிறது.

**எவர்ஃப்ளோ ஆரோக்கியமானது, அபாயமற்றது.** ஒரே சீராக பால் வடிவதற்காக இது பிரத்தியேக டிசைனில் செய்யப்பட்டது. குழந்தை அதிகமாக காற்றை விழுங்குவதால் அஜீரணம் உண்டாவதை இது தடுக்கிறது. படகின் வடிவத்திலுள்ள புட்டியை உபயோகிக்கும் போது இந்த உபாதை உண்டாவது சகஜம்.

**எவர்ஃப்ளோ சௌகரியமானது.** இதன் வாய் அகலமாக இருப்பதால் பால் நிரப்பவும் கொதிக்கும் ஜலத்தில் போட்டு சுத்தம் செய்யவும் வசதியாக இருக்கிறது. எவர்ஃப்ளோ, வேலைபார்க்கும் தாய்மார்களுக்கு விசேஷமாக சௌகரியமானது. பிரயாணத்துக்கும் இது மிகவும் ஏற்றது. இதிலிருந்து பால் சிறிதுகூட ஒழுகாது.

**எவர்ஃப்ளோ சிக்கனமானது.** முற்றிலும் ஆடோமாடிக் முறையில் தயாரிக்கப்படும் ஒரே ஒரு ஃபீடர் இது மட்டுமே. இதன் பனிக்கட்டிபோல் தெளிவான கண்ணாடி அதிகநாள் நீடிக்கிறது மற்றும் ஜலத்தில் போட்டு கொதிக்க வைக்கும் போது புட்டி உடைந்து போவது மிகவும் குறைகிறது.




உங்கள் குழந்தைக்குத் தாய்ப்பாலைக் குடிப்பது போன்ற மகிழ்ச்சியை அளிக்க

**எவர்ஃப்ளோ ஃபீடர்** உபயோகியுங்கள்

வியாபார சம்பந்தமான விவரங்களுக்கு எழுதுங்கள் :

எவர்ஃப்ளோ ட்ரேடிங் கோ.

தபால் பெட்டி எண் 1292, பம்பாய்-1

ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ் :

செட்டார் மார்க்கெட்டிங் கம்பெனி லிமிடெட்

தபால் பெட்டி எண் 644, பம்பாய்-1

JWT-ET-4093




# எங்க பாப்பா!



குழந்தைகளை முக்கிய பாத்திரங்களாக வைத்துத் தயாரிக்கப்படும் படங்களை நம் நாட்டில் இல்லை என்ற குறையை நாம் மறுப்பதற்கில்லை. அப்படியே குழந்தைகளை வைத்து ஒரு படம் தயாரித்தாலும் அது பெரியவர்கள் கதையாகத்தான் மாறி விடுகிறது.

பத்மினி பிக்சர்ஸாரின் ''எங்க பாப்பா''வும் அந்த வகையைச் சேர்ந்ததுதான். மங்களம் பிறந்தவுடன் தந்தை விபத்தில் இறக்கிறான்; தாய் அந்த அதிர்ச்சியில் இறந்து விடுகிறாள். பச்சைக் குழந்தையான மங்களத்துக்கு அவள் அண்ணன் சங்கர்தான் ஆதரவு. சிறுவனான சங்கரையும், மங்களத்தையும் அவர்களுடைய அத்தை அழைத்துப் போய் வளர்க்கிறாள். சாதாரணமாக இப்படி ஆரம்பிக்கும் படங்களில், இடைவேளைக்கு முன்னால் வரும் குழந்தை – இடைவேளைக்குப் பின்னர் கதாநாயகியாக வளர்ந்து, சொல்லொணாத் துயரங்களுக்கு உள்ளாகிக் கடைசியில் காதலித்தவனையே கரம் பிடிப்பாள். ஆனால் இந்தப் படத்தில், குழந்தை மங்களம் கடைசி வரையில் குழந்தையாகவே இருக்கிறாள். அவள் அண்ணன் சங்கர்தான் ஒரு பெண்ணைக் காதலித்து அவளையே மணந்து கொள்கிறான்.

பிறக்கும் போதே துரதிர்ஷ்டத்தோடு பிறந்தவள் என்று ஒரு பெண் குழந்தையை மூட நம்பிக்கை காரணமாகக் கொடுமைப் படுத்துவது துளிக்கூட நன்றாக இல்லை. முதலில் தன் தங்கையிடம் உயிரையே வைத்திருந்த அண்ணன்கூடப் பிறகு அவளை வெறுக்க ஆரம்பிப்பது பொருத்தமாக இல்லை. பாத்திரப் படைப்பையே மாற்றி விடுகிறது. பேபி ஷகிலா தன் பாத்திரத்தை உணர்ந்து முக பாவங்களை அதிஅற்புதமாக மாற்றிக் கொண்டு அருமையாய் நடித்திருக்கிறாள்.

கல்லூரி மாணவன் சங்கராக வரும் ரவிச்சந்திரன் அளவுக்கு மீறிக் குதித்துக் கொம்மாளமடிக்கிறார். 'கும் கும்' என்று குத்துச் சண்டை போடுகிறார் – அவ்வளவுதான். அந்தப் பகுதி 'போர்' அடிக்கிறது.

சங்கரின் காதலியாக வரும் பாரதி எடுப்பான எழிலுடன் தோன்றி ரவிச்சந்திரனுடன் ஆட்டம் போடுகிறார். பாத்திரத்தை உணர்ந்து தத்ரூபமாக நடித்திருக்கிறார் என்று சொல்ல முடியவில்லையே!

தங்கவேலு, நாகேஷ் மனோரமா ஆகிய மூவரும் சேர்ந்து விட்டால் நகைச்சுவைக்குக் கேட்பானேன்! சக்கைப் போடு போட்டிருக்கிறார்கள். மனைவியின் அன்பைப் பெறக் கணவன் விளையாட்டாக யாருக்கோ காதல் கடிதம் எழுதப் போக அது விபரீதமாகி விட்டதே! அந்தத் தமாஷ் நன்றாயிருக்கிறது.

கண்ணீர் விடும் பாத்திரம் என்றால் எம். வி. ராஜம்மாவுக்குக் கைவந்த பாத்திரமாயிற்றே? சும்மா விடுவாரா? மாஸ்டர் ஸ்ரீதரின் நடிப்பு உள்ளத்தைத் தொடுகிறது. விசுவநாதன் - ராமமூர்த்தி இருவரும் பிரிந்த பின்பு இசையமைப்பின் இனிமையும் பிரிந்து விட்டது! விசுவநாதனின் இசையமைப்புடன் பாடல்கள் இருந்தும் செவியை நிரப்பவில்லை.

''எங்க பாப்பா'' எல்லோரையும் மகிழ்விக்க முயன்றும், இதயத்தைத் தொட முடியவில்லை.



சமீபத்தில் நான் மத்திய அரசாங்க மந்திரியொருவரைப் பார்ப்பதற்காகச் சென்றிருந்தேன். என்னைக் கண்டதும், நான் வந்த காரியம் என்னவென்றுகூடக் கேட்காமல், அவர், ''உங்களுக்கு டைப் அடிக்கத் தெரியாதே!'' என்று கேட்டார்.

''என் வாழ்க்கையையே நான் டைப்பிஸ்டாகத்தானே தொடங்கினேன்! இப்போதுதானே கொஞ்ச நாட்களாகத் தொழில் நடத்துகிறேன் !'' என்றேன்.

''அப்படியானால் மிகவும் நல்லதாகப் போயிற்று......ஆமாம், உங்களுக்குச் சுருக்கெழுத்து தெரியுமா?'' என்று கேட்டார்.

''சுருக்கெழுத்துதான் கற்றுக் கொள்ளவில்லை. அந்தக் காலத்தில் சீக்கிரமே ஏவது ஒரு வேலை கிடைத்தால்தான்




# மந்திரிகளுக்கு

என் குடும்பம் பிழைக்கும் என்ற நிலை இருக்கவே அவசரம், அவசரமாக டைப் அடிக்கக் கற்று வேலைக்குப் போனேன்.''

''பரவாயில்லை. நான் ஒரு கடிதம் சொல்கிறேன். அதை எழுதிக் கொள்ளும். பிறகு திருத்தித் தருகிறேன். பிறகு அதைத் தாங்கள் டைப் அடிக்கலாம் '' என்றார்.

''ஏன், இன்று உங்கள் டைப்பிஸ்டுக்கு விடுமுறையா ?'' என்று கேட்டேன்.

''விடுமுறையாவது ! நீங்கள் இங்கே உள்ளே நுழைவதற்கு முன்னர் ஒரு பெரிய கூட்டம் ஆர்ப்பாட்டம் பண்ணிக் கொண்டிருந்ததைப் பார்க்கவில்லையா ?''

''பார்த்தேன்.''

''அந்த ஆர்ப்பாட்டக்காரர்களில் இருவர் என் டைப்பிஸ்டுகள், ஐவர் என்னுடைய குமாஸ்தாக்கள்.''

''ஏன் அவர்கள் ஆர்ப்பாட்டக்காரர்களோடு சேர்ந்து கூச்சல் போட்டுக் கொண்டிருக்கிறார்கள் ?''

''ஏன்! அவர்களை நான் வேலையை விட்டு நீக்கி விட்டதால்தான். கூச்சல் போட்டுக் கொண்டிருக்கும் அத்தனை பேருமே மந்திரிகளின் குமாஸ்தாக்களும், டைப்பிஸ்டுகளும் தான். அத்தனை பேரும் வேலையை விட்டு நீக்கப்பட்டார்கள்.''

''எதற்காக அவர்களை வேலையை விட்டு நீக்கினீர்கள் ?''

''என்னய்யா! நீங்கள் பத்திரிகையையே படிப்பதில்லையா ! சிக்கனத்தை முன்னிட்டு மந்திரிகள் தங்கள் குமாஸ்தாக்களையும், டைப்பிஸ்டுகளையும் குறைத்துக் கொள்ள வேண்டும் என்று உத்தரவு வந்திருக்கிறதே, பார்க்க வில்லையா ?''

''சரி, சொல்லுங்கள், கடிதத்தை எழுதிக் கொள்கிறேன்'' என்று சொல்ல, அவர் கடிதத்தைச் சொன்னார். அதை நான் எழுத, பிறகு அவர் அதைத் திருத்திக் கொடுத்தார். பிறகு நான் அதை டைப் அடித்தேன். பிறகு நான் வந்த காரியத்தைச் சொல்ல ஆரம்பித்தேன்.

''உங்கள் காரியம் இருக்கட்டும், இப்பொழுது நீங்கள் எதில் வந்தீர்கள்? உங்கள் காரிலா, அல்லது டாக்ஸியிலா?'' என்று கேட்டார்.

''டாக்ஸியில்தான் வந்தேன். டாக்ஸிக் காரைக்கூட வாசலில் நிறுத்தி வைத்துவிட்டுத்தான் வந்திருக்கிறேன்.''

''அப்படியானால் மிகவும் நல்லதாயிற்று. கொஞ்சம் எனக்கு 'உத்தியோக் பவன்' வரையில் போக வேண்டியிருக்கிறது. ஆகவே, சற்று உங்கள் டாக்ஸியில் போய்விட்டுத் திரும்பி வந்து விடலாம். அப்புறம் உங்கள் காரியத்தைக் கவனிக்கிறேன்'' என்றார்.

''ஆமாம்! உங்கள் கார் என்னவாயிற்று?''

''அதுவா ! அதை ஷெட்டில் நிறுத்தி வைத்திருக்கிறேன்.''

''ஏன், ஏதாவது பழுது பார்க்க வேண்டுமா ?''

''நேற்றுத்தானே இரண்டாயிரம் செலவாக்கிப் பிறகு, பழுது பார்க்கப்பட்டு, அது நல்ல நிலையில் திரும்பியிருக்கிறது !''

''பின் ஏன் அதைக் கொண்டு வரவில்லை ?''

''அதுதான் சொன்னேனே, நீங்கள் பத்திரிகையைச் சரியாகப் படிப்பதில்லையென்று. சிக்கனத்தை முன்னிட்டு வெளிநாட்டிலிருந்து வரவழைக்கப்பட்ட கார்களை உபயோகிக்கக் கூடாது என்று மந்திரிகளாகிய எங்களுக்கு உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறதே. அது தெரியாதா? அதற்காகத்தான் காரை ஷெட்டில் வைத்துவிட்டேன். நான் ஒரு சின்ன பியட் கார் வாங்கிக் கொள்ளலாம். ஆனால் அது இன்னும் வரவில்லை. அதனால்தான் உங்களுடைய டாக்ஸியில் போய்விட்டு வந்து விடலாம் என்று சொன்னேன்.''

''அப்படிப் பார்த்தால் தாங்கள் காரே வைத்துக் கொள்ள வேண்டாம் என்று

தோன்றுகிறதே! என்னைப் போல் எத்தனையோ பேர் தங்களைத் தேடி வந்து கொண்டேயிருப்பார்கள். அவர்கள் கார்களையோ, டாக்ஸிகளையோ தாங்கள் பயன்படுத்திக் கொள்ளலாமே!''

''ஏன், இதில் என்ன தவறு இருக்கிறது! என் மாமனார் கல்கத்தாவில் பெரிய வக்கீல் என்று தாங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். லட்சம் லட்சமாகச் சம்பாதிக்கிறார். வயது எழுபத்தைந்து ஆகிவிட்டது. இருந்தும் தம் வாழ்க்கையில் ஒரு கார்கூட அவர் வாங்கியதில்லை. அதற்காகக் காரில் போகாமலிருக்கிறார் என்று நினைக்கிறீர்களா! எப்போதும் கட்சிக்காரன் காரில்தான் போய்க் கொண்டிருப்பார். நாங்கள் கூட வேடிக்கையாக அவரைப் பற்றிச் சொல்வோம், ''வாங்கினவனுக்கு ஒரு கார், வாங்காதவனுக்குப் பல கார்'' என்று. ஒரு காரில் போனால், அதே காரில்தான் திரும்புவார் என்று சொல்ல முடியாது. இதனால் ஏற்பட்ட நன்மை என்னவென்றால், என் மச்சினன்களுக்கு உலகத்திலுள்ள அத்தனை கார்களைப் பற்றியும் தெரியும். ஒரு காரைப் பார்த்தவுடனேயே அது

வர முடியுமா! ஏனெனில், சிக்கனத்தை முன்னிட்டு, நான் இந்தக் கடைநிலை ஊழியர்களையும் குறைத்து விட்டேன்'' என்றார்.

''ஆமாம், அவர்கள் என்னை நம்பி பைலைத் தர வேண்டுமே!''

''தருவதற்கு யார் இருக்கிறார்கள்! அங்குள்ள குமாஸ்தாக்களைத்தான் சிக்கனத்தை முன்னிட்டு நீக்கிவிட்டேனே! ஆகவே, தாங்கள்தான் போய் அந்த பைல் எங்கிருக்கிறது என்று கண்டு பிடிக்கவேண்டும். போன வாரம்தான் அந்தப் பைலைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது தங்களைப் போல என்னைப் பார்க்க வந்த ஒருவரைத்தான் அந்தப் 'பைலை'க் கொண்டு போய் வைக்கும்படி சொன்னேன். அவர் அகர வரிசையில்தான் பைலை வைத்திருப்பார் என்று நினைக்கிறேன். இல்லை, இல்லை. அகர




# ஒரு யோசனை

## நாடோடி

என்ன 'மேக்' என்று அவர்கள் சொல்லி விடுவார்கள்.''

''நல்ல வேளையாக உங்கள் மாமனார் இந்த நாட்டின் பிரதம மந்திரியாகவோ, ஜனாதிபதியாகவோ வரவில்லை'' என்றேன்.

''வந்திருந்தால் ...?''

''வந்திருந்தால், மந்திரிகள் காரே வைத்துக் கொள்ளக் கூடாது. தங்களைத் தேடிக் கொண்டு, யார் வருகிறார்களோ, அவர்கள் காரில்தான் செல்ல வேண்டும் என்று உத்தரவு போட்டு விடுவார்.....'' என்றேன்.

மந்திரி சிரித்தார். என் டாக்ஸியில் ஏறிக் கொண்டு, உத்தியோக் பவனுக்குச் சென்று விட்டுத் திரும்பினார்.

திரும்பியதும் நான் வந்த காரியத்தைச் சொன்னேன்.

''அப்படியா! நீங்கள் ஒரு காரியம் செய்ய முடியுமா?'' என்று கேட்டார்.

''என்ன?''

''இந்தக் கட்டடத்தில் நான்காவது மாடியில் ரூம் நெ. 287ல்தான் தங்கள் பைல் இருக்கிறது. அதைக் கொஞ்சம் வாங்கிக் கொண்டு

வரிசையில் வைத்திருக்க மாட்டார். தங்களுக்கு ஒரு நம்பர் கொடுத்தோமே, ஞாபகம் இருக்கிறதா?''

''இருக்கிறது. ஏ. பி. ஸி. டி. 65703-64 எக்ஸ் ஒய் இஜட்.''

''சரி, இதை எங்கு எப்படி வைத்திருப்பார்கள் என்று என்னாலேயே சொல்ல முடியாது. ஆகவே, எதற்கும் போய்ப் பார்த்து விட்டுத்தான் வாருங்களேன்.''

நான் பத்தே நிமிஷங்களில் பைலோடு திரும்பியதும் மந்திரி ஆச்சரியப்பட்டார்.

''இத்தனை சீக்கிரம் எப்படிக் கண்டு பிடித்தீர்!''

''அதைப் பற்றித் தங்களுக்கு என்ன! பைல் வந்ததா, இல்லையா?''

''இல்லை, சொல்லுமேன்! ஏனெனில், தங்களைப் போல மற்றவர்களையும் நான் பைலுக்கு அனுப்பியாக வேண்டுமே! அதற்காகக் கேட்டேன்.''

"சரி, சொல்லுகிறேன். வாசலில் ஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருக்கிறானே, உங்கள் குமாஸ்தா ! அவனிடம் ஒரு சின்ன நோட்டை நீட்டினேன். அவன் பைலை எடுத்துக் கொடுத்து விட்டான்."

"ஏது. அவர்கள் பைலை எடுத்துக் கொடுத்தே பிழைத்துக் கொள்ளலாம் போல் இருக்கிறதே !"

"அப்படித்தான் அவர்கள் செய்வதாக உத்தேசம் செய்திருக்கிறார்கள்."

"அப்படியானால் அவர்களை வேலையை விட்டுத் தள்ள வேண்டிய அவசியமே இல்லை! தங்களைப் போலக் காரியார்த்தமாக மந்திரிகளைப் பார்க்க வருகிறவர்களிடமிருந்தே அவர்கள் பணம் வாங்கிக் கொள்ளலாம், சம்பளம் கிடையாது என்று ஏற்பாடு செய்யலாம் போலிருக்கிறதே !"

"செய்யலாம், ஆனால் அவர்கள் ஒப்புக் கொள்ள மாட்டார்கள்."

"ஏன் ஒப்புக் கொள்ள மாட்டார்கள்!"

"ஏனென்றால், இத்தனை நாட்களும் அந்தக் காரியத்தைத்தான் அவர்கள் செய்துகொண்டிருந்தார்கள். அதோடு சம்பளமும் அவர்களுக்கு வந்து கொண்டிருந்தது."

"சரி, எப்படியாவது போகட்டும்! இப்பொழுது உங்கள் பைல் விஷயமாக எனக்குச் சென்னை சர்க்காரிடமிருந்து ஒரு தகவல் வரவேண்டியிருக்கிறதே !"

"ஏன், ஒரு டிரங்கால் போடுகிறது தானே !"

"ஊஹூம், சிக்கனத்தை முன்னிட்டு டிரங்கால்களையும், தந்திகளையும் குறைத்துக் கொள்ள வேண்டும் என்று உத்தரவு. ஆனால் என்ன டிரங்கால் போட்டாலும் அவர்கள் போன் மூலம் கூறும் தகவலை அவர்கள் கடிதம் மூலம் ஊர்ஜிதப்படுத்தினால்தான் நாங்கள் நடவடிக்கை எடுத்துக் கொள்ள முடியும். ஆகவே, நான் கடிதம் எழுதுகிறேன்."

"சரி, உங்கள் இஷ்டம்."

"சரி, நீங்கள் போவதற்குமுன் இந்த ஒரு கடிதத்தை எழுதி டைப் அடித்துக் கொடுத்துவிட்டுப் போங்களேன்! சென்னையின் பக்கத்தில் உள்ள ஒரு கிராமத்தில் ஏதோ ஒரு சிறு பள்ளிக்கூடத்தைத் திறக்க வேண்டுமாம். இப்பொழுது சுற்றுப் பிரயாணங்களைக் குறைத்துக் கொள்ள வேண்டும் என்று உத்தரவு வந்திருப்பதால், வருவதற்கில்லை என்று ஒரு கடிதம் டைப் அடித்துத் தபால் காரியாலயம் பக்கத்தில் தான் இருக்கிறது. அதில் போட்டு விட்டுப் போங்கள்!" என்றார்.

ஃ ஃ ஃ

"என்ன பத்திரிகையை வைத்துக் கொண்டே தூங்கி வழிகிறீர்கள்?" என்று கேட்டாள் என் மனைவி சரசு !

மத்திய சர்க்காரில் மந்திரிகள் சிக்கனமாக நடந்து கொள்ள வேண்டிய விதிகள் வெளியிட்டிருப்பதைப் படித்துக்கொண்டே கண் அயர்ந்து விட்டேன் என்று தெரிந்து கொண்டேன்.

ஆனால் நான் கண்டது பகல் கனவானாலும், மந்திரிகள் இதையே ஒரு யோசனையாகக் கொண்டு சமாளித்துக் கொள்ளலாம் என்று யோசனை கூற விரும்புகிறேன் !

ஐயா ஒரு படம் எடுக்கப் போறரு
ஐயோ பாவம்
ஹீரோ! நம்ப குண்டப்பாதான்!
ஐயோ பாவம்
ஹீரோயின்.... தண்டம்மா..!
ஐயோ பாவம்
கதை,வசனம்,டைரக்ஷன் ஐயாதான்..!
ஐயோ பாவம்!
அதுசரி! படத்தின் பெயர் என்ன?
?
ஐயோ பாவம்!
?

# லக்மே டால்க் மட்டுமே அளிக்கும்

- நினைவில் நிலைக்கும் நாலு இனிய வாசனைகள்
- மிக மென்மையான பவுடர்




## புது மலர்ச்சி நீடிக்க ஒரு புதிய முறை!

தேர்ந்தெடுக்க வகைவகையான வாசனைகள், ஒவ்வொன்றுமே மென்மையான பவுடருடன் இணைந்து குலவும் மேன்மை - இவைதாம் லக்மே டால்க் சிறந்து விளங்குவதன் ரகசியம். அதன் மென்மையும், அதிகம் உறிஞ்சும் சக்தியும் அபாரம்...கடும் உழைப்பினூடே நாள் பூராவும் உங்களைக் குளுமையாகவும், புத்துணர்ச்சியுடனும் இருத்துகிறது!

லக்மே டால்க் – மிக மென்மையான பவுடர்... உங்களுக்கு ஏற்ற ஒரே டால்க்!

**லக்மே டால்க்**

லேவண்டர்
ஸாண்டல்
நிர்வாண்
வெட்டிவர்

Bensons/I-LK 6-TAM

# கோலாகலமாக அணியுங்கள் பிரிண்டுகளை!

# மபத்லால் க்ரூப்

## பிரிண்டெட் பாப்ளின்கள்

தவிர, 'டெரீன்'/காட்டன்,
டெபிலஸ்டு, ஃபிளெக்ஸ்டு மற்றும்
ஸ்ட்ரெச் தரங்களிலும் கிடைக்கின்றன.

இன்ப சீதமிசைக்கும்
வண்ணங்கள். கவனத்-
தைக் கவரும் கோல
நிறங்கள். எடுப்பான
கலை... கோலாகலம்...
தனிச் சிறப்பு. பரபரப்-
பூட்டும் தனியழகு.
அணிந்து பாருங்களேன்
அவற்றை!





நியு ஷோராக் (ஷோராக்) அஹமதாபாத் . நியுஷோராக், நடியாத் . ஸ்டேண்டர்ட், பம்பாய் . ஸ்டேண்டர்ட், (நியு சைனா) பம்பாய் . ஸ்டேண்டர்ட் தேவாஸ் . ஸாஸூன், பம்பாய் . ஸாஸூன் (நியு யூனியன்) பம்பாய் . ஸூரத் காட்டன், ஸூரத் . மபத்லால் பைன், நவ்ஸாரி

LPE Aiyars. M-87 TM

# பதரிநாத் சென்றோம்

ஜானகிராமசந்திரன்

பலத்த முன்னேற்பாடுகளுக்குப் பிறகு, திட்டம் போட்டிருந்தபடி நாங்கள் கோஷ்டியாகத் தில்லியிலிருந்து மஸுரி எக்ஸ்பிரஸில் கிளம்பினோம்.

ஹரித்வாரில் நாங்கள் கர்நாடகா தர்ம சாலையில் தங்கினோம். பக்த கோடிகள் பல்லாயிரக்கணக்கில் வந்து தங்கியிருந்த அந்த இடத்தில் ஒரு தெய்வீக அமைதி குடி கொண்டிருந்தது. எல்லாருக்கும் சௌகரியமான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. அன்று காலை அனைவரும் கங்கையின் புனித தீர்த்தத்தில் நீராடினோம். அன்று மாலை ரிஷிகேசம், லக்ஷ்மணஜுலா என்ற இடங்களைக் கண்டு களித்துவிட்டு, ஹரித்வாரில் கங்கையின் நீரோட்டத்தில் யாத்திரிகர்கள் தீபம் விடும் பூஜையைப் பார்த்தோம்.

மறுநாள் விடியற் காலை நான்கு மணிக்கே எழுந்து ரிஷிகேசம் சென்றோம். முன்பே ஏற்பாடு செய்து வைத்திருந்த உ. பி. ரோட் டிரான்ஸ்போர்ட் பஸ்ஸில் ஏறி உட்கார்ந்தோம். ''ரோட் க்வீன்'' என்ற அந்தப் பஸ் பெயருக்கேற்ற கம்பீரத்துடன் காட்சியளித்தது. போய் வர மொத்தம் ரூ. 1500 வாடகை பேசியிருந்தோம்.

இருபுறமும் இமயத்தின் கம்பீரத் தோற்றம். மலையைச் சுற்றிப் பாதைகள் வளைந்து வளைந்து செல்வது தெரிந்தது. மலைச் சிகரங்களுக்கிடையே கதிரவன் பொன்னிறக் கிரணங்களை அள்ளித் தெளித்து எங்களுக்குச் செப்பு ஜமுக்காளம் விரித்திருந்த விடியற் காலையில் பிரயாணம் தொடங்கிற்று.

பகல் பொழுது ஏற ஏறக் கதிரவனுடைய வெள்ளிக் கிரணங்கள் மலைகளின் மீது தவழ்ந்துவிளையாடிமின்னிப்பளபளக்கலாயின.

எங்கள் பஸ் சுற்றிச் சுற்றிச் சென்ற போது ஹரிமாலயம் என்ற கோயிலின் வெளிப்



பத்ரிநாத் ஆலயத்தின் ஆகாயத் தோற்றம். பின்புறம் பனி மூடியுள்ள மலை.

ஜோதிசுவரர் ஆலயத்திலுள்ள லிங்கம். மலர்கள் லிங்கத்தை மூடியுள்ளன.

ஜோதிர் மடத்தின் பூர்ணம்பிகா தேவி.

பிராகாரங்களை வலம் வருவதுபோல் ஒரு பிரமை ஏற்பட்டது. பத்து மணிக்குத் தேவப்ரயாக் என்ற ஸ்தலத்துக்கு வந்து சேர்ந்தோம். இங்குதான் அலகநந்தா நதியும், பாகீரதி நதியும் சங்கமமாகின்றன. இருபுறமும் மலைப் பாறைகளில் மோதிக் கொண்டு பேரிரைச்சலுடன் ஓடும் தண்ணீர் ஜில்லென்றும் ஸ்படிகம் போல் தூய்மையாகவும் இருக்கிறது. ஒரு குக்கிராமத்தின் கடை வீதி வழியே இறங்கி சங்கமத்தின் ஸ்நானகட்டத்துக்கு வந்து ஸ்நானம் செய்தோம். உடல் அசுத்தமட்டுமின்றி உள்ளத்திலிருந்த அசுத்தமும் அகன்றுவிட்டது போன்ற உணர்வு ஏற்பட்டது.

மீண்டும் மலைத் தொடர்களுக்கிடையே பயணம். கீழே அதள பாதாளத்தில் அலகநந்தா 'ஓ'வென்று கர்ஜனை புரிந்தவாறே ஓடிக் கொண்டிருந்தது. ருத்ரப்ரயாக் வந்து சேர்ந்தோம்.

அன்பு நிறைந்த அன்னையின் மடியில் குழந்தை காணும் அமைதியை நாங்கள் ருத்ர பிரயாகில் கண்டோம். மந்தாகினியும், அலகநந்தாவும் சங்கமம் ஆகும் ரம்மியமான இடம் அது. அன்று இரவை அங்கேயே கழித்தோம். அங்கு நத்ரநாத்—சாமுண்டி கோயில் ஒன்று இருக்கிறது. அதையடுத்துக் கரை புரண்டு ஓடும் நதியின் சலசல என்ற அலையோசை மலைச் சரிவைத் தாக்கி எதிரொலிக்கிறது. இந்தச் சூழ்நிலையைக் கண்டு மெய்ம்மறந்த ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாள் அக்கோயிலில் பூஜை செய்ததாகச் சொல்லுகிறார்கள்.

மறு நாள் முழுவதும் பிரயாணத்தைத் தொடர்ந்து அன்றிரவு பேலாக்குசீச்சி என்ற இடத்தை வந்தடைந்தோம். அங்கு பாதைகள் அமைக்கும் ஒரு ராணுவ முகாம் இருப்பதைக் கண்டோம். இங்கு பணிபுரிபவர்களில் பெரும்பாலோர் தென்னகத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தார்கள். அவர்கள் எங்களுக்கு வேண்டிய உபசாரங்களைச் செய்தனர்.

மறுநாள் காலையில் பேலாக் !குசிச்சியை விட்டுக் கிளம்பி ஜோதிர் மடத்துக்கு வந்து சேர்ந்தோம். இது ருத்ரப்ரயாகிலிருந்து அறுபத்தொன்பதாவது மைலில் 6,100 அடி உயரத்தில் இருக்கிறது. அங்கு ஜோதிசுவர ஸ்வாமியும், அன்னபூர்ணி வடிவத்தில் சலவைக் கல் சிலையாகப் பூர்ணும்பிகா என்ற தேவியும் கோயில் கொண்டிருக்கிறார்கள். அதன் அருகில் ஆதிசங்கர பகவத்பாதாள் தபஸ் செய்த இடம் என்றும், தோடகாசாரியார் அவரைப் பூஜித்த இடம் என்றும் ஒரு குகையைக் காட்டினார்கள். அங்கு சென்ற போது மெய் சிலிர்த்தது. ஈராயிரம் ஆண்டுகளுக்குமுன் சாட்சாத் பரமேசுவரன் மனித வடிவில் நடமாடிய மண்ணில் நாமும் நடந்து செல்கிறோம் என்று நினைக்கும் போது நாம் பெற்ற பிறவி புனிதமாகி விட்டதாகக் கருதுகிறோம்.

ஸ்ரீ ஆதிசங்கரரால் ஸ்தாபிக்கப்பட்ட ஜோதிர் மடத்தைச் சேர்ந்த பீடாதிபதி ஜகத்குரு ஸதானந்த ஸ்வாமிகளைத் தரிசித்து அவர் அருளைப் பெற்றோம். பின்னர், ஆதி சங்கரரின் பாதுகைகளைப் பூஜித்து, தோட காஷ்டத்தைச் சொல்லிப் பாத காணிக்கை

---

தேவபிரயாக் - பாகீரதி நதியும், அலகநந்தா நதியும் சங்கமமாகும் கட்டம்.

மந்தாகினியும் அலகநந்தாவும் சங்கமமாகும் புண்ணிய ஸ்தலம் ருத்ரபிரயாக். மத்திய மலை அகத்தியர் மலை என்று வழங்குகிறது.

பதரிநாத் ஆலயத்தின் முன் தோற்றம்.







யும், புஷ்பமும் சமர்ப்பித்துவிட்டுப் பிரிய மனமின்றி ஸ்வாமிகளிடம் உத்தரவு பெற்றுக் கிளம்பினோம்.

ஜோஷிர் மடத்திலிருந்து கிளம்பிய எங்கள் பஸ் வளைந்து வளைந்து மேல்நோக்கிச் சென்றபோது விமானத்தில் உயர உயரப் பறப்பது போலிருந்தது. கண் பார்வை சென்றவிடமெல்லாம் ஒரே பனிமலைகள். அலகநந்தாநதி எங்களுக்கு வழிகாட்டுவது போல் எங்களுடனேயே ஓடி வந்தது. ஒரு புறம் உருகிய பனி, மலைச் சரிவில் நீர் வீழ்ச்சியாக அலறிக் கொண்டிருந்தது. மற்றொருபுறம் பனிப் பாறைகளுக்குக் கீழேயிருந்து தப்பித்துக் கொண்டு ஓடி வருவது போல் வந்த பெரிய ஓடைகள் அலகநந்தாவில் போய்க் கலந்தன. ஆகாசத்தையளாவி நிமிர்ந்து நிற்கும் மலைகளுக்கிடையே பேய்க் காற்று சீறியபடி சுழன்று சுழன்று வீசியது. 'உஸ்'ஸென்ற அதன் பயங்கர சப்தம் நதியின் இரைச்சலையும் அமுங்கச் செய்தது. மரங்கள் இங்வெழிலின் இன்பத்தை ரசிப்பது போல் தலையை ஆட்டின. கருங்குரங்குகள் கிளைக்குக் கிளைத் தாவி விஷமம் செய்யும் குழந்தைகள் போல் அட்டகாசம் செய்து கொண்டிருந்தன. இந்த இடத்தில் இயற்கை யன்னை, துள்ளிக் குதித்து ஒய்யார நடனம் ஆடுவது போலிருந்தது. சௌந்தர்யதேவதை தனியாட்சி செலுத்தும் கலைக் கோயில் போல் காட்சியளித்தது அந்தச் சுற்றுப்புறம்.

விஷ்ணு பிரயாக் வந்ததும் குளிரையும் பொருட்படுத்தாமல் அந்த சங்கமத்தில் இறங்கி ஸ்நானம் செய்துவிட்டு இருட்டுவதற்கு முன்பு பதரிநாத் சென்றுவிட வேண்டும் என்று டிரைவரை அவசரப்படுத்தினோம்.

ஸ்ரீ நாராயணனின் வாகனமான கருட பகவான் பதரிநாத்துக்கு வருபவர்களுக்கு வழிகாட்டி அழைத்துச் செல்வதாக ஓர் ஐதிகம் உண்டு. அதற்காகக் கோயிலில் கருடனுக்கு வஸ்திரம் சாத்தும் வழக்கமும் இருந்து வருகிறது. இதைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்த நான் எங்கள் பஸ்ஸுக்கு முன்னால் மலைகளுக்கிடையே உயரே ஒரு கருடன் பறந்து செல்வதைப் பார்த்தபோது ஆச்சரியத்தில் மூழ்கி விட்டேன்.

அந்தப் பிரதேசத்தில் வேறு ஒரு பறவையும் எங்கள் கண்ணில் படவில்லை.

பதரிநாத் ஒரு சிறு கிராமம். ஒரு காலத்தில் ஒரு சிற்றரசனால் ஆளப்பட்ட கர்வால் சமஸ்தானம் என்று கூறப்படுகிறது. அது இமயமலைத் தொடரில் 10,248 அடி உயரத்திலுள்ளதால் குளிர் அசாத்தியமாக இருக்கிறது. சுற்றிலும் பனிக் கட்டிகள். நதிக் கரையின் மீதும், தெருக்களின் மீதும் பனி உறைந்திருக்கிறது. தூய்மைக்கு அடையாளமாக எங்கு திரும்பினாலும் ஒரே வெண்மை. உள்ளத்தை ஆனந்தத்தில் ஆழ்த்தும் விவரிக்க முடியாத அமைதி அங்கு கோலோச்சுகிறது. பதரிநாத்துக்கு பூஸ்வர்க்கம் என்று புராணங்களில் பெயரிடப்பட்டிருப்பது எத்தனை பொருத்தம்! இந்தப் பூலோக ஸ்வர்க்கத்தைத் தேடிப் பரமேசுவரனும், பார்வதியும், நாராயணனும், லக்ஷ்மிதேவியும் தேவாதி தேவர்களும் வந்ததில் சற்றும் வியப்பில்லை.

ஒரு முக்கியமான தெரு கோயில் வரை செல்கிறது. ஆதிசங்கரரால் ஸ்தாபனம் செய்யப்பட்ட பதரிநாராயணர் கோயில் மிகப் பெரிதல்ல. கர்ப்பகிருஹமும், பிராகாரங்களோடு தென்னிந்திய ஆலயம் போலவே அமைக்கப்பட்டிருக்கிறது. மூலவர்மூர்த்தியும் மிகப் பெரிதல்ல. மகாவிஷ்ணு வீற்றிருப்பது போன்ற அந்தச் சிலை கருங்கல்லால் ஆனது. லக்ஷ்மி தேவியின் சந்நிதி தனியாக அதே பிராகாரத்தில் இருக்கிறது. அக்கோயிலில் ஒரு சமயத்தில் இருபத்தைந்து பேருக்கு மேல் உட்கார முடியாது. சந்நிதிக்கு நேரே கருடன் இருக்கிறார்.

பதரிநாத் கோயில் பனிக் காலத்தில் ஆறு மாதம் மூடப்பட்டு விடுகிறது. அங்குள்ள கடைவீதியும், வீடுகளும் காலி செய்யப்பட்டு அனைவரும் ஜோஷிர் மடத்துக்கு இறங்கி விடுகின்றனர். பிரதம பூசாரி ராவல்ஜியும் கோயிலை மூடிக் கொண்டு ஜோஷிர் மடத்துக்கு வந்து விடுகிறார்.

கோயிலுக்குள் இரண்டு சுடுநீர் ஊற்றுக்கள் இருக்கின்றன. நடுக்கும் அந்தக் குளிர்ப் பிரதேசத்தில் ஸ்நானம் செய்வதற்கும், குடிப்பதற்கும் அந்த நீர் வெகு சுகமாயிருக்கிறது. இதற்கும் ஓர் அருமையான புராண வரலாறு கூறப்படுகிறது.

ஆதிசங்கர பகவத்பாதாள் உடல்நலம் குன்றி, களைப்பு மேலிட்டுத் தள்ளாடித் தள்ளாடி நடந்து வந்த போது அவருக்குப் புத்துணர்ச்சி ஊட்டவே சுடுநீர் ஊற்று பீறிட்டுக் கிளம்பியதாகவும், ஆதிசங்கரர் அதில் ஸ்நானம் செய்து, நாராயணனுக்கு அபிஷேகமும் செய்து வைத்ததாகவும் கூறுகிறார்கள். இன்றும் அபிஷேகத்துக்கு அந்த நீரையே உபயோகிக்கிறார்கள்.

ஆதிசங்கரரால் ஸ்தாபிக்கப்பட்ட இக்கோயிலில் கேரளத்தைச் சேர்ந்த நம்பூதிரிகள் தான் பூஜை செய்கிறார்கள். அந்த முக்கிய பூசாரிக்கு 'ஹிஸ் ஹோலினெஸ்' ராவல்ஜி என்ற பட்டமும் சூட்டப்படுகிறது. இவரை நியமிக்கும் பொறுப்பு கர்வால் மகாராஜாவைச் சேர்ந்தது. அவர் திருவிதாங்கூர் மகாராஜாவின் உதவியைக் கொண்டு தகுந்த பூசாரியை நியமித்து வருவதாகச் சொல்கிறார்கள். ராவல்ஜிக்குச் சகலவிதமான சௌகரியங்களும் செய்து தரப்படுகிறது. தற்போதுள்ள ராவல்ஜி சம்ஸ்கிருத ஞானமும் சாஸ்திர ஞானமும் நிறைந்த மகா பண்டிதர்.

பதரிநாராயணன் கோயில் பூஜைகளும், அபிஷேக ஆராதனை, அர்ச்சனைகளும் மூலவருக்கான புஷ்ப, ஆபரண அலங்காரங்களும் தென்னிந்திய சம்பிரதாயத்தை யொட்டியே நடத்தப்படுகின்றன. வட இந்தியாவில் இமயத்தின் உயரத்தில், தென்னிந்தியப் பண்பாடும் தெய்வ வழிபாடும் பின்பற்றப்படுவதைப் பார்க்கும் போது உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்குகிறது. தேசத்தின் உண்மையான ஐக்கிய உணர்ச்சியும், ஒருமைப்பாடும்

புல்லரிக்கும் **மக்ளீன்ஸ்**

சுவை மூலம்

உங்கள் வாய்க்குப் புதுமலர்ச்சி புகட்டுவீர்!

**மக்ளீன்ஸ்**

3 வகைகளில் செயலாற்றுகிறது

1. சுத்தமாக்க — சொத்தை விழக் காரணமான உணவுத் துணுக்குகளை அகற்றுகிறது.
2. வெண்மையாக்க — மங்கல் படலத்தைப் போக்கிப் பற்களுக்கு மெருகிடுகிறது.
3. காக்க — திட வலுவுள்ள ஆரோக்கியமுடன் உங்கள் பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கிறது.




அதிவெண்மையான பற்களுக்கு —

**மக்ளீன்ஸ்**

MTP-I-P-I-65/66 TM

இந்த பக்தியின் அடிப்படையில்தான் அமைந்துள்ளன என்பதை உணர்கிறோம்.

சிறிது தூரத்தில் ஆதிசங்கர பகவத் பாதாளின் அழகிய கற்சிலையொன்று அமைக் கப்பட்டிருக்கிறது. மற்றோர் இடத்தில் பித்ருக்களுக்காக சிராத்த, தர்ப்பணாதிகள் செய்வதற்கான வசதிகள் இருக்கின்றன.

மே மாதம் 6ந் தேதி. அன்றுதான் ஆறு மாதமாக மூடப்பட்ட கோயிலைக் காலைநான்கு மணிக்குத் திறக்கப் போகிறார்கள். நாங்கள் விடியற்காலை மூன்று மணிக்கே எழுந்து குண்டத்தில் ஸ்நானம் செய்துவிட்டு 3-30க்கு கோயில் வாசலில் தயாராக நின்று விட் டோம். அன்றைய விசேஷமான நிர்வாண தரிசனத்தைக் காணப் பாதுகாப்பு மந்திரி ஸ்ரீ சவான் வந்திருந்தார். அவருடன் ராணுவ உயர் அதிகாரிகளும், அவர் களுடைய மனைவிமார்களும், உ. பி.மாநில மந்திரிகளும் ஏராளமாகக் கூடியிருந்தனர். அச்சிறிய இடத்திலும் எங்களில் மூவருக்கு இடம் கிடைத்தது, நாராயணன் கிருபை தான். இருப்பினும் மற்றவர்களுக்கு இடம் இல்லாதது வருத்தமாகத்தான் இருந்தது.

என் பெண் காயத்ரி 'கணீர்' என்று ஐந்தரைக் கட்டை சுருதியில் வேங்கடேச சுப்ரபாதத்தைச் சொல்லி நாராயணனைப் பள்ளி எழுச்சி செய்தாள். பின்னர் வேத பாராயணம் முழங்கியது. கதவுக்குப் பூஜை நடைபெற்ற பிறகு, 'மணிக் கதவம்' திறக் கப்பட்டது. உள்ளே ஜோதிர் மயமாய் ஒரு தீபம் சுடர்விட்டுக் கொண்டிருந்தது. ஸ்ரீநாராயணர் வெண்ணெயே ஆடையாக உடுத்திக் காட்சி தந்தார். அந்தத் தரிசன விசேஷத்தை வார்த்தைகளால் வருணிக்க எனக்குத் திறனில்லை. பிறகு அந்த வெண் ணெயை எடுத்துப் பிரசாதமாக வழங்கினர்.

அபிஷேகம், அலங்காரம், அர்ச்சனை யாவும் எட்டு மணிக்கு மேல் தொடங் கின. அப்போது ஜோதிர் மடத்தின் பீடாதி பதிகளும் அவரது சிஷ்யர்களும்கூட வந் திருந்தனர். அன்று ஸ்ரீ காஞ்சி காமகோடி ஆசாரிய சுவாமிகளின் ஜன்ம தினமாதலால் முதல் அபிஷேகம் அவர் பெயரிலேயே செய்யப்பட்டது.

ராவல்ஜி கோயில்களின் ஆகம விதிப்படி பூஜையை மிகவும் நேர்த்தியாக நடத்தி வைத்தார்.

அலங்கார அர்ச்சனைகள் முடிந்த பிறகு நமது ஆசாரிய சுவாமிகளுக்கு மிகவும் பிரியமான அஹிம்சா பட்டை ஸ்ரீ நாராயண ருக்குச் சாத்தி ஆனந்தப்பட்டோம். புது தில்லியிலிருந்து வரும்போது ஸ்ரீ காமகோடி ஆசாரியாளின் படம் ஒன்றை எடுத்து வந் திருந்தேன். அதை மூலவிக்கிரகத்தின் பாதத் தில் வைக்கச் சொன்னேன். பின்னர் விக்கிர கத்துக்கும் படத்துக்குமாகச் சேர்த்துத் தீபா ராதனை செய்தபோது உடல் சிலிர்த்தது. பரம பக்தியுடன் சுவாமிகளின் படத்தை எடுத்து ராவல்ஜி எங்களிடம் கொடுத்தார். அதைக் கையில் எடுத்துக் கொண்டு எங்களுடன் வந்த




''அடி காமு! நீ வார்க்கிற தோசை ரொம்ப நன்னா இருக்கு. எனக்கே எவ்வளவு தின்னேன்னு ஞாபகம் இல்லேன்னு சொன்னேன், உடனே உன் பிள்ளை 'பத்து'ன்னு சொல்றான்!''

''அதை மனசிலே வாங்கிக்காதீங்கோ. அவனுக் குப் பத்துக்கு மேலே எண்ணத் தெரியாது!''

---

பக்த ஜனங்களுடன் 'ஜயஜய சங்கர, ஹரஹர சங்கர' என்று நாமாவளி சொல்லிக் கொண்டு பிராகாரத்தைச் சுற்றி ஊர்வல மாக வந்தோம். அங்கிருந்த இதர வட இந்தி யர்கள் அருகில் வந்து படத்தைப் பார்த்து, 'இந்த மகான் யார்?' என்று கேட்டுத் தெரிந்து கொண்டு அவர் பாதத்தைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டு சென்ற காட்சியை எங்களால் மறக்கவே முடி யாது. பிறகு கோயிலுக்கே அளிக்கப்பட்ட அந்தப் படத்தை ராவல்ஜி ஏற்றுக் கொண்டு அங்கு வருபவர்களெல்லாம் பார்த்துத் தரிசனம் செய்வதற்கு ஏற்ற வகையில் ஓர் இடத்தில் மாட்டி வைத்தார்.

பிறகு ஆதிசங்கர மூல ஸ்தானத்திலும் பூஜை செய்தோம். எதிர்பார்க்காத விமரிசை களுடன் எங்கள் பிரார்த்தனை நடந்தேறியது.

ஸ்ரீ சவானால் திறந்து வைக்கப்பட்ட புதிய பாதை அநேகமாகத் தென்னிந்தியர் களாலேயே போடப்பட்டது. அந்தப் பாதையில் , காமகோடி பெரியவர்களின் பக்தர்களை ஏற்றிச் சென்ற பஸ்தான் முதன் முறையாக விடப்பட்டது. ஸ்ரீ பெரியவர் களின் ஜன்மதினத்தன்று ஜோதிர்மட ஆசாரி யாரும் அங்கிருக்க நேர்ந்தது மற்றொரு விசேஷம். அதோடு பாதுகாப்பு மந்திரியும் அங்கிருந்தது நாட்டின் பாதுகாப்புக்கு நமது ஆசார்ய சுவாமிகளின் பரிபூரண அநுக்கிரஹம் இருக்கிறது என்பதற்கு அடை யாளமாகத் தோன்றியது.

அன்று முழுதும் அங்கிருந்து விட்டு மறு நாள்,' புதிய பாதை போட்டதன் பலனை இன்னும் கோடிக்கணக்கானவர்களுக்குப் பதரிநாராயணரின் தரிசனம் கிடைக்க வேண் டும்' என்ற பிரார்த்தனையுடன் கிளம்பினோம்.

சாந்தமும் அழகும் குடிகொண்ட பதரியை விட்டு வருவது அத்தனை எளிதான காரிய மல்ல. மீண்டும் எப்போது வருவோம் என்ற ஏக்கத்துடனேயே தில்லியை நோக்கித் திரும்பினோம்.

## உங்கள் வதனம் கருப்பாக இருக்கிறதா?

## ஃப்ளோரோஸோன் உங்களுக்கு உதவும்

உங்கள் வதனம் கருப்பாக இருப்பதன் காரணமென்ன? வம்ச பரம்பரை...சீதோஷ்ண நிலை...ஆனால், சருமத்தின் திசுக்களில் உள்ள கருநிறத்தைக் கொடுக்கும் மெலானின் பிக்மெண்ட் என்னும் இயற்கை நிறம் செறிந்திருப்பதுதான் அடிப்படையான காரணம். இந்தப் பிக்மெண்டைக் குறைக்க முடிந்தால் சருமத்தின் கருநிறத்தைக் குறைத்து பொலிவுடன் விளங்கச் செய்யலாம்...மேலும் பிரகாசத்துடன் மிளிரச் செய்யலாம்.

ஃப்ளோரோஸோன் உங்கள் வதனத்திற்குப் பொலிவு தருவது எப்படி? அது சருமத்தின் திசுக்களில் ஊடுருவிச் சென்று, நேரடியாக இயற்கை நிறங்களின் மேல் செயல்புரிந்து, மெலானின் பிக்மெண்டைக் குறைத்துவிடுகிறது. இதனால் உங்கள் சருமம் கருமை குறைந்து பொலிவுடன் திகழ்கிறது. ஃப்ளோரோஸோன், பருக்கள், கரும்புள்ளிகள், சுருக்கங்கள் மற்றும் இவை போன்ற இதர சரும குறைபாடுகளைப் போக்க உதவுகிறது.



**ஃப்ளோரோஸோன்** — பொலிவுடன் கூடிய மேனி எழிலுக்கு விஞ்ஞானரீதியான வழி

ஃப்ளோரோஸோன் எல்லா கெமிஸ்டுகளிடமும், கடைகளிலும் இரு அமைப்புகளில் கிடைக்கிறது:
ஃப்ளோரோஸோன் லோஷன், ஃப்ளோரோஸோன் கான்ஸெண்ட்ரேட்டட் க்ரீம்.
(விண்ணப்பத்தின் பேரில் விளக்கங்கள் அடங்கிய ஏடு இலவசமாக அனுப்பப்படும்)
ஹைஜினிக் ரிஸர்ச் இன்ஸ்டிட்யூட், தபால் பெட்டி 1192, பம்பாய்-1





"உங்கள் குழந்தைக்குப் பிரத்தியேகமான பவுடர் தேவைப்படுகிறது கால்கேட்டே அந்த நேர்த்தியான பவுடர்!"




கால்கேட் பேபிபவுடர் மிகவும் மென்மையானது, அதிகமாக வேர்வையை உறிஞ்சக்கூடியது, பட்டுப்போல் மிருதுவானது. அது குழந்தையின் இளம் சருமம் எரிச்சலடையாமல், நமைச்சலடையாமல் பாதுகாத்து குழந்தையை குளுமையுடன், சுகமாகவும், ஆனந்தத்துடனும் வைத்திருக்கும். உங்கள் குழந்தைக்கு இன்றே கால்கேட் பேபி பவுடரை வாங்குங்கள்!

கால்கேட் பேபி பவுடர் வாங்குங்கள்
— அதிக பவுடர்...
அதிக சிக்கனம்!

CSP.G.7 TAM

# சபல புத்தி

எஸ். பூரணி

வாசலில் வெகு அழகாகக் கோலம் போட்டுக் கொண்டிருந்தேன்.

''போதும் மன்னி, உள்ளே வாயேன்'' என்று நாத்தனார் உள்ளேயிருந்து அதட்டுவது தெரிந்து திடுக்கிட்டுத் திரும்பி வந்தேன்.

''என்ன மன்னி கோலம் வேண்டிக் கிடக்கு. பக்கத்து வீட்டு எச்சுமுப் பாட்டி எட்டிப் பார்த்துக் கொண்டேயிருக்கா. நாளைக்கு ஊர் முழுதும் 'டாம் டாம்' ஆகிவிடும், உன்னால் !'' என்று சிடுசிடுக்கவேதான் எனக்கு என் தவறு புரிந்தது. ஆம், பெண் பார்க்க வரும் பொழுது லட்சுமீகரமாக இருக்கட்டும் என்றல்லவோ நான் கோலம் போட்டேன். 'இது இப்படி வம்புப் பேச்சுக்கு இடம் தருகிறது பார்' என்று மனத்தினுள் நினைத்தபடியே உள்ளே போய் வேறு வேலைகளைக் கவனிப்பதில் முனைந்துவிட்டேன். வாசலில் கார் வந்து நின்றது. சில மாமிகள் உள்ளே வந்து வழக்கம் போல் கேள்விகள் கேட்டார்கள். டிபன், காப்பி எல்லாம் முடிந்தன. அவர்கள் சென்று விட்டனர். இரண்டு நாட்களில் இல்லையென்று பதில் வந்தவுடன் அதற்கு நான் விசாரப்படவில்லை. நாத்தனாரும் மாமியாரும் பக்கத்து வீட்டுக்குச் சமாசாரம் எட்டி விட்டதையே கூறிப் புலம்பிக் கொண்டிருந்தனர்.

மறு தடவை பெண் பார்க்க வருகிறார்கள் என்று தெரிந்ததும் நான் கோலம் போடுவதில்லை எனச் சங்கல்பம் செய்து கொண்டு விட்டேன். உள்ளேயிருந்த வெள்ளிப் பாத்திரங்களை வேலைக்காரியிடம் போட்டுத் தேய்க்கச் சொன்னதும் சரஸா நாத்தனார் உள்ளே என்னைப் பற்றி என் மாமியாரிடம் முணுமுணுத்துக் கொண்டேயிருந்தாள். ஆம்! வேலைக்காரி வழியாக ஊர் முழுதும் பரவிவிடும் என்று பயம் அவர்களுக்கு. 'இதென்னடா, தலைவேதனை!' என்று மனம் நொந்தபடியே உள்ளே சென்றேன். இந்தத் தடவையும் இல்லை என்றாகிவிட்டது. மூன்றாவது முறையாக மூன்று டாக்ஸிகளில் பெண் பார்க்கும் நபர்கள் வந்து தவறுதலாகப் பக்கத்து வீட்டு வாசற்படியிலேயே இறங்கி விட்டார்கள். அன்று நாத்தனார் முகத்தைப் பார்க்க வேண்டுமே! ஆனால் நினைத்ததற்கு நேர்மாறாக இவர்களுக்குப் பெண் பிடித்துக் கல்யாணமும் அமர்க்களமாக நடந்தேறியது. ஊரார் எல்லாரையும் அழைத்திருந்தோம்.

சில மாதங்கள் கழித்து மாமியார் ஜன்னல் வழியாக ஏதோ உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பதைக் கவனித்தேன் நான். என்ன சமாசாரம் என்று விசாரித்ததில், ''பக்கத்து வீட்டுக் காமாட்சியைப் பெண் பார்க்க வருகிறார்கள் 'போலிருக்கிறதடி! பையன் எப்படி இருக்கிறான் என்று பார்த்தேன்!'' என்று பதில் சொன்னாள் மாமியார். இதைக் கேட்டுவிட்டு என் நாத்தனார், ''எங்கே, எங்கே?'' என்று தானும் ஜன்னல் வழியே எட்டிப் பார்க்க ஓடோடி வந்தாள். நடந்து போன சம்பவங்களை நினைத்து எனக்குச் சிரிப்பாக வந்தது. என் மாமியாரும் நாத்தனாரும் தங்களைப் போன்று எல்லோரையும் நினைத்துக் கொண்டதன் காரணமாகத்தானே அவர்களது சிடுசிடுப்புக்கும் குறை கூறும் முணுமுணுப்புக்கும் நான் ஆளாக நேர்ந்தது?





# யாத்திரை

ஏ.எஸ்.ராகவன்

சந்தர்ப்பங்கள் மனிதர்களை உருவாக்குகின்றன; அவைதாம் மனிதர்களை உருக்குலைத்தும் விடுகின்றன. சந்தர்ப்பங்களைத் தமது நுட்பமான அறிவால் சிருஷ்டித்து வரலாற்றையே புதுமையாக உருவாக்கியவர்களும் உண்டு. உரிய தருணத்தில் செய்ய வேண்டியதைச் செய்யாததால் வரலாற்றையே வீணாக்கியவர்களுமுண்டு.

அங்கே அந்த வீட்டில் தூணிலே கட்டப் பட்டிருந்த ரோஹிணியின் கட்டுக்கள் அவிழ்க்கப் பட்டதும் அவள் மயக்கமுற்றுக் கீழே சாய்ந்தாள். பாருக்குட்டி அவளை மார்போடு தாங்கிக் கொண்டு, "ஜெகு, தண்ணீர் கொண்டு வந்து முகத்தில் தெளியுங்கள். ரத்தக் கறையைத் துடையுங்கள். அலமாரியில் டிஞ்சர் இருக்கிறது, எடுங்கள்" என்றாள்.

கோபாலுக்குத் தன் ஆண்மையே பல் உடைந்து ரத்தத்தைக் கக்கிக்கொண்டு கிடப்பதாகத் தோன்றிற்று. அருகே வந்து ஆற்றாமையோடு பார்த்தான். பாருக்குட்டிக்கு அவனைப் பார்க்கவே வெறுப்பாக இருந்தது. "நீங்கள் மாடிக்குப் போங்கள். ரோஹிணியைக் கொலை செய்து விடாதீர்கள்" என்றாள்.

"கோபத்திலே அடிச்சுப் போட்டேன்" என்றான் கோபால்.

ஜெகுவுக்கு அவனுடைய வேதனை புரிந்தது. ரோஹிணி அசட்டுத்தனமாக நண்பரின் மனத்தைப் புண் படுத்தி விட்டாளே! அவர் கோபக்காரர்தான். அது தெரிந்து அவளல்லவா ஒதுங்கிப் போக வேண்டும்! ஒரு 'ஸர்வண்ட் உமன்' இப்படி எதிர்த்துப் பேசுவது நன்றாகவும் இல்லையே!

ரோஹிணி கண்விழித்தாள். விழித்தாளா? கண்ணை மறைத்திருந்தது கண்ணீரில்.

"ரோஹிணி! நீ போய்விடு. உன்னை நான் தடுக்கல்லே" என்றான் கோபால். தன் சீற்றத்தின் காரணமாக அவளை அனுமதிக்க மறுத்தது தானே என்பதும் அவன் வரவேண்டாமென்று பாருவும் ஜெகுவும் சொன்னதும் நினைவுக்கு வரவேதான் அவன் அவளை அனுமதித்தான் இப்போது.

பாருக்குட்டி அவனைத் திரும்பிப் பார்த்தாள். அடேயப்பா! என்ன பார்வை! நெருப்பா அது? "இல்லே. அவள் போகமாட்டாள்... ரோஹிணி, நீ போகாதே. போனால் நானும் போய்விடுவேன்" என்றாள்.

ரோஹிணிக்கு இந்த அன்பான சொற்கள் மேலும் கண்ணீர் மடையைத் திறந்து விட்டன. கேவிக் கேவி அழலானாள்.

"அழாதே, ரோஹிணி..."

"அழாதே, ரோஹிணி அக்கா!"

"ஊ... ஊங்... ஊங்..."

வலமும் இடமுமாக அவளருகே அமர்ந்து அவளுடைய விசும்பலுக்குப் பின் குரல் கொடுப்பவர்களாகப் பாருவும் ஜெகுவும் அழுதார்கள்.

சுந்தரம் கண்ணைத் துடைத்துக் கொண்டார். அன்பின் பல்வேறு வடிவங்களையும் கோணங்களையும் அவர் கண்டதில்லை. அங்கே கண்டதும் அவருக்கு நெஞ்சில் சோகம் கலந்த இன்ப உணர்வு பூரித்தது. வெள்ளமாகிய அந்தக் களங்கமற்ற அன்பிலே மிதக்கவும் அமிழவும் நீந்தவும் கூடுமானால் அதுவே பேரின்பமென்று தோன்றிற்று. இத்தனை நேரமும் மௌனசாட்சியாக அங்கே நடப்பவற்றையெல்லாம் பார்த்தபோது இப்படியும் கூட உள்ளங்கள் சங்கமிக்குமா என்று வியந்தார் அவர். கோபால்கூட அல்லவா தலைகுனிகிறான்!

"ரோஹிணி போவணும்னு போவட்டும். ஏன் தடுக்கிறீங்க? ஜெக்கு எழுந்திரு. அவ போகட்டும். போயி ஊர் முச்சூடும் கோபால் கொலை செய்தான்னு சொல்லட்டும். அதுக்கெல்லாம் நான் அஞ்சினவன் இல்லே" என்றவன், தன் குரல் எவர் காதிலும் விழாததைக் கண்டு "எதுக்காக எல்லாரும் அழறீங்க?" என்று கோபத்தோடு பொங்கினான்.

பாருக்குட்டி தலையை நிமிர்த்தி "உங்களால் அழ முடியவில்லை என்றால் சிரியுங்கள்" என்றாள்.

"ஆமாம். நான் சிரிக்கத்தான் போறேன்" என்றான் கோபால். கடகடவென்று சிரிக்கவும் சிரித்தான். ஆனால் சிரிப்பா அது? தோல்வியின் அழுகை ஆற்றாமையோடு சிரித்தது. "விடுங்கள் அவளை... ரோஹிணி, நீ போய் விடு" என்று கத்தினான் சிரித்து முடிந்ததும்

ரோஹிணி தலையை ஆட்டினாள். ''நான் போகப் போறதில்லே, கோபாலு... இங்கியே தான் இருப்பேன்'' என்றாள்.

''போக மாட்டே? ஏன்? ஏன் போக மாட்டே?'' என்று சீறினான் கோபால்.

''ரோஹிணி, நீ போகக் கூடாது....என்னைப் போல் ஒரு பெண் ஜன்மம் எடுத்து விட்டாய் நீயும். இந்த ஆண்கள் பொறுமை பிடித்தவர்கள். கோபக்காரர்கள். நீ போகாதே. என் கூடவே இரு. குஞ்சுராமன் வந்ததும் நான் சொல்லி உன்னை இங்கேயே இருக்கும்படி செய்கிறேன். என்ன? ஆமாம், கோபால், குஞ்சுராமன் எங்கே? நேற்று ராத்திரியே புறப்பட்டுப் போன குஞ்சு இன்னமும் வரவில்லையே? எங்கே அனுப்பி யிருக்கிறீர்கள் குஞ்சுராமனை?'' என்று கேட்டாள் பாருக்குட்டி.

கோபால் சிரித்தான்.

''ஏன் சிரிக்கிறீர்கள்? என் புருஷன் எங்கே?''

''பாருக்குட்டி, குஞ்சுராமனைப்பற்றி முதன் முறையாக இப்போதுதான் நீ விசாரிக்கிறாய்! இத்தனை நாட்களா அவனைக் காப்பாத்தி னேனே, இப்போது மட்டும் அவனை விசாரிக் காட்டி என்ன?''

''எத்தனை நாளைக்கு நானும் குழந்தை யாகவே இருப்பது, கோபால்? எனக்கும் கொஞ்சம் கொஞ்சமாக உலகம் புரிய ஆரம் பித்துவிட்டது.''

''உனக்கும் உலகம் புரிய ஆரம்பிச்சுட் டுதா?... ஆமா... ஆமா.... இல்லாட்டி புருஷன் மேலே இவ்ளோ கரிசனம் வருமா உனக்கு?'' கோபால் சிரித்தான்.

''குஞ்சுராமன் எங்கே?'' என்று கேட்டாள் அவள் கோபமாக. அவனுடைய சிரிப்பை அவள் ரசிக்கவில்லை. புருஷன் மீது கரிசனம் வந்திருப்பதாக அவன் விமா சனம் செய்ததையும் ரசிக்கவில்லை.

அவன் பதில் சொல்லாமல் மாடிக்குச் செல்ல முற்பட்டான். பாருக்குட்டியையும் உலக ஞானம் பற்றிக் கொண்டதை அவனால் ரசிக்க முடியவில்லை. தன் கனவெல்லாம் வீணாயினவே என்று மறுகினானே! தனது திட் டங்கள் சரிந்தனவே என்று கனன்றானே! அவனுக்கு அங்கு இருக்கவே பிடிக்கவில்லை.

''நில்லுங்கள். நான் கேட்டதற்குப் பதில் சொல்லிவிட்டுப் போங்கள்!'' பாருக் குட்டி அதிகாரத்தோடு உத்தரவிட்டாள்.

''என்ன கேட்டே நீ?'' என்று அலட்சிய மாகக் கேட்டான் கோபால்.

''குஞ்சுராமனை எங்கே அனுப்பியிருக் கிறீர்கள்? ஏன் இன்னமும் குஞ்சு திரும்பி வரவில்லை? அவனையும் எங்கேயாவது தாணில் கட்டி வைத்திருக்கிறீர்களா? சொல் லுங்கள்...''

''உனக்குப் பதில் சொல்ல முடியாது என்றால்.''

''சொல்லிவிட்டுத்தான் மாடி ஏற வேண் டும் நீங்கள்.''

''ராணியம்மா உத்தரவோ?''

''ஆமாம். இது என் வீடு!''

கோபால் சிரித்தான். பாருக்குட்டிக்குத் தனது வீடு, தனது உடைமை, தனது பாசம், தனது சொந்தம் எல்லாம் வந்துவிட்டனவே! இந்த வீடு இவளுடையதாக இருக்கலாம். ஆனால் இதை இவளுடையதாக ஆக்கியவன் கோபால். எங்கோ கள்ளிக்கோட்டையில் கிடந்தவளைக் கோவைக்கு வரவழைத்தவன் யாரென்பதை மறந்து விட்டாள் பாருக் குட்டி. குஞ்சுராமன் இலேசில் அவனை

## 24



அழைத்து வந்து குடும்பம் வைக்கச் சம்மதித்தானா? சம்மதிக்க வைத்தவன் கோபால் என்பதெல்லாம் அவளுக்கு மறந்துவிட்டது.

''குஞ்சுராமன் எங்கே?'' மீண்டும் கேட்டாள் பாருக்குட்டி.

''எனக்குத் தெரியாது'' என்றான் கோபால்.

''பொய். உங்களுக்குத் தெரியாமல் குஞ்சுராமன் எங்கே போய்விடும்? பதில் சொல்கிறீர்களா, இல்லாவிட்டால் இந்தத் தூணில் கட்டி வைத்துப் பதில் சொல்லச் செய்யட்டுமா? நான் யார் தெரியுமா? பாருக்குட்டி... உக்கும்!'' என்றாள் அவள்.

கோபால் திகைத்து விட்டான்.

ஜெரு பதறினான். ''பாரு, என்ன இது? கோபாலைத் தூணிலே கட்டுவதாவது?'' என்று குமுறினான்.

ரோஹிணி கையைப் பிசைந்தாள். இந்த அசட்டுப் பெண் நெருப்போடு விளையாடுகிறாளே! அவனுடைய பூனைக் கண்கள் வெறியால் மின்னுவது தெரியவில்லையே இவ





# கி.வா.ஜ மணிவிழா

தமிழ்த் தாத்தாவின் தலைமாணாக்கர் கலைமகள் ஆசிரியர் கி. வா. ஜகந்நாதன் அவர்களின் மணிவிழா சென்னை குழந்தைகள் தியேட்டரில் சென்னை முதன் மந்திரி திரு எம். பக்தவத்ஸலம் அவர்களின் தலைமையில் ஜூலை பத்தாம் தேதி அதி விமரிசையாக நடந்தது. காலையில் ஏழு கலைஞர்கள் மதுரை பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் தலைமையில், ஆசிரியர் கி. வா. ஜ வின் பல்வேறு சிறப்பியல்புகளைக் கவிதை மழையாகவே பொழிந்தார்கள். மாலையில் கி. வா. ஜ. அவர்களுக்கு டாக்டர் மு. வரதராசனார், சௌந்தரா கைலாசம், ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் ஆகியோர் புகழ்மாலை சூட்டினர். மத்திய சர்க்கார் மந்திரி திரு ஓ. வி. அளகேசன் மணிவிழா மலரை வெளியிட்டுப் பேசினார். விழாவின் வரவேற்புக் குழுத் தலைவர் திரு என். மகாலிங்கம் ஆசிரியர் ஜகந்நாதனுக்குப் பொன்னாடை சாத்திக் கௌரவப் படுத்தியதோடு, பொற்கிழியும் வழங்கினார். 'எல்லாம் அவன் அருள்' என்று நன்றியுரை பகர்ந்த திரு கி. வா. ஜ. வின் பேச்சு எல்லோரையும் உருக்கி விட்டது.








கண்ணைப் பறிக்கும் வெண்மை! கச்சிதமான தூய்மை! எல்லாம் ஸர்ப் செயல்...அதன் எல்லை கடந்த வல்லமை! ஏராளமான நுரை, சலவையே வெகு எளிது. சிறுவர் ஆடை, சட்டை, சேலை....எதற்கும் நிகரில்லாத வெண்மை, சிகரமான தூய்மை. கைப்பட வீட்டிலே சலவை செய்திடவே கைகண்ட துணை ஸர்ப்.

# ஸர்ப் சலவை: வெள்ளைவெளேர் சலவை

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

# Zam-Buk

## ஜாம்-பக் சிறந்த மூலிகைக் களிம்பு






ஜாம்-பக், பாரதத்தின் உன்னதமான மூலிகைக் களிம்பு. விரைவாகவும், பத்திரமாயும் குணப்படுத்த உதவுகிறது.

Benson's/1-FZ-11 Tam.

| காயங்களுக்கு | தீப்புண்களுக்கு | முகப் பருக்களுக்கு |
| --- | --- | --- |
|  |  |  |

சென்னை ராஜ்ய டிஸ்டிரிப்யூட்டர்கள்

மெஸர்ஸ் மோதி & கம்பெனி, 214, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, தபால் பெட்டி நெ. 1902, சென்னை-1

ளுக்கு! பரபரவென்று பாருக்குட்டியின் கைகளைப் பற்றி அவளை அறையின் உட்புறம் தள்ளிக் கதவைத் தாளிட்டாள் அவள்.

''கதவைத் திற'' என்றான் கோபால் கோபமாக.

அவள் தலையை ஆட்டினாள்.

''திற என்றால் திற...''

''ஊஹூம்!''

கோபால் கதவை ஓங்கி உதைத்தான். ''பாருக்குட்டி, வா வெளியே... உன் புருஷன் எங்கே போயிருக்கிறான் என்பதைச் சொல்கிறேன்'' என்றான்.

அவள் வர முயன்றாள். ஆனால் ரோஹிணி தடுத்தாள்.

''அவளை வரவிடு, ரோஹிணி. பயப்படாதே, அவளை நான் அடிக்க மாட்டேன்'' என்ற கோபால் ஜெகுவைப் பார்த்து, ''ஜெக்கு, என்னை இந்தத் தூணிலே கட்டிப் போடு... உம்... ஜோமாத்தான்...நல்லா, அவள் கையாலே என்னை அடிக்கட்டும்.... ரோஹிணி, திற கதவை. திறக்கிறயா இல்லாட்டி....'' என்றான்.

சுந்தரம் விக்கித்துப் போனார்.

ரோஹிணி கதவைத் திறந்தாள். பாருக்குட்டி ஓடிவந்து கோபாலின் கைகளைப் பற்றிக் கொண்டு அழுதாள். அவனும் அழுதான். கோரஸாக ரோஹிணியும் ஜெகுவும் கலந்து கொண்டனர்.

திடீரென்று பாருக்குட்டி உத்தரவிட்டாள். ''யாரும் அழக் கூடாது... எல்லாரும் சிரியுங்கள்.''

'களுக், களுக்' என்ற சிரிப்பு ஆறாக ஓடிற்று அடுத்து.

தாம் இருப்பது பைத்தியக்கார ஆஸ்பத்திரியோ என்று ஐயம் வந்துவிட்டது சுந்தரத்துக்கு. பாருக்குட்டி என்ன மாயம் செய்கிறாள்! அத்தனை நேரமும் அவர் அங்கு இருந்ததை அந்தப் பைத்தியங்கள் கவனித்ததாகவே தெரியவில்லை. மெல்ல அங்கிருந்து அவர் புறப்பட்டதையா கவனிக்கப் போகிறார்கள்?

இனியும் கோபாலால் நாணுவுக்கு ஆபத்து என்கிற பைத்தியக்காரத்தனமான பயம் அவருக்கு இருக்குமா என்ன? ரோஹிணி கூட அப்படிச் சொல்ல மாட்டாளே இப்போது! பழைய கோபாலிடம் சதித் திட்டங்கள் இருந்திருக்கக் கூடும். ஆனால் புதிய கோபால் தூணில் வலியக் கட்டுப்பட விரும்பியவனாயிற்றே. அவனால் சதி செய்ய முடியாது.

வீட்டை அவர் அடைந்த சமயம் லட்சுமி அம்மாள் இல்லை. பாப்பாக் கண்ணு மட்டுமே இருந்தாள். ''அண்ணா இன்னும் வரவில்லை, மாமா. யாரோ இரண்டு போலீஸ்காரர்கள் அண்ணாவைத் தேடிக் கொண்டு வந்திருந்தார்கள்'' என்றாள்.

சுந்தரம் ஊஞ்சலில் படுத்தார். போலீஸ் வந்ததைப் பற்றி அவர் கவலைப்படவில்லை. தொழிலாளர் தலைவன் அல்லவா? ஏதாவது வழக்கு, சாட்சி, சம்மன் என்றிருக்கும். வேறு என்ன? ஆபத்து அவனை அணுகுமா? அந்த அஞ்ஞானம் இனியும் அவரை உலுக்குமா?



## புதிய வாழ்க்கை

ரூபாயின் மதிப்புக் குறைப்பு என்பது மஞ்சள் கடிதாக கொடுக்கிற நிலைக்கு ஒப்பாகும். கடனில் மூழ்கிய ஒரு மனிதன் கண்காணாத இடத்துக்குத் தப்பி ஓட நினைக்கலாம். அல்லது தன் திவாலா நிலையைப் பிரகடனப்படுத்தி நீதி மன்றத்துக்குச் செல்லலாம். ''என் பொருளாதார நிலையைக் குட்டிச்சுவராக்கிக் கொண்டேன். என்னிடம் இப்போது இருப்பது இவ்வளவுதான். இதை ஏற்றுக் கொண்டு என்னை மன்னியுங்கள். நான் இனி புதிய வாழ்வு தொடங்குகிறேன்'' என்று கூறலாம். ஆனால் இப்படித் திவாலா நிலையைப் பிரகடனப் படுத்துவோரில் இரண்டு விதம் உண்டு. ஒரு சாரார் பொய் பேசுகிறவர்கள். உண்மையானவன் தன் சொத்து விவரங்களைத் தருகிறான். பொருளாதார ரீதியில் தான் செய்த தவறுகளைத் திருத்திக் கொள்கிறான். 'தாம்தூம்' செலவுகளைக் குறைக்கிறான்; சிக்கனத்தைக் கடைப்பிடித்து நேர்மையுடன் வாழ்கிறான். ஆனால் மற்றொரு ஏமாற்றுகிற பேர்வழி இருக்கிறானே, அவன் தன் உண்மைச் சொத்து விவரங்களைத் தராமல் ஒளித்து விடுவான். தனக்குக் கடனுதவியவர்களை ஏய்க்கப் பார்ப்பான்; மஞ்சள் கடிதாக கொடுத்துச் சிக்கலிலிருந்து விடுதலை பெற்ற பிறகு பழையபடி 'தாம் தூம்' செலவுகளை ஆரம்பித்துத் தன் பொருளாதார நிலையை மேலும் சீர்குலையச் செய்வான்.

இன்று நம் அரசாங்கம் இந்த இருவித நபர்களில் யாரைப் போல் நடந்து கொள்ளும் என்பதே கேள்வி. போகிற போக்கைப் பார்த்தால் அது சீர்திருந்தும் என்பதாகத் தோன்றவில்லை.

—எம். ஆர். மஸானி

ஆனால் உண்மையில் அப்போதுதான் ஆபத்து வந்திருந்ததென்பதை அவர் எப்படி அறிவார்!

கோபாலைச் சமாதானப்படுத்தி அழைத்து வருவதற்காக நாணுவும் வந்துதானாக வேண்டும் என்று ஜெகு வற்புறுத்தியதால், அவனும் புறப்பட்டுப் போனான். நாணு சொன்னால் கோபால் கேட்பானாம். சொல்ல வேண்டியதை முறைப்படி சொல்ல அவனுக்குத் தான் தெரியுமாம். ஜெகு வாதாடினான். கோபாலைச் சந்திக்கவே விரும்பாத நாணு அவனோடு போராடி அவனுடைய சீற்றத்தை மாற்ற வேண்டிய அவஸ்தையை ஜெகுவுக்காகவும் பாருக்குட்டிக்காகவும் மேற்கொள்ள ஏற்றுக்கொண்டான். ஆனால் பாதி வழியிலேயே சங்கத்திலிருந்து அவனுக்கு அவசர அழைப்பு வந்தது. எனவே ஜெகுவை மட்டுமே அனுப்பிவிட்டு அவன் சங்க அலுவலகத்துக்கு விரைந்தான்.

''மிஸ்டர் நாராயண்! போலீஸ் மறுபடியும் உங்களைத் தேட ஆரம்பித்திருக்கிறது. வலுவான ருசுக்கள் இருப்பதாகப் பேசிக்

கொண்டார்கள். நம் சங்கத்தின் பெயர் விளங்காமல் இருக்க வேண்டுமே என்று கவலையாக இருக்கிறது'' என்றார் நாயர், அவன் நுழைந்ததும் நுழையாததுமாக. நாணுவை மீண்டும் போலீஸ் தேடியது பற்றி அவருக்கு ஏனோ தாங்க முடியாத பரபரப்பு, கவலை!

''தேடட்டுமே, மிஸ்டர் நாயர்! அதனாலென்ன?'' என்றான் நாணு.

நாயர் அவனருகில் வந்தார். ''நான் சொல்வதைத் தவறாக எண்ணக் கூடாது, மிஸ்டர் நாராயண். இந்தத் தொழிற் சங்க விவகாரம் இருக்கிறதே, இது உங்களுக்கு ஒத்து வராது. முதலாளி வீட்டில் சௌக்கியமாக இருந்துவிடலாம் நீங்கள். ஏதோ என்னைப் போன்றவர்களுக்கு அது சரி. நீங்கள் ஏன் கஷ்டப்பட வேண்டும்? போலீஸ் இன்னும் அரை மணியில் வருவார்கள். அதுவரை இங்கேயே இருக்கவேண்டும் நீங்கள்'' என்றார்.

''என்னால் இருக்க முடியாது, நாயர்'' என்ற நாணு போலீஸுடன் உடனே போனில் தொடர்பு கொண்டான். ஐந்து மணிக்கு விசுவநாதன் வீட்டுக்கு வருவதாக இன்ஸ்பெக்டர் சொல்லவே அவன் புறப்பட்டான்.

நாயரை அவன் பொருட்படுத்தவில்லை. போலீஸ் விசாரணையையும் பொருட்படுத்தவில்லை. பொருட்படுத்த வேண்டிய வேறு ஏதோ ஒன்று இருப்பதாக நெஞ்சில் ஒரு குறுகுறுப்பு எழுந்தது. அதனால்தான் சங்க அலுவலகத்தில் அவனால் அமர்ந்திருக்க முடியவில்லை. அங்கிருந்து புறப்பட்டும் கால் தரிக்கவில்லை. முன்பெல்லாம் எச்சரிக்கை உணர்வு ஒன்று எழுமே, அப்படி ஏர் அபாய அறிவிப்பு எழுந்ததோ நெஞ்சில்! காரணமின்றியே கூட அப்படி ஒரு உணர்வு எழுமா? அவனுக்குத் தெரியவில்லை.

நடக்கும்போதே கால் இடறிற்று. கண் கரித்தது. காது அடைத்துக் கொண்டது. எங்காவது ஒரு தனி இடத்தில் அமர்ந்து வாய்விட்டு அழவேண்டும் போலிருந்தது. நிர்மலமான வானத்தில் திடீரென்று கருமேகங்கள் சூழ்ந்தது போல், நெஞ்சில் வேதனைக் கடுமையும் கவலைக் குளிரும் படிந்தன.

அம்மாவின் நினைவு வந்தது. லட்சுமி அம்மாளின் கனவு கண் முன் வந்தது. ஒன்றுக் கொன்று முடிச்சுப் போட்ட மனசு விம்மிற்று.

மனத்தின் போக்குக்குச் சில சமயம் அர்த்தமே இராது போலும்.

''நாணு!'' சன்னல் ஓரத்திலிருந்து குரல் வரவே தலையை உயர்த்தினான். அங்கே கமலா தெரிந்தாள்! கமலாவா அவள்?

உள்ளே நுழைந்ததும் கேட்டான்: ''கமலா என்ன இது? வேலைக்கு ஓர் உடை உடுத்துவாய். பழைய புடவை தரித்திருக்கிறாய். தலையெல்லாம் கலைந்து கிடக்கிறது. கையில் வளையலைக் கூடக் காணோம்.''

அவள் பெருமூச்செறிந்தாள். முகமெல்லாம் வீங்கியிருந்ததைப் பார்த்தால் அவள் அழுதுகொண்டுதான் இருந்திருக்க வேண்டும் என்று நாணுவுக்குத் தோன்றிற்று. இனம் விளங்காத மனக் காய்ச்சல் அவளையும் பற்றிக் கொண்டு விட்டதோ?

''அழுதாயா கமலா?''

''இல்லையே.''

''பொய் சொல்லாதே.''

''நான் ஏன் பொய் சொல்ல வேண்டும்?''

''சில சமயம் மனசை மறைக்கப் பொய் சொல்ல வேண்டியிருக்கிறதே. கமலா, உன் மனசு எனக்குத் தெரியாதென்று நினைத்தாய்?''

''தெரியுமல்லவா? ஏன் கேட்கிறாய்?''

''இந்த அவஸ்தையை நீயாக வரவழைத்துக்கொண்டாயே என்றுதான் கமலா.''

அவள் சிரித்தாள். ''வரவழைக்காமலே சில அவஸ்தைகள் வருவதுண்டல்லவா, நாணு?''

''உண்மைதான்'' என்றான் நாணு. ''ஜெகுவை ஆரம்பத்தில் வெறுத்தவள் நீ. ஜெகுத் தடியனோடு சேராதே என்று என்னை எச்சரித்தவள் நீ.''

''அவர் வெகுளி, நாணு!''

''அந்த வெகுளித்தனத்தைக் கண்டு அநுதாபம் ஏற்பட்டது உனக்கு... இல்லையா?''

''அதையெல்லாம் இப்போது ஏன் கேட்கிறாய்?.... அவர் மீது அநுதாபப் பட்டதாகப் பெருமை வேண்டுமா எனக்கு?''

''பெண்மை என்றுமே பெருமை உடையதுதான், கமலா! ஜெகுவின் மீது நீ கொண்ட அநுதாபமே மெல்ல மெல்லக் காதலாக மலர்ந்து விட்டது. இந்த அதிசயத்தை நீ பெருமையாகக் கொள்ளாமல் போகலாம். ஆனால் எனக்கு அப்படித்தான் தோன்றுகிறது.''

''நீ பெரிய பேச்சாளன் ஆயிற்றே!'' கமலா சிரித்தாள். அவளுடைய மனத்தில் ஜெகுவினிடம் ஏற்பட்ட காதலுக்குப் படிக் கட்டுக் கட்ட அவனால்தான் முடியும். இந்த வேதனை படிந்த அன்பு ஏன்தான் அவளுக்கு வாய்த்ததோ! ''நாணு, நீ பெருமையாகவே நினைத்தாலும் சரி, பொறுமையாக நினைத்தாலும் சரி, எனக்கென்னவோ பாருக்குட்டியின் சகவாசம் ஜெகுவுக்கு நல்லதில்லை என்று தோன்றுகிறது...அவளால் நிச்சயம் அபாயம் வரும் அவருக்கு...... அந்தக் கோபால் இருக்கிறானே, அவன் இலேசுப்பட்டவனில்லை'' என்றாள்.

நாணு ஒன்றும் சொல்லவில்லை. முன்பு வேலூரில் அத்தானின் அன்பு அவன் மீது இருந்ததென்று பொறுமைப்பட்டவள்தானே கமலா! இப்போது பாருக்குட்டி மீது சந்தேகம் கொள்கிறாள். இது அவளுக்கு இயல்புதான். ஆனால் கோபாலைப் பற்றிக் கமலா சொன்னது முழுக்க முழுக்க உண்மை. அதில் சந்தேகமில்லை.

''ஜெகு பட்டணம் போகிறாராமே. உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டாள் கமலா.

''தெரியாதே... நானும் அவனும் ஒரு மணி நேரத்துக்கு முன்புகூடக் கோபாலைத் தேடிப் புறப்பட்டோம். அப்போது பட்டணம் போவதாக ஜெகு சொல்லவே இல்லையே!'' என்றான் நாணு.

# ஹாண்ட்லூம் ஹவுஸ் அளிக்கும்

## இல்லத்தரசிகளும் இளங்கன்னியரும் விரும்பும்

# எழில்மிகு சேலைகள்

இந்தியாவின்
எல்லா பாகங்களிலிருந்தும்
உங்கள் தேவைக்கேற்ற சேலைகள் —
பட்டு மற்றும் நூல் — விசேஷ
காலங்களில் அணியவும் அன்றாட
உபயோகத்துக்கு ஏற்றதாகவும்
புதிய டிஸைன்களில்
நேர்த்தியான சேலைகள் வந்துள்ளன.



**ஹாண்ட்லூம் ஹவுஸ்**
**9, ரத்தன் பஜார், சென்னை-3.**

# அமிர்தாஞ்சனம்

## தடவி விரைவில் நிவாரணம் பெறுங்கள்

உடலில் ஒரு பகுதியை மட்டும் பாதிக்கும் வலிக்காக உள்ளுக்கு மருந்து சாப்பிடுவானேன்? வலிக்கும் இடத்தின் மேல் மட்டும் அமிர்தாஞ்சனம் தடவி விரைவாக வலி நிவாரணம் அடையுங்கள். பத்து மருந்துகள் கொண்டு விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டுள்ள அமிர்தாஞ்சனம் சுளுக்கு, தசைவலி, தலைவலி மற்றும் மூட்டு வலிகளுக்கு சிறந்த வகையில் நல்ல நிவாரணமளிக்கும். மற்றும் மார்புச்சளி, ஜலதோஷம் போன்றவைக்கும் ஏற்ற மருந்து அமிர்தாஞ்சனம். ஒரு சமயத்தில் தேவையானதெல்லாம் மிகச் சிறு அளவே; ஆதலால், ஒரு பாட்டில் உங்கள் குடும்பத்திற்கு மாதக்கணக்கில் வரும். • அமிர்தாஞ்சனம் 70 வருடங்களாகக் குடும்பங்களில் பயன்பட்டு வரும் கைகண்ட நிவாரணி.

பத்து மருந்துப் பொருள் ஒருங்கே சேர்ந்த அமிர்தாஞ்சனம் வலிகளுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற சிறந்த நிவாரணி.

**சுளுக்கு**

எவ்வளவு அசௌகரியமாக இருப்பினும் உபாதை **வலிக்கும் பகுதியில்** மட்டுமே




அமிர்தாஞ்சன் லிமிடெட், மதராஸ்
பம்பாய் - கல்கத்தா - டெல்லி

"கொஞ்ச நேரத்துக்கு முன்னுலே நான் போன் செய்தேன். இன்னைக்கு ராத்திரி ப்ளூ மவுண்டனிலே பட்டணம் போகப் போவதாகச் சொன்னுர்."

"திடீரென்று பயணம் வந்திருக்கும் போலிருக்கிறது."

"கோபாலுக்காகத்தான் போகிருராம்... பேசும் போதே போனில் மூன்று நான்கு தடவை தடை ஏற்பட்டது. கோபாலிடம் இடை இடையே விசாரித்து விசாரித்து எனக்குச் செய்தி சொன்னுர்."

"அப்படியா?"

"நாணு, இதில் ஏதாவது சூது இருக்குமோ ?"

நாணுவுக்கு அப்படித்தான் தோன்றிற்று. கோபாலைச் சந்தித்த பிறகு இந்தப் பயணம் முளைத்திருக்க வேண்டும். திடீரென்று எதற்காக இப்போது பட்டண யாத்திரை ? கோபால் ஜெகுவைப் பட்டணத்துக்குத்தான் அனுப்புகிருனு? அல்லது வேறு எங்காவது ?

"எனக்கு உள்ளூறப் பயமாக இருக்கிறது, நாணு!" என்ருள் கமலா கவலையோடு.

பாருக்குட்டியின் சீற்றத்தால் வெளியேறிய கோபால் திரும்ப அங்கே போனுனே இல்லையோ ? ஜெகுவின் மீது பாருக்குட்டி காட்டும் அன்பை அவன் அங்கீகரிக்கவே மாட்டான்.

"நாணு, ஏன் எதுவுமே சொல்லாமல் இருக்கிறும்?" என்று பதறியே விட்டாள் கமலா.

நாணு பெருமூச்சு விட்டான். "ஜெகுவுக்குப் போன் செய்து பார்க்கலாம்" என்ருன்.

நாடக நாட்டிய மண்டலியில் ஜெகு இல்லை என்றும் அவனும் கோபாலும் புறப்பட்டுப் போய் விட்டதாகவும் செய்தி கிடைத்தது. ஜெகு பட்டணம் போவது அவர்களுக்கே புதிய செய்தியாக இருந்தது.

"போக மாட்டாருங்களே.... இரண்டு நாளிலே 'கும்பகர்ணன்' நாடகம் அரங்கேற்றம் இருக்குதுங்களே!" என்ருர்கள்.

"கமலா, எனக்கும் சந்தேகம் ஏற்படுகிறது. நான் இப்போதே பாருக்குட்டியின் வீட்டுக்குப் போய் ஜெகுவைப் பார்த்து விட்டு வருகிறேன். நீ கவலைப்படாமல் இரு" என்று புறப்பட்டான் நாணு.

ஜெகுவுக்கு உண்மையாகவே ஏதோ ஆபத்துதான் வந்து விட்டது என்று அவனுக்குத் தோன்றிற்று. மனத்தில் எழுந்த அபாய அறிவிப்புக்கும், உளைச்சலுக்கும் இப்போதல்லவா பொருள் விளங்குகிறது? போலீஸ் தேடுவதுகூட இந்த மர்மப் பயணத்துக்கு எந்த வகையிலாவது சம்பந்தப்பட்டதுதானே! பெற்றுக் கொண்ட பணத்தைத் திருப்பித் தந்து அதையே வஞ்ச வழக்காக மாற்றிய கோபால் இப்போது போலீசுக்கு என்ன புகார் கொடுத்திருக்கிருனே, யார் கண்டது? ஆனுல் தனக்கு ஏற்படப் போகும் எந்த ஆபத்துக்கும் நாணு அஞ்சவில்லை. இப்போது அவன் கவலையெல்லாம் ஜெகுவைப் பற்றித்தான்; கமலாவைப் பற்றித்தான்.

பாருக்குட்டியின் வீட்டை அடைந்த நாணு திடுக்கிட்டான். வீடு பூட்டப்பட்டுக் கிடந்தது !

"அவுங்க எல்லாரும் பொறப்பட்டுப் போயிட்டாங்களே.... அநேகமா ஊரை விட்டே போயிட்டாங்க போலிருக்குது" என்ருர்கள் அக்கம்பக்கத்தில்.

குஞ்சுராமன் கோபால் கோஷ்டியின் மர்ம ஸ்தானமும் மர்மப் பயணமும் அவனளவில் திசை தப்பிவிட்டன.

'ப்ளூமவுண்டனில்தானே ஜெகு பட்டணம் போவதாகச் சொன்னுளும்! நேரே ரயிலடிக்கே போனுல் அவனைப் பார்த்து விடலாமே !

மணி ஐந்தைத் தாண்டி விட்டது. அடடா! விசாரணைக்காக ஐந்து மணிக்கெல்லாம் வீட்டுக்கு வருவதாக இன்ஸ்பெக்டர் சொன்னுரே!

போன் செய்தான் இன்ஸ்பெக்டருக்கு. "ஸார், மிகவும் அவசர காரியமாக ப்ளூமவுண்டன் எக்ஸ்பிரஸில் ஒருவரைச் சந்திக்க வேண்டியிருக்கிறது...... விசாரணையைக் காலையில் வைத்துக் கொள்ளலாமா?" என்று கேட்டான்.

இன்ஸ்பெக்டர் சற்றுத் தாமதித்தார். "ப்ளூமவுண்டனிலா ?.... அவசியமாகப் போயாக வேண்டுமா? ஆல்ரைட்... எனக்கும்


ஓம்

**சிக்கல் ஸ்ரீ சிங்காரவேலனுக்கு ஸ்வர்ணபுஷ்ப ரஜிதா புஷ்ப அருச்சனை**



கோடி அருச்சனை திட்டப்படி 30-6-66ல் அரைக்கோடி பூர்த்தியாகி விட்டது. முருக பக்தர்களின் வேண்டுகோளின்படி அன்று முதல் ஸ்ரீ சிங்காரவேலனுக்கு ஸ்வர்ணபுஷ்ப (தங்கக் காசு), ரஜிதா புஷ்ப (வெள்ளிக் காசு) அருச்சனை செய்து பூர்த்தி தினம் வரை அணிவித்து பிறகு அதன் கிரயமான தங்கக் காசு ரூ. 30ம், வெள்ளிக் காசு ரூ. 5/-ம் முன் பணமாகச் செலுத்திப் பதிந்த அன்பர்களுக்கு விநியோகிக்கப்பெறும். இதில் ஒரு பக்கத்தில் ஸ்ரீ சிங்காரவேலனின் பிம்பமும், எதிர் முகத்தில் மூல மந்திர அக்ஷரங்கள் அடங்கிய ரக்ஷா யந்திரமும் பொறிக்கப் பெற்றிருக்கும்.

தயாரிக்கப் பெற்ற பிறகு கொஞ்ச காலம் பூஜையில் உபயோகப்பட வேண்டி இருப்பதாலும் குறிப்பிட்ட அளவுதான் தயாரிக்க இருப்பதாலும் முன்னதாகவே தங்கள் தேவைக்குப் பணம் அனுப்பிவிட வேண்டும்.

சிக்கல்
13-5-66

டி. ஆர். அருணாசலம், செயலாளர்
கோடி அருச்சனைக் கமிட்டி, சிக்கல் S Rly

கூட அங்கே ஒருவரைப் பார்த்தாக வேண்டியிருக்கிறது......'' என்றவாறே போனை வைத்து விட்டார் அவர்.

நாணுவுக்கு அவருடைய பதிலும் அதைச் சொன்ன விதமும் அதைச் சொல்ல அவர் எடுத்துக் கொண்ட நேரமும் வியப்பாகவே இருந்தன. ஆயினும் அதையெல்லாம் எண்ணிக் கொண்டிருக்க அவகாசம் இல்லை அவனுக்கு. கமலாவின் கவலை தோய்ந்த முகம் கண்முன் நின்றது. அத்தான் தன்னுடைய குடும்பத்துக்குச் செய்திருக்கிற உதவிகளுக்கெல்லாம் இந்தப் பிறவியில் அவனால் கடன் தீர்க்க இயலாது.

ஜெகு! வெகுளித்தனமாகவே வளர்ந்து விட்டவன் அவன். கோபால்! சூழ்ச்சிகளே உருவானவன். சுந்தரராமன்! தன்மானமற்ற வஞ்சகன். பாருக்குட்டி! ஒன்றுமறியாப் பேதை! இந்த விசித்திரக் சூழலில் கமலாவின் இதயச் சிக்கல் பாய்ந்து கிடக்கிறதே. அதை எவ்வாறு நீக்க இயலும் அவனால் ?

நீக்கி விடத்தான் வேண்டும்.

நாணு நேரே ரயிலடிக்கு விரைந்தான். பரபரப்பும் வேகமும் அவசரமும் நெஞ்சையும் காலையும் முடுக்கின. இல்லாவிட்டால் ரயில்வே நிலையத்துக்குள் தன்னை மறந்து பிளாட்பார நுழைவு அனுமதிச்சீட்டு வாங்காமல் போயிருப்பானா?

அதுகூட அவனுக்கு எங்கே தெரிந்தது ? சூள்ளமும் பருமனுமாய் அவனை மறித்த பரிசோதகர் கேட்டபோதல்லவா தெரிந்தது!

''டிக்கட் ப்ளீஸ் !''

நாணு விழித்தான். ''மன்னிக்க வேண்டும். ரயிலில் ஒருவரை அவசரமாகச் சந்திக்க வேண்டியிருந்தது. பிளாட்பாரம் டிக்கட் வாங்க மறந்துவிட்டேன்'' என்றான்.

''மறந்தா விட்டீர்கள்? த்சொ....த்சொ. வாட் ஏ பிட்டி?'' என்றார் அவர் கேலியாக.

நாணு பரிதாபமாகத் தொலைவில் நிற்கும் ரயிலைப் பார்த்தான். ப்ளுமவுண்டன் வண்டி வந்து விட்டது. ஜனக் கும்பல் அலைமோதுகிறது. காக்கிச் சட்டை அணிந்த பத்துப் பன்னிரண்டு பரிசோதகர்கள் குறுக்கும் நெடுக்கும் போய் வந்தார்கள். போதாத குறைக்கு, காக்கிச் சட்டை அணிந்த போலீஸ்காரர்கள் வேறு. மந்திரி யாராவது வருகிறார்களோ, என்னவோ !

''ஸார்.....''

சூள்ளப் பரிசோதகர் அவனைக் கையமர்த்தினார். அவனை அழைத்துக் கொண்டு தம் அலுவலகத்துக்குச் சென்றார். 'நீங்கள் எந்த ஊரிலிருந்து வருகிறீர்கள், மிஸ்டர் ?'' என்று கேட்டார்.

நாணு அசட்டுச் சிரிப்புடன், ''நான் ரயிலில் வரவில்லை, ஸார்.....! விசுவ லட்சுமி மில்ஸ் தொழிலாளர் யூனியனின் துணைச் செயலாளன் நான்'' என்றான்.

''அப்படியா? பத்து ரூபாய் முப்பது பைசா எடுங்கள்.... தொழிலாளர் தலைவருக்குக் கொஞ்சம் கௌரவமாகவே அபராதம் விதிப்போம்'' என்றார் அவர் ஹாஸ்யமாக.

நாணு பணத்தை எடுத்துக் கொடுத்தான். அவர் சீட்டு தருவதற்குள் இரண்டு பரிசோதகர்கள் வந்து சேர்ந்தார்கள். ''ஒரு கோஷ்டியாம், ஸார்..... இரண்டு பேர் தான் சிக்கினார்கள்..... மற்றவர்கள் தப்பி விட்டார்களாம்.....பெட்டி நிறையத் தங்கக் கட்டிகளோடு போலீஸ் கைப்பற்றி அவர்களை அரெஸ்டு செய்து ஜீப்பில் ஏற்றிக் கொண்டு போகிறார்கள்'' என்று தெரிவித்தார்கள்.

சூள்ளத் தலைவர் பென்சிலைக் காதில் செருகினார். ''உம்.... அப்புறம்?'' என்றார்.

''ஸார், தயவுசெய்து என்னை அனுப்புங்கள்'' என்றான் நாணு.

''கொஞ்சம் பொறுங்கள், மிஸ்டர்.... கள்ளக் கடத்தல் கோஷ்டி சிக்கியிருக்கிறதாம்... நீங்க வேறே இந்த நேரத்தில் அங்கே போய் மாட்டிக் கொள்ளாதீர்கள்'' என்றார் தலைவர் கேலியாக.

''ரொம்ப நாட்களாகவே இந்த வியாபாரம் நடக்கிறதாம்.... யாரோ கல்லுப் பட்டிக் கவுண்டர் ஒருத்தராம், கன்னிக் கோட்டை ஆசாமி ஒருத்தராம்.... இரண்டு பேரும்தான் முக்கிய ஆட்கள். ஒருத்தன் தான் சிக்கினான்.''

நாணு திடுக்கிட்டான். கல்லுப்பட்டியும் கன்னிக்கோட்டையும் யாரைக் குறிப்பிட்டனவென்று புரிந்து விட்டது. கோபாலும் சுந்தரராமனும்! இவர்களில் ஒருவன்தான் பிடிபட்டதா ? போலீசில் இரண்டு பேரைப் பிடித்து விட்டதாக அல்லவா சொல்கிறார்கள்? அப்படியென்றால் மற்றொருவன் யார் ? ஜெகுவா?

சூள்ளப் பரிசோதகர் ஒரு வழியாகச் சீட்டைக் கிழித்த போது ஜெகுவின் சீட்டு கிழிந்தே போயிற்று என்றுதான் நாணு நிர்மானித்தான். காலியாகக் கிடந்த பிளாட்பாரத்தில் ஈ காக்கை இல்லை.

ஒரு குரல் அழவேண்டும்போல் இருந்தது அவனுக்கு. கடைசியில் ஜெகுவை அவனால் காப்பாற்ற முடியாமலே போய்விட்டதே ! கமலாவின் பயம் உண்மையாகி விட்டதே ! அவளுக்கு அவன் என்ன பதில் சொல்வான் ?

வெளியே வந்தான் நாணு.

'ஜெகு, கோபாலை நம்பி உன்னையே இழந்தாயா ?'

'பாருக்குட்டி, உன் கணவன் நல்ல வேலை பார்க்கிறான் என்றும் நிறையச் சம்பாதிக்கிறான் என்றும் உன் துயரம் தீர்ந்ததென்றும் சொன்னாயே, பேதைப் பெண்ணே, இப்போதாவது உனக்குப் புரிந்ததா? புரியாமல் இன்னும் சிரித்துக் கொண்டேதான் இருக்கிறாயோ?'

'கோபால், உன் வஞ்சம் வென்று விட்டதே !'

நாணு வீட்டை அடைந்த போது லட்சுமி அம்மாள் வாசலிலேயே நின்று கொண்டிருந்தாள். அவனைக் கண்டதும், ''குழந்தை, உன் அப்பாவைப் போலீஸில் பிடித்துக் கொண்டு போய் விட்டார்களாம்.... கமலா உள்ளே இருக்கிறாள்..... அவள் ஸ்டேஷனுக்குப் போயிருந்தாளாம்.....'' என்றாள்.

மூர்ச்சை போட்டு அங்கேயே மயங்கி விழுந்தான் நாணு.

(தொடரும்)



# கல்கி



# வெள்ளி விழா மலர்

★ தமிழ் கூறும் நல்லுலகமெங்கும் தன் இலக்கியப் பணியைச் சிறந்த முறையில் கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாகச் செய்து வந்து, இன்று இருபத்தாறாவது ஆண்டில் அடியெடுத்து வைக்கவிருக்கிறது கல்கி. இத்தருணத்தில் கல்கி நேயர்கள் தொடர்ந்து இதற்குக் காட்டி வந்திருக்கும் பேராதரவை நன்றியறிதலுடன் நினைவுகூர்ந்து மகிழ்கிறோம்.

★ கல்கியின் வெள்ளி விழாவைக் கொண்டாடும் தருணத்தில் அதன் நினைவாகக் கல்கி வெள்ளி விழா மலர் ஒன்றினை வெளியிடுவது பொருத்தம் என எண்ணி அதற்கான ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. கல்கியின் பொன்விழா ஆண்டுவரையிலும் அதற்குப் பின்னரும்கூட நீங்கள் படித்துப் படித்து இன்புறவும் பொத்திப் பொத்திப் பாதுகாத்து வரவும் கூடிய வகையில் ஓர் அரிய இனிய பொக்கிஷமாக வெள்ளி விழா மலர் உருவாகி வருகிறது.

★ தமிழ் நாட்டின் அறிஞர் பெருமக்கள் பலர் வரைந்துள்ள கட்டுரைகள் பல துறைகளையும் அணைத்துச் செல்கின்றன.

★ புகழ் பெற்ற எழுத்தாளர்கள் தங்கள் தங்கள் திறமையை யெல்லாம் காட்டி வெள்ளிவிழா மலருக்கு விசேஷச் சிறப்புடன் கூடிய சிறுகதைகளை எழுதியிருக்கிறார்கள்.

★ மலரில் இடம் பெற்றுள்ள பிரபல ஓவியர்களின் ஏராளமான பல வர்ணப் படங்களில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதத்தில் தனி மதிப்புப் பெறுகிறது; கண்ணைக் கவர்ந்து கருத்தையும் ஈர்க்கிறது.

★ ஹாஸ்ய வெடிகள், மூவர்ண நகைச்சுவைச் சித்திரங்கள், நிகழ்ச்சித் துணுக்குகள் போன்றவை தாராளமாகவே ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன.

★ நெஞ்சையள்ளும் கவிதைகளுக்குக் குறைவில்லை இம்மலரிலே.

★ இவற்றையும் இன்னும் பல சிறப்புக்களையும் தாங்கி, கல்கி தீபாவளி மலர் அளவில், சிறந்த முறையில் கல்கி வெள்ளி விழா மலர் உருவாகி வருகிறது. ஆகஸ்ட் முதல் தேதியன்று இம்மலர் வெளிவரும்.

★ காகிதக் கட்டுப்பாடு, ரூபாயின் மதிப்புக் குறைப்பு ஆகியவை காரணமாக மிகக் குறைந்த அளவு பிரதிகளே அச்சிட முடிகிறது. ஆகவே உங்கள் பிரதிகளுக்கு முன்கூட்டியே உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்துகொள்ளுங்கள்.

**தனிப் பிரதி விலை ரூ. 5. தபால் செலவு ரூ. 1.25. வி. பி. பி. இடையாது**



# எப்படிச் சொல்வேன்?

சாலை நேரம். மணி ஒன்பதரையிருக்கும். அம்பிகை விலாஸ் டீ ஹோட்டல் முதலாளி சரவணன் கிழக்கு முகமாகத் தன் ஆசனத்தில் உட்கார்ந்திருந்தான்! அவனுக்கு வலப்புறமாக அவனது ஆசனத்தோடு நெருங்கியதாகக் கிடந்த ஒரு சிறிய நாற்காலியில் அவன் தங்கை ராஜாத்தி உட்கார்ந்திருந்தாள்! சரவணனது வலக்கை ராஜாத்தியை அணைத்துக் கொண்டிருந்தது. இடக்கை அவனுக்கு முன்னிருக்கும் மேசை மேல் கிடந்தது!

தினமும் விடியுமுன்னே எழுந்து குளித்து முழுகிவிட்டுக் காளியம்மன் கோயிலை வலம் வந்து, அம்மன் சந்நிதியில் நின்று கொண்டு அம்பிகையைக் கும்பிடுவான் சரவணன்! கோயிலின் கர்ப்பக் கிருஹம் அந்த நேரத்தில் மூடப் பட்டிருக்கும். கதவு இரும்புக் கம்பிகளாலானதால், கம்பிகளின் இடைவெளி வழியாக அந்தக் கருக்கிருட்டிலும் அம்மன் சிலையை அடையாளம் கண்டு கொண்டு வணங்குவான்! வாயிற்படியில் ஒரு மூலையில் கொட்டிக் கிடக்கும் குங்குமத்தை எடுத்து, அது கொட்டிக் கிடக்கும் குங்குமம் தானே என்று எண்ணாது பக்தியோடு நெற்றியில் வைத்துக் கொண்டு தான் தன் கடைக்குச் சென்று ஆசனத்தில் அமர்ந்து கொள்வான்! சற்று நேரத்துக்கெல்லாம் அவன் வசிப்பதற்கென்று வைத்துக் கொண்டுள்ள அக்கடையை யொட்டிய சார்பு போன்ற ஓரிடத்தில் ராஜாத்தி விழித்துக் கொண்டு விடுவாள்! உடனே கடையிலிருந்து ஓர் ஆள் அவளைக் கவனிக்கச் செல்வான்! பிறகு ஏழு மணிக்கெல்லாம் ராஜாத்தி பையப் பைய நடந்து வந்து சரவணனுக்கு அருகில் அவளது ஆசனத்தில் அமர்ந்து கொள்வாள்! சின்னஞ் சிறிய பெண் அவள்! அவளுக்கு வயது நான்குதான்!

சரவணன் ''சோமு'' என்று பெயர் சொல்லி ஒரு சர்வரை அழைத்தான். சோமுவும் தன் முதலாளியின் அருகில் வந்து கொஞ்சம் மரியாதையாக ஒதுங்கி நின்று கொண்டு, அந்த முதலாளியின் முகத்தைப் பார்த்தான்!

''நீ வீட்டுக்குப் போகணும்னு சொன்னியேப்பா!''

''என் அம்மாவுக்கு உடம்பு சரியில்லையாம், அதனாலே தான்!''

''சரி, போயிட்டுப் பொழுதோடேயே வந்துடு!''

''இன்னைக்கு முழுசா லீவு.

சரவணன் கொஞ்சம் யோசித்தான்.

''சரி, அதனாலென்ன, அவசியம் ஏற்பட்டால் நானும் கவனிச்சுக்கறேன்! நீ போயிட்டு வாப்பா!'' என்ற சரவணன் மேசை டிராயரை இழுத்து ஓர் ஐந்து ரூபாய் நோட்டை எடுத்துச் சோமுவிடம் நீட்டினான்!

''என்கிட்டே பணம் இருக்கே, இது எதுக்குங்க?''

''இது உனக்கு இல்லேப்பா, உங்க அம்மாவுக்கு! பழங்கள் வாங்கிக் கொண்டு போய்க் கொடு! உம்.... நேரமாயிட்டுதே!''

அந்தப் பணத்தைப் பெற்றுக் கொண்டு சோமு போய் விட்டான்!

சரவணன் திரும்பிச் சாலையைப் பார்த்தான். சாலையின் ஓரமாக இருந்த 'பஸ் ஸ்டாப்' அவன் கண்களில் பட்டது.

அந்தப் பஸ் நிறுத்தத்தில் பொதுவாக டவுன்பஸ்கள்தான் நிற்பது வழக்கம்! ஒன்பதரை மணிக்கும் பத்து மணிக்கும் இடைப்பட்ட நேரத்தில் அந்தப் பஸ் நிறுத்தத்தில் கூட்டம் அதிகமாக இருக்கும்! மன்னம் பந்தல் கல்லூரிக்குச் செல்லும் மாணவர்களும் சில ஆசிரியர்



களும் அந்தக் கூட்டத்தில் முக்கிய அங்கம் வகிப்பார்!

அன்றும் மாணவர்களும் ஆசிரியர்களும் அந்த நேரத்தில் அங்கு குழுமியிருந்தனர்.

சரவணன் தனது ஆசனத்தில் இருந்தபடியே அவர்களை யெல்லாம் பொறுமையாக ஒரு முறை பார்த்தான். அவர்கள் எல்லாருமே அவன் கண்களுக்கு நன்கு பழக்கப்பட்டவர்கள் தான்! நித்தம் நித்தம் அல்லது அடிக்கடி அவன் அவர்களை அங்கு கண்டிருக்கிறான். ஆனால் அன்று என்னவோ அவன் கண்களுக்கு ஒரு நிறைவு இல்லை!

பஸ் ஒன்று அந்த நிறுத்தத்தில் வந்து நின்றது. கல்லூரி மாணவர்களும் ஆசிரியர்களும் ஒவ்வொருவராக ஏறிக் கொண்டிருந்தனர்.

அந்த நேரத்தில்தான் அவசரம் அவசரமாக ஓடி வந்தாள் அவள். அவளைத் தொடர்ந்து ஒரு நாகரிக வாலிபனும் வேகமாகப் பெருநடைபோட்டு நடந்து வந்தான்!

அங்காடிக் கூடைக்காரிகள் பஸ்ஸில் ஏறிக் கொண்டிருப்பதைக் கண்டு தயங்கி நின்று, சற்று வேகமாக நடந்ததாலும் பஸ்ஸைக் கடந்து விட்டுச் சில கஜ தூரம் ஓடி வந்ததாலும் முகத்தில் ஏற்பட்ட வியர்வையைப் பௌடர் போகாவண்ணம் கைக்குட்டையால் மெல்ல ஒற்றித் துடைத்துக் கொண்டிருந்தாள் அவள்! அவள் கவனமெல்லாம் பஸ்ஸிலேயே இருந்தது! அவளோடு வந்த அவ்வாலிபன் அவளுக்கு அருகில் நின்று கொண்டு அவளைப் பார்த்து ஏதோ சொல்லிச் சிரித்தான். அவளும் பதிலுக்குச் சிரித்தாள்!

''உம், அந்தப் பெண் கண்ணம்மா டீச்சரும் நல்லாப் படிச்சிருக்கே! படிச்ச அந்தப் பெண்ணை அந்த நாகரிக வாலிபனோடு பார்க்கிறபோதுதான் அந்தமாயிருக்கு!''

சரவணனது மனம் ரகசியமாகச் சிரித்துக் கொண்டது!

## •காடவன்•

கூடைக்காரிகள் தட்டுத் தடுமாறிப் பஸ்ஸினுள் ஏறிக் கொண்டவுடன் கண்ணம்மாள் டீச்சரும் ஏறிக் கொண்டாள்! அவளோடு வந்து அவளுக்கு அருகில் நின்று கொண்டிருந்த அவ்வாலிபனும் ஏறிக் கொண்டான்! அந்தப் பஸ் நகர்ந்தது!

அவன் கண்ணம்மாளையும் அவளோடு வந்த அவ்வாலிபனையும் தன் மனக்கண் முன்னே நிறுத்தி அழகு பார்க்கத் தொடங்கினான்!

கண்ணம்மாளுக்குக் கொஞ்சம் வாளிப்பான உடம்பு. நல்ல நிறம். பச்சை வண்ணப்

பூக்கள் போட்ட மஞ்சள் நிறவாயிலும் பச்சை நிறச் சோளியும் அவள் அணிந்திருந்தாள்! தலையிலோ முல்லைப் பூச்சரம்! ஒரு கையில் ஒரு சிறிய பிளாஸ்டிக் பை. அதில் சில புத்தகங்கள்! மற்றொரு கையில் மெல்லிய கைக் குட்டைத் துணியொன்று!

அவளோடு வந்த அவ்வாலிபன் நடுத்தரப் பருமனோடு கம்பீரமாகக் காணப்பட்டான்! எனினும் அவளைப் போல் அவன் நிறத்தில் சிறந்திருக்கவில்லை! அவன் மாநிறம்தான். 'பாண்ட்'டும், 'ஸ்லாக்'கும் அணிந்திருந்தான். நேர் வகிடும் முகத்தில் அணிந்திருந்த கண்ணாடியும் பொதுவாக அவனது தோற்றத்தைச் சிறப்பித்துக் காட்டின.

இத்தனைக்கும் சரவணனுக்கும் கண்ணம்மாளுக்கும் நேரடியான அறிமுகம் கிடையாது! ஓராண்டுக்கு முன்னால் திடீரென்று ஒரு நாள் கண்ணம்மாள் காலை எட்டு மணி சுமாருக்கு அந்தப் பஸ் நிறுத்தத்துக்கு வந்தாள். அன்று முதல் வாரத்தில் ஓரிரு நாட்கள் தவிர மற்ற நாட்களிலெல்லாம் நேரம் தவறாது எட்டு மணி பஸ்ஸுக்கு வந்து விடுவாள்! அவள் நேரம் தவறியதும் மற்றொரு வாலிபனோடு வந்ததுமே இந்த ஒரு நாள்தான்!

கண்ணம்மாள் அந்தப் பகுதிக்குக் குடி வந்த சில நாட்களுக்கெல்லாம் அவளைப் பற்றிச் சரவணனது 'டீ'க் கடையில் பேச்சு அடிபட்டது. கண்ணம்மாள் தனிக் கட்டை தான் என்றும் அவள் மன்னம்பந்தலில் உள்ள ஓர் ஆரம்பப்பள்ளியில் ஆசிரியையாக வேலை பார்க்கிறாள் என்றும் பேசிக் கொண்டார்கள்.

ஆறு மாதங்களுக்குப் பிறகு ஒரு நாள் அந்த இடத்தில் ஓர் ஆச்சரியகரமான சம்பவம் நடைபெற்றது!

எட்டு மணி பஸ்ஸை விட்டால் அடுத்த பஸ் உரிய நேரத்தில் பள்ளியிலிருக்கக் கண்ணம்மாளுக்கு உதவாது. அதனால் எப்போதுமே கண்ணம்மாள் அந்தப் பஸ் நிறுத்தத்துக்குப் பஸ் நேரத்துக்குச் சற்று முன்னதாகவே வந்து விடுவாள். அங்கு நின்று கொண்டிருக்கும் நேரத்தில் எப்பொழுதாவது தற்செயலாகத் திரும்பிச் சரவணனுக்குச் சொந்தமான 'அம்பிகை விலாஸ் டீ ஹோட்டலை'ப் பார்ப்பாள். அப்போது சரவணனுக்கு அருகில் அமர்ந்திருக்கும் ராஜாத்தியின் மீது அவளது பார்வை சற்றுத் தங்குவதுண்டு! நாளடைவில் கண்ணம்மாளுக்கு, அந்த பஸ் நிறுத்தத்தை நெருங்கி வந்து கொண்டிருக்கும் போதே ராஜாத்தியைக் கவனிப்பதும், பஸ் நிறுத்தத்துக்கு வந்த பிறகும் குறிப்பாகத் திரும்பி ராஜாத்தியைப் பார்ப்பதும் வழக்கமாகி விட்டது.

இதே காரியத்தை அம்பிகை விலாஸ் டீ ஹோட்டலில் சரவணனுக்கருகில் இருந்தவாறே சிறுமி ராஜாத்தியும் செய்து கொண்டிருந்தாள்.

ராஜாத்தியின் உற்சாகத்துக்கு அளவே இல்லை. அவள் வெற்றிப் புன்னகையோடு சரவணனைப் பார்த்தாள். வியாபாரத்தைக் கூடச் சற்று நேரம் கவனியாதவனாய் இவ்விருவரது செய்கைகளையும் கவனித்துக் கொண்டிருந்த சரவணன் இப்போது பெருமிதத்தோடு தன்னை நோக்கும் ராஜாத்தியை மெள்ள அணைத்துக் கொண்டான்.

ராஜாத்திக்கும் கண்ணம்மாளுக்குமிடையே சிநேகிதம் துளிர் விட்டதில் சரவணனுக்கும் சந்தோஷம்தான். அதோடு தன் மனத்திலிருக்கும் ஒரு பிரச்னையும் இனி சுலபமாகத் தீர்ந்து விடலாமல்லவா என்றும் அவன் எண்ணினான்.

ராஜாத்தி சின்னஞ்சிறு பட்டு மலர்தான் என்றாலும் வயதுக்கு மீறிய அறிவு வேகம் அவளிடம் இருந்தது. பள்ளியில் சேர்ந்து படிக்கும் வயது அவளுக்கு இன்னும் வரவில்லையாதலால், யாராவது தனிப்பட்ட ஒருவர் மூலமாக அவளுக்கு உயிரெழுத்து, மெய் எழுத்துக்களையாவது சொல்லிக் கொடுக்கலாமே என்ற எண்ணம் கொஞ்ச காலமாகவே சரவணனுக்கு இருந்தது. இப்பொழுது ராஜாத்தி விஷயமாகக் கண்ணம்மாளைச் சந்தித்துப் பேச வேண்டும் என்று அவன் தீர்மானித்துக் கொண்டான்.

அன்று மாலை ஆறு மணியிருக்கும். சரவணன் தன் தங்கை ராஜாத்தியை அழைத்துக் கொண்டு காளியம்மன் கோயிலுக்குச் சென்று அங்கு தேவியை வணங்கிய பிறகு நேராகக் கண்ணம்மாளின் வீட்டுக்குச் சென்றான். சற்று முன்புதான் வீட்டுக்கு வந்திருந்த கண்ணம்மாள் மீண்டுமொரு முறை குளித்துவிட்டு, குளித்ததால் ஏற்பட்ட புத்துணர்ச்சியோடு வீட்டுத் திண்ணைக்கு வந்து கொண்டிருந்தாள்.

சரவணன் இதற்குமுன்பு அந்த வீட்டுக்குச் சென்றதில்லை. இப்பொழுதுகூட அவன் கண்ணம்மாளின் வீட்டை விசாரித்துக் கொண்டுதான் சென்றிருந்தான். அவளது வீடு நெடுஞ்சாலையைச் சந்திக்கும் சிறிய வீதியின் ஒரு கிளை போலிருந்த சந்தில் இருந்தது. அந்தச் சந்திலேயே ஐந்தாறு வீடுகள்தான் இருந்தன. அவற்றுள் ஒன்று கண்ணம்மாள் குடியிருந்த வீடு. சின்னஞ்சிறிய ஓட்டு வில்லை வீடு அது.

தன் வீட்டுப் படியேறிக் கொண்டிருக்கும் சரவணனையும் ராஜாத்தியையும் பார்த்து விட்டு, ''வாருங்கள்! வாருங்கள்!'' என்று கூறிக் கொண்டே ராஜாத்தியை எதிர்நோக்கி வந்து அவளது பிஞ்சுக் கரங்களை அன்போடு பற்றி வீட்டினுள்ளே அழைத்துச் சென்றாள் கண்ணம்மாள். அவ்விருவரையும் பின் தொடர்ந்து சென்ற சரவணன் நிலைவாயில் படியிலேயே தயங்கி நின்றான்.

''வாருங்கள், ஏன் அங்கேயே நிற்க வேண்டும்?''

சரவணன் வாயிற்படியைக் கடந்து ஒரு கூடம் போல் சற்று விசாலமாகக் காணப்பட்ட ஓரிடத்தில் கிடந்த நாற்காலி ஒன்றில் உட்கார்ந்து கொண்டான்.

கண்ணம்மாளின் கைப்பிடிக்குள்ளிருந்த ராஜாத்தி நிமிர்ந்து கண்ணம்மாளின் முகத்தைப் பார்த்துச் சிரித்தாள். அதைக் கவனித்த சரவணனும் சிரித்துக் கொண்டான்.

''இன்று காலையில் தாமதமாகப் பள்ளிக்குப் போக நேர்ந்தது. அதனால் அவசரத்தில் இந்தப் பெண்ணைக்கூடப் பார்க்காமல் பஸ் ஏறிவிட்டேன். பள்ளியில் என் மனநிலையே சரியில்லாமற் போய் விட்டது. மாலையில் நான் திரும்பி வரும் போது இவளைக் காணவில்லை!'' என்றாள் கண்ணம்மாள் சரவணனைப் பார்த்து. சரவணனோ தனக்கு எதிர்த்தாற்போலிருந்த சிறிய அறை, இன்னும் தனது கண்களுக்குத் தென்படும் அவ்வீட்டின் இதர பாகங்கள் எங்கும் தன் பார்வையைச் செலுத்தி யாரையோ தேடிக் கொண்டிருந்தான். ஆனால் அவன் பார்வைக்கு யாருமே தென்படவில்லை.

''நீங்கள் என்னவோ யோசனையிலிருக்கிறீர்கள் போலிருக்கிறதே!'' என்றாள் கண்ணம்மாள்.

''ஒன்றுமில்லையே!'' என்ற சரவணன் சற்றுக் கூச்சத்துடனேயே அவளது முகத்தைப் பார்த்தான்.

''நான் என் தங்கை விஷயமாக உங்களிடம் வந்தேன். ரொம்ப நாட்களாகவே உங்களைப் பார்த்துப் பேச வேண்டும் என்றிருந்தேன். நேரம்தான் கிடைக்கவில்லை !'' என்றான் சரவணன்.

'' யார் உங்கள் தங்கை ?'' என்றாள் கண்ணம்மாள்.

''என்ன, அப்படிக் கேட்கிறீர்கள்? இவளை உங்களுக்குத் தெரியாதா? இவள்தான் என் தங்கை !''

''இந்தக் கட்டிப் பெண்ணா உங்கள் தங்கை ?''

''ஆமாம்.''

கண்ணம்மாளுக்கு வியப்புத் தாங்க முடியவில்லை. அவள் மெல்ல நகைத்தவாறே சரவணனைப் பார்த்து, ''நான் உங்கள் சொந்த விஷயத்தைப் பற்றிக் கேட்கிறேனே என்று கோபித்துக் கொள்ளாதீர்கள்! உங்களுக்கு வயது என்ன இருக்கும்?'' என்றாள்.

கொஞ்சம்கூடத் தயங்காது, ''முப்பத்தைந்து'' என்றான் சரவணன்.

''இந்த வயதில் சின்னஞ்சிறிய தங்கை ஒருத்தியா உங்களுக்கு? ஆச்சரியந்தான் !'' என்ற கண்ணம்மாள் மணியோசை உதிர்வதைப் போல் மிகக் கண்ணியமாக நகைத்தவாறே அங்கு கிடந்த மற்றோர் ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டாள். சரவணனோ ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் இருந்தான்.

''என் சிநேகிதிக்கு நான் என்ன செய்ய வேண்டும், சொல்லுங்கள்!'' என்றாள் கண்ணம்மாள், சரவணனை உற்றுப் பார்த்து. அவன் முகத்திலிருந்த சிந்தனைச் சுவடுகளோ இன்னும் மறையவில்லை. ஆயினும் அவன் வாய் திறந்து, ''காலையில் உங்களோடு ஒருவரைக் கண்டேனே, அவர் உங்களோடு திரும்பி வரவில்லையா?'' என்று அவளது கேள்விக்குச் சம்பந்தமில்லாத கேள்வியாகக் கேட்டான்.

''அவர் சொந்த வேலையாக நாகப்பட்டினம் போய்விட்டார். அவர் ஒரு மருந்துக் கம்பெனியின் பிரதிநிதி. இந்த ஊருக்கு நேற்று வந்தாராம். ஏதோ என்னை நினைத்துக் கொண்டு இன்று காலையில் இங்கு வந்தார். அதனால்தான் நான் பள்ளிக்குச் செல்வதில் தாமதம் ஏற்பட்டது. நான் வேலை செய்யும் பள்ளிக்கூடத்தைப் பார்க்கத்தான் அவர் என்னுடன் வந்தார்!'' என்றாள் கண்ணம்மாள்.

கண்ணம்மாளின் பதில் சரவணனுக்குத் தெம்பூட்டுவதாக இல்லை.

''அவர் மறுபடியும் எப்பொழுது வருவார் ?''

''அவர் என் மீது அக்கறை கொண்டுள்ள என் சகோதரரா, இல்லையே! அவர் எனக்குத் தூரத்து உறவு! அத்தான் முறை; அவ்வளவுதானே!'' என்றாள் கண்ணம்மாள்.

'இவள் வார்த்தைகளில் உற்சாகம் இல்லையே' என்றுஎண்ணிய சரவணனுக்கு வேதனையாக இருந்தது. அவன் தலை குனிந்து தரையையே பார்த்துக் கொண்டிருந்தவாறு, 'இன்று காலையில் நான் எப்படி யெப்படியெல்லாம் மனக் கோட்டை கட்டினேன்!' என்று எண்ணமிட்டான்.

கண்ணம்மாள் ஏதோ நினைத்துக்கொண்டவளாய், ''என் அப்பா உயிரோடிருந்த போது நிறைய சம்பாதித்துக் கொண்டிருந்தார். அப்போது என் பெற்றோரிடம் இன்று காலையில் வந்து போனாரே இவர், என்னையே மணந்து கொள்வதாக வாக்குக் கொடுத்திருந்தார். ஆனால் என் பெற்றோர்கள் இறந்த பின்னர் இவர் வேறொரு வசதியான இடத்தில் பெண்ணெடுத்து மணந்து கொண்டார்!'' என்றாள்.

சரவணன் தலைநிமிர்ந்து கண்ணம்மாளைப் பார்த்தான். ஏனோ கண்ணம்மாள் இப்

## ஏமாளிகள் அல்ல

''வீடு தீப்பிடித்து விட்டது'' என்று வீட்டுக்காரர் அலறினார். தெருவில் இருந்த அத்தனை பேரும் சேர்ந்து போய்த் தண்ணீர் கொட்டி அணைத்தோம். அதே வீட்டுக்காரர் மறுநாள் 'வீட்டுத் தோட்டத்துக் காய்கறிச் செடிகள் வாடுகின்றன. ஒரு வாருங்கள் தண்ணீர் எடுத்துக்கொடுக்க' என்று அழைக்கிறார். நாமென்ன, ஏமாளிகளா ஓடுவதற்கு?



தேசம் நெருக்கடிக்குள்ளான போது ஒத்துழைத்தோம் அரசாங்கத்தோடு. அது நாட்டின் கௌரவத்தைப் பொறுத்த விஷயம். அதே அரசாங்கம் இந்தியைப் புகுத்திவிட்டு எதிர்க்கட்சிக்காரர்களிடம் ஒத்துழைப்புக் கேட்கிறார்கள். நாங்கள் கொடுத்து விடுவோமா? இந்த நாட்டின் வருங்கால சந்ததியினருக்கு நாங்கள் மனமாரத் தீங்கிழைக்க மாட்டோம்.

(குடந்தையில் நடந்த ஒரு கூட்டத்தில் அறிஞர் அண்ணா பேசியது.)

தகவல்: டி. எஸ். சீதாராமன்

# முற்போக்குள்ள காரியாலயங்களில்
# கீரா ஆபீஸ் ஃபர்னிச்சர்களையே உபயோகிக்கிறார்கள்




**எக்ஸிக்யூடிவ் டெஸ்க்**
இது, மேலே கவர்ச்சியான லாமினேட் ஷீட் அல்லது ஹார்டுபோர்டு பதிக்கப்பட்டு கிடைக்கிறது. இதற்கு பால்-பேரிங்குகள் அமைந்த மூன்று டிராயர்களும் இரு பக்கங்களிலும் வெளியே இழுக்கக்கூடிய ட்ரேயும் உள்ளன. இதற்கு ஒத்த மாதிரியில், சாய்க்கக்கூடிய சுழலும் நாற்காலியும் கிடைக்கிறது.

ஆபீஸுக்கு வசீகரத் தோற்றமும், ஊழியர்களுக்கு ஊக்கமும் அளிக்க கீரா ஃபர்னிச்சர்களையே உபயோகியுங்கள். வேலையை விரைவாகத் தெம்புடன் செய்வதற்கேற்றபடி நவீன மாதிரிகளில் கிடைக்கும் கீரா ஆபீஸ் ஃபர்னிச்சர்கள் பல வருஷ கடும் உழைப்புக்குப் பின்னும் புத்தம்புதிதாகவே காட்சியளிப்பன.





ஜூனியர் எக்ஸிக்யூடிவ்களுக்கும், அஸிஸ்டென்டுகளுக்கும் ஏற்ற கவர்ச்சியான கீரா டெஸ்க்குகளும் கிடைக்கும். இவற்றிற்கும் ஏற்ற மாதிரியில் நாற்காலிகள் உண்டு.

கீ-பிளான்
ஃபர்னிச்சர்

கீரா ஸ்டீல் ஒர்க்ஸ் பிரைவேட் லிமிடெட்,
ஸ்வாமி விவேகானந்தா ரோடு,
சாந்தா க்ரூஸ், பம்பாய்-54

போது பரபரப்படைந்தவளாகக் காணப்பட்டாள். சில விநாடிகளுக்கு முன்பிருந்த அவளது நிலைக்கும் இப்போதைய அவளின் நிலைக்கும் இடையேதான் எத்தனை மாறுதல்கள்! அவள் மிரட்சியடைந்தவளாய்ச் சரவணனைப் பார்த்து, ''நான் உங்களிடம் அநாவசியமாகவெல்லாம் பேசியிருக்கிறேன். ஏனோ என் வாழ்க்கை விஷயங்களையெல்லாம் என்னையறியாமலே உங்களிடம் சொல்லி விட்டேன்!'' என்றாள்.

தெருவில் மழலை உலகின் ஆரவாரம் கேட்டது. ராஜாத்தி கண்ணம்மாளையும் சரவணனையும் கடைக்கண்ணால் பார்த்து விட்டுத் தெருவை நோக்கி நடந்தாள்.

சரவணன் தன் சொந்த விஷயத்துக்கு வந்தான். அவன் கண்ணம்மாளைப் பார்த்து, ''என் தங்கை ராஜாத்திக்கு நான்கு வயது தான் ஆகிறது. ஆனால் அவளிடமோ வயதுக்கு மீறிய அறிவு இருக்கிறது. எதையும் உற்றுப் பார்க்கிறாள். எதையும் புரிந்து கொள்ளத் துடிக்கிறாள்! இன்னும் ஓராண்டு வரை அவள் காலம் ஏன் வீண் போக வேண்டும்? உங்களைக் கொண்டு அவளுக்கு ஏதாவது சொல்லி வைக்கலாம் என்று நினைக்கிறேன். உங்களுக்கு எப்பொழுது முடியுமோ அப்பொழுது நான் அவளை இங்கு அழைத்து வந்துவிடச் செய்கிறேன். நீங்கள் கேட்கும் பணத்தையும் கொடுக்கிறேன். கொஞ்சம் மறுத்து விடாமல்....!'' என்றான்.

கண்ணம்மாள் சிரித்துக் கொண்டாள்.

''அது இருக்கட்டும், உங்களுக்கு அம்மா அப்பா இருக்கிறார்களா?''

''அவர்கள் என் இளமைப் பிராயத்திலேயே இறந்து விட்டார்கள். இப்போது எனக்கு உறவினர் என்று யாரும் இல்லை. நான் ரொம்பவும் கஷ்டப்பட்டுத்தான் இந்த அளவுக்கு வந்திருக்கிறேன்!''

கண்ணம்மாளுக்குச் சரவணன் மீது இரக்கம் ஏற்பட்டது. அவள் அதை வெளிக் காட்டிக் கொள்ளாமல், ''அப்படியானால் உங்களுக்கு நான்கு வயதில் தங்கை ஒருத்தி எப்படியிருக்க முடியும்?'' என்றாள்.

''அதுவா?'' என்ற சரவணன் தெரு வாசலில் நின்று கொண்டு தெருவில் அக்கம் பக்கத்துச் சிறுவர் சிறுமியருடன் விளையாடிக் கொண்டிருந்த ராஜாத்தியைச் சில விநாடிகள் கனிவோடு பார்த்துவிட்டு, மீண்டும் திரும்பிக் கண்ணம்மாளைப் பார்த்து, ''அதுவா? அதில் ஒரு கதை இருக்கிறது'' என்றான்.

கண்ணம்மாள் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டாள். அவளது செவிகளும் விழிகளும் ஆவலைக் காட்டின.

சரவணன் அமைதியாகப் பேசினான்.

''மூன்று வருஷங்களுக்கு முன்பு என் கடைக்கு ஒரு வயது கைக் குழந்தையோடு ஒரு விதவைப் பெண் வேலைக்கு வந்தாள். அவளுக்கு உற்றார் உறவினர் யாரும் இல்லை. பரிதாபப்பட்டுத்தான் அவளை நான் வேலைக்குச் சேர்த்துக் கொண்டேன். ஒரு மாதம் தான் அவள் என் கடையில் வேலை செய்திருப்பாள். அதன் பிறகு ஒரு நாள் ஜுரம் என்று படுத்தாள். அவளுடைய குழந்தையைத் தாயில்லாக் குழந்தையாக்கி விட்டு அவள் போய் விட்டாள். அந்தக் குழந்தை தான் இந்த ராஜாத்தி!''

கண்ணம்மாள் சரவணனைப் பெருமிதப் போடு பார்த்தாள். பிறகு ஏதோ சற்று நேரம் சிந்தித்துக் கொண்டிருந்து விட்டு, ''ராஜாத்தியை வளர்ப்பதில் நீங்கள் மிகவும் சிரமப்பட்டிருப்பீர்களே?'' என்றாள்.

''சிரமமா? அநேக சந்தர்ப்பங்களில் நாம் ஏன் ஒரு பெண்ணாய்ப் பிறக்காமல் போய் விட்டோம் என்று நினைத்து நினைத்து அழுதிருக்கிறேன். எப்படியோ ராஜாத்தி இன்று என் உயிராகி விட்டாள்.....'' என்றான் சரவணன்.

''நீங்கள் கல்யாணம் செய்து கொண்டிருந்தால் இந்தக் கஷ்டங்களெல்லாம் குறைந்திருக்குமல்லவா?'' என்றாள்.

''கல்யாணமா? யார் இருக்கிறார்கள், எனக்குக் கல்யாணம் செய்து வைக்க? எனக்கு ஆசை இருக்கிறது. ஆனால் அதைப் பற்றிச் சிந்திக்க என்னால் முடியவில்லை. நிர்மானமான சிந்தனைக்கு நேரம் போதவில்லையோ என்னவோ? என்ன இருந்தாலும் பெண்ணில்லாமல் கல்யாணம் உண்டா?'' என்றான் சரவணன்.

கண்ணம்மாள் அழகாகச் சிரித்தாள். அவளது பல் வரிசைகள் ஒளி இழைகளாகப் பளிச்சிட்டன.

''பெற்றவர்கள் என்று இருந்திருந்தால் இப்படி விட்டு வைத்திருக்க மாட்டார்கள். எனக்குத்தான் யாரும் இல்லையே!'' என்றான் சரவணன்.

''எனக்குந்தான் யாரும் இல்லை. அதனால் ....அதனால்......!''

''சொல்லுங்கள், ஒன்றையும் மறைக்காதீர்கள்....!''

''ஒன்றுமில்லை. எனக்கு இருபத்தொன்பது வயது ஆகிறது. அதைப் பற்றி எப்பொழுதாவது நினைத்துக் கொண்டால் கடந்த காலம் ஏமாற்றி விட்டதையும் எதிர்காலம் பயங்கரமாகி அச்சுறுத்துவதையும் என்னால் உணராமல் இருக்க முடியவில்லை. உழைப்பு, சாப்பாடு, தூக்கம் இம்மூன்றில் மட்டுமா வாழ்க்கை இருக்கிறது? இதைப் பற்றியெல்லாம் சிந்திக்க நேரம் தான் ஏது...?''

கண்ணம்மாள் சரவணனையே உற்றுப் பார்த்துக் கொண்டு இன்னும் ஏதாவது பேச மாட்டாரா என்ற ஆவலில் இருந்தாள். ஏனோ அவள் மனம் ஆவலைக் காட்டியது. சரவணனோ மேற்கொண்டு ஏதும் பேசாது சற்று நேரம் வாளாவிருந்து விட்டுப் பிறகு மெல்லத் தலை குனிந்தவாறு எதிரிலிருக்கும் கண்ணம்மாளின் பாதங்களைப் பார்த்துக் கொண்டே, ''எனக்குப் படிப்பு இல்லை. அதை நினைத்தால்தான் கஷ்டமாகவும் இருக்கிறது. வெட்கமாகவும் இருக்கிறது!'' என்றான்.

''உங்களுக்கா படிப்பு இல்லை! யார் பெற்ற பெண்ணையோ சொந்தத் தங்கையாகப் பாவிக்கும் அறிவு உங்களுக்கு இருக்

கிறதே! நெஞ்சம் நிறையப் பாசம் இருக்கிறதே! இதற்கு மேலே என்ன படிப்பு வேண்டும்? நான் என்ன படித்து விட்டேன்? ஏதோ உத்தியோகம் பார்க்க, நூறு ரூபாய் சம்பாதிக்கத்தான் படித்திருக்கிறேன்! இதெல்லாம் உண்மைப் படிப்பாகுமா? பி. ஏ., எம். ஏ. என்று அதிகம் படித்து விட்டால் மட்டும் ஒருவரிடம் வாழ்க்கைப் பண்புகள் கூடி விடுமா? பார்க்கப் போனால் நீங்கள்தான் நிறையப் படித்திருக்கிறீர்கள்!'' என்றாள் கண்ணம்மாள்.

''நீங்கள் அழகாகப் பேசுகிறீர்கள்!''

''பேச்சில் என்ன இருக்கிறது? மனம் தான் காரணம்!''

சற்று நேரம் மௌனமாயிருந்த சரவணன் பிறகு, ''எனக்குப் பாங்கியில் ஐயாயிரம் ரூபாய் சேர்ந்திருக்கிறது. இந்தத் தெருக் கோடியில் ஒரு வீடும் வாங்கியிருக்கிறேன். ஆனால்.....!'' என்றான்.

கண்ணம்மாள் மௌனமாயிருந்தாள்.

''அந்த வீட்டில் என்னோடு வாழ்ந்து விளக்கேற்றி வைக்கத்தான் யாரும் இல்லை!'' சரவணன் தொடர்ந்து சொல்லி முடித்தான்.

சரவணனின் குரல் கம்மியதைப் போல் இருந்தது. கண்ணம்மாள் அவனை யோசனையோடு பார்த்தாள். தெருவில் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த சிறுமி ராஜாத்தி மெய்யப் பைய நடந்து வந்து, சரவணனின் மடியில் தொற்றிக் கொள்வதைப் போல் அவனை அணைந்து நின்றவாறே கண்ணம்மாளைப் பார்த்துப் பூப்போலச் சிரித்தாள். கண்ணம்மாளும் பதிலுக்குச் சிரித்தாள். ஆனாலும் சில விநாடிகளுக்கு முன்பு அவள் முகத்தில் ஏற்பட்ட சிந்தனைச் சுவடுகள் இன்னமும் அப்படியேதான் இருந்தன.

''எனக்கு நேரமாகிறது. இவளைப் பற்றிச் சொல்லுங்கள்!'' என்றான் சரவணன்.

''சற்று இருங்கள்! உங்களுக்குக் காப்பிகூட நான் கொடுக்கவில்லையே! இதோ ஒரு நொடியில் வந்து விடுகிறேன்!'' என்று சொல்லி விட்டு உள்ளே சென்றாள் கண்ணம்மாள்.

சற்று நேரத்துக்கெல்லாம் திரும்பிய கண்ணம்மாள் ஒரு சிறிய முக்காலியைக் கொண்டு வந்து சரவணனுக்கு முன்னால் போட்டாள். பிறகு மீண்டும் உள்ளே சென்று இரண்டு சிறிய எவர்சில்வர் தட்டுகளில் பிஸ்கட், வாழைப் பழங்கள் ஆகியவற்றை எடுத்து வந்து அந்த முக்காலியின் மீது வைத்த பிறகு சரவணனைப் பார்த்து, ''சாப்பிடுங்கள்'' என்று சொல்லிவிட்டுத் தட்டிலிருந்த பிஸ்கட்டில் கொஞ்சத்தை எடுத்து ராஜாத்திக்கு நீட்டியவள் பிறகு மறுபடியும் உள்ளே சென்று இரண்டு தம்ளர்களில் காப்பி கொண்டு வந்து அதே முக்காலி மீது வைத்துவிட்டு எதிரிலிருந்த ஸ்டூலில் உட்கார்ந்து கொண்டாள்.

''பெற்றவர்கள் இல்லாத பெண்ணின் மனத்தை யார்தான் புரிந்து கொள்ள முடியும்?'' என்றாள் கண்ணம்மாள்.

சரவணன் அவளின் கண்களைச் சில விநாடிகள் உற்றுப் பார்த்தான்.

கண்ணம்மாள் சரவணனின் பார்வையைத் தாள மாட்டாதவளாய்த் தலையைக் குனிந்து கொண்டாள். அவளது கன்னங்களில் செம்மை படர்ந்தது. ஏனோ சரவணனின் மனத்தில் புல்லரிப்பு ஏற்பட்டது.

''நீங்கள் இப்பொழுது ரொம்பவும் அழகாக இருக்கிறீர்கள்!'' என்றான்.

''நான் எப்பொழுதுமே இப்படி இருக்க வேண்டும் என்றுதான் ஆசைப்படுகிறேன்.''

''அப்படியானால்.... அப்படியானால்....!''

''சொல்லுங்கள்!''

''நாம் இருவரும் கல்யாணம் செய்து கொள்வோமா?'' சரவணன் துணிவை வரவழைத்துக் கொண்டு கேட்டான்.

''சற்று முன்பு நான் இதைத்தான் கேட்க நினைத்தேன். ஆனால் பெண்ணாய்ப் பிறந்து விட்டதால் அப்படி வெளிப்படையாகக் கேட்க முடியாது தவித்தேன். நீங்கள் கேட்டு விட்டீர்கள்!'' என்றாள் கண்ணம்மாள்.

சரவணனின் மனம் துள்ளிக் குதித்தது. இதற்கு முன்னால் அவன் மனம் இப்படி ஒரு போதும் அனுபவித்ததில்லையே!

ராஜாத்தியை ஒரு கையால் பற்றியவாறு, ''சரி, நான் வரட்டுமா?'' என்று சொல்லிக் கண்ணம்மாளிடம் விடைபெற்றுக் கொண்டு தெரு வாசல் வரை வந்த சரவணன், திடீரென்று திரும்பி, நிலைப்படியோரம் நின்று கொண்டு அவனையே பார்த்துக் கொண்டிருந்த கண்ணம்மாளிடம் வந்தான். இப்பொழுது ராஜாத்தி தெரு வாசலிலேயே நின்று கொண்டிருந்தாள்.

''நம் கல்யாணத்தைப் பற்றி என் நண்பர்களிடம் என்ன சொல்வது? காதல் கல்யாணம் என்று சொல்லவா?'' என்றான்.

சிரித்தாள் கண்ணம்மாள். ஆனால் அந்தச் சிரிப்பு நீண்ட நேரம் அவளிடம் இருக்கவில்லை. சிந்தனைப் பொலிவு அவள் முகத்தில் கூட அவள் நிதானமாகச் சரவணனைப் பார்த்து, ''நமக்குப் பெற்றவர்கள் இல்லை. காலம் கடந்து நாமே கல்யாணம் செய்து கொள்ளும் கல்யாணம் இது! ஏற்பாட்டில் நடைபெறும் கல்யாணம்தான்! கல்யாணத்துக்குப் பிறகு நாம் ஒருவரையொருவர் காதலித்துக் கொள்வோமே! நமக்குப் பெற்றவர்கள் இருந்தால் அதைத்தான் விரும்புவார்கள்!'' என்றாள்.

''அண்ணா!'' என்று கொஞ்சியவாறு ராஜாத்தி மெல்ல அவர்களிடம் வந்தாள்.

அருகில் வந்த ராஜாத்தியைத் தூக்கிக் கொண்ட கண்ணம்மாள் அவளது கன்னத்தில் முத்தமிட்டாள். ராஜாத்தியின் மற்றொரு கன்னத்தில் சரவணனும் முத்தமிட்டான்.

''நமக்குக் கல்யாணம் நடந்த பிறகு நான் இவளுக்கு மட்டுமேதான் ஆசிரியை!'' என்றாள் கண்ணம்மாள், சரவணனை ஜாடையாக ஓரக் கண்களால் பார்த்தவாறே!

இருள் பரவும் நேரமாகி விடவே மேற்கொண்டும் அங்கே தொடர்ந்திருக்க விரும்பாத சரவணன், ராஜாத்தியைத் தூக்கிக் கொண்டு கண்ணம்மாளின் வீட்டுப் படிகளில் இறங்கித் தெருவில் நடந்தான்.

பண்டிட்
டி. கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

**ஆரோக்யத்திற்கும் பலத்திற்கும்**

ஆயுர்வேதாஸ்ரமம் லிமிடெட், மதராஸ்-17



*நான் பிறவியிலேயே அழகுதான்!*




அம்மாவோ என்
இளங் கண்களுக்கு
**"ஐடெக்ஸ்" கண்மை**
தீட்டி, என் நெற்றியில்
"ஐடெக்ஸ்" பிந்தி குங்கும
சாந்து, "ஐடெக்ஸ்" குங்கும்
பேஸ்டினால் பொட்டிட்டு,
மேலும் மேலும் என்னை
அழகுறச் செய்கிறாள்.




அரவிந்த் லாபரட்டரீஸ், P.B. 1415 - மதராஸ்-17

GP



# ரெக்கரிங் டிபாசிட்

திட்டத்தின் மூலம் **8¼%** வரையில்
கவர்ச்சிகரமான வட்டியை அடையலாம்.

மாதா மாதம், ரூபாய் ஒன்று
முதல் உச்சவரம்பின்றி செலுத்தி
19, 36, 48 மாதங்களில்
பெரும் தொகைகளைப் பெறலாம்.




| மாதா மாதம் செலுத்தும் தொகை | மாதங்கள் 19 முடிவில் பெறும் தொகை | 36 | 48 |
|---|---|---|---|
| Rs. 1 | 20 | 40 | 56 |
| Rs. 2 | 40 | 80 | 112 |
| Rs. 5 | 100 | 200 | 280 |
| Rs. 100 | 2000 | 4000 | 5600 |

தஞ்சாவூர் பர்மனெண்ட் பாங்க் லிமிட்டெட்
பதிவு அலுவலகம்: 1087, மிஷன் தெரு, தஞ்சாவூர்

K. V. சச்சிதானந்த மூப்பனார்
சேர்மன்
R. K. மாதவன் — செக்ரட்டரி



# ELECTRIC MOTORS

**STURDY - SAFE - DEPENDABLE**

***RANGE INCLUDES***

**INDUCTION MOTORS** Squirrel Cage both Screen Protected and Totally Enclosed Fan Cooled types as well as Slipring type for use on 400/440 v. Capacities up to 20 b.h.p.

Manufacturing programme includes production of Squirrel Cage & Slipring types up to 200 h.p.

**LOOM MOTORS** Totally Enclosed 3 phase for outputs from 0.50 h.p. to 1 h.p.

**CARD MOTORS** Totally Enclosed, High Torque 400/440 v. 3 phase, 50 cycles a.c., 1.5 h.p. to 2 h.p.

**RING-FRAME DRIVE MOTORS** Squirrel Cage, Totally Enclosed Fan Cooled type, 10 h.p. & 12.5 h.p.



INDUCTION MOTOR

LOOM MOTOR



*MANUFACTURERS*

**ELECTRIC CONSTRUCTION & EQUIPMENT CO. LTD.**

9, KALIPRASANNA SINGHEE ROAD, CALCUTTA-2

PARBANGLA (24 PARGANAS) - BOMBAY - DELHI - MADRAS - HYDERABAD - VISAKHAPATNAM
BANGALORE - PATIALA - JABALPUR - PATNA - JAIPUR - KANPUR

# மலேசியா மாநாடு

## சா. கணேசன் எம்.எல்.ஏ.,

மலேசியாவில் பத்திரிகை நடத்துபவர்கள் நீண்ட காலமாகக் கதை, கவிதை, கட்டுரைகளைத் தமிழகத்திலிருந்தே இறக்குமதி செய்ய வேண்டிய நிலை இருந்தது. அது ஒரு மோகமேயன்றி வேறன்று. ஆனால் தன்னம்பிக்கையும், மெய்யுணர்வும் உள்ளவர்கள் மலேசியத் தமிழ் எழுத்தாளர்களை ஊக்குவித்தனர். அதன் காரணமாக இன்று முற்றிலும் இறக்குமதி நின்று விட்டது. எழுத்தின் தரமும் எவ்விதத்திலும் தாழ்ந்துவிடவில்லை என்பதைப் பல சான்றுகளுடனும் ஏராளமான எழுத்தாளர் பெயர்ப் பட்டியலுடனும் நிரூபித்தார். மலேசிய எழுத்தாளர்கட்குத் தமிழகத்தில் வரவேற்பிருக்க வேண்டும் என்றார். இதன் மீது நடந்த விவாதத்தில் தமிழகப் பெருமக்கள் சிலரும் பங்கு கொண்டனர். திருவாளர்களான மு. வ., கி. வா. ஜ., திருவாசகமணி ஆகியவர்களுடன் நானும் கலந்து கொண்டேன்.

மலேசிய எழுத்தாளர்களின் நல்ல படைப்புக்குத் தமிழகமும், தமிழக அரசும் என்றும் வரவேற்பளிப்பதுடன், சம்மானமும் வழங்கும் என்று உறுதி தந்தோம்.

மூன்றாவது இருக்கை 2.45க்கு அமைந்தது. லண்டன் பல்கலைக் கழகத்துப் பேராசிரியர் திரு சி. டி. கோவான் தலைமை ஏற்றார். ''1500க்குப் பின் தென் கிழக்காசியா'' என்பது பொதுத் தலைப்பு. திருவாளர்களான அரசரத்தினம், வெர்ஹோவென், ஆர். கே. ஜெய்ன், கொர்னியல்சிங் சாண்டு, மெ. நடராஜன், எம். பழனியப்பன், லொரன்ஸ் கினிக், தனிநாயக அடிகள் ஆகியோர் தம் எழுத்துரைகளை வழங்கினர்.

இரவு 8—30 மணிக்கு 'இசையும் கூத்தும்' என்ற தலைப்பில் தனியரங்கு கூடியது. திரு தெ. பொ. மீ. தலைமை பூண்டார். திரு எஸ். இராமநாதன் வீணைதரராய்க் காட்சியளித்தார். காட்சி மட்டுந்தானா, இசை அமுதையும் செவிகளாரப் பொழிந்தார். சிலப்பதிகாரக் கருத்துக்களையும் வீணையின் நரம்பையும் வைத்துக் கொண்டு என்னென்ன அற்புதங்களை விளைவித்துவிட்டார் என்பதை எப்படி நான் சொல்ல முடியும்? இசை என்னவோ ஜடத்தையும் உருக்கிவிடும் என்பார்கள். அதை நான் கண்டதில்லை. ஆனால் கட்டுப் போட்டாலும் இசையை அறியாத, சங்கீதம் கிலோ என்ன விலை என்று கேட்கக் கூடிய எத்தனை எத்தனையோ பேரை — நல்லறிஞர்களை — இருந்தபடி இருக்க வைத்து விட்டதை, ஆம் ஜடம் ஆக்கி விட்டதை அன்று நான் நேரடியாகக் கண்டு கொண்டேன்.



ரப்பர் மரத்தில் பால் வெட்டுகிறாள் ஒரு தமிழ் மகள்.

அப்படியே அன்று திருமதி நிர்மலா ராமச்சந்திரன் 'பண்டைத் தமிழரின் நடனக் கலை'யை ஆடிக் காட்டினார், பாடிக் காட்டினார், பேசியும் காட்டினார். ஆங்கிலத்தில் பேசிய பின்னர் பாட்டைப் பொருளுடனும், பாவத்துடனும் விளக்கிவிட்டு, ஆடிய அருமையை எத்துணை புகழ்ந்தாலும் தகும். நாட்டியத்திற்குப் பின்னியம் கொட்டுவார்கள் பலர் வேண்டுமே. அதற்கென்ன செய்தார் என்று கேட்கிறீர்கள்! ஒரு வேளைக் கூத்துக்காக நட்டுவனார்களையும் பின்னியக்காரர்களையும் உடனழைத்துச் சென்றால் செலவென்ன ஆகும்? அரசாங்கம்தான் அனுமதிக்குமா? எனவே வேண்டிய பாடல்கள், பதங்கள் அனைத்திற்கும் 'பின்னியம்', ஒலிப்பதிவு செய்யப்பட்ட நாடாக்களாகவே வந்து விட்டன.

இந்த நிகழ்ச்சிகள் இரண்டும் பல்வேறு நாட்டுப் பெருமக்கள் யாவருக்கும் எல்லையற்ற மகிழ்ச்சியை ஊட்டின. அத்துடன் தமிழகத்தின் உண்மையான நாகரிகத்தின், கலைவளத்தின், உயர்வையும் ஏற்றுக்கொள்ளச் செய்தன என்றால் அது முழுக்க முழுக்க உண்மையே!

ஏப்ரில் 21 வியாழக் கிழமை காலை 9-30 மணிக்கு அன்றைய கருத்தரங்கின் முதலிருக்கை கூடிற்று. கூடிய இடமோ வழக்கமாகக் கூடும் மாநாட்டு மண்டபமல்ல; ஆனால் பல்கலைக் கழகத்தின் காட்சிக்கூடமாகும். ஏன் என்று கேட்கிறீர்கள்? இவ்விருக்கையில் பங்கு கொள்பவர்களில் ஒருவரையன்றி மற்றவர் யாவரும் ''படவுரை'' நிகழ்த்த வேண்டியவர்கள். அதாவது ''பாட்டும் — உரையும்'' என்கின்றோமே அதைப் போலப் படத்தைக் காட்டி உரை நிகழ்த்த வேண்டும். அதற்குப் பேச்சு மேடை பயன் தராது. படத்தைக் கண்ணாடி மூலம் பிரதிபலித்து அதை எதிரில் உள்ள வெள்ளித் திரையில் ஒளியுருவாகக் காட்டவல்ல எபிடியாஸ்கோப் (Epidiascope) கருவி இன்றியமை

யாதது. எனவே, அக்கருவியுள்ள இடத்துக்கு நாம் போய்த்தானாக வேண்டும்; இல்லையா ?

இதில் விசேடம் என்னவென்றால் பேச்சரங்கில் பேசுவோர் மேடையில் இருக்கக் கேட்போர் கீழே வீற்றிருப்பர். இங்கோ 'படவுரை' நிகழ்த்துவோர் கீழே நிற்கக் கேட்டுக் கொண்டிருப்பவர் படியடுக்கு வரிசையில் வீற்றிருப்பர்.

மற்றொரு விசேடம், இவ்விருக்கை ஒன்றுக்குத்தான் தலைவர் இல்லை. தலைவர் இல்லாவிட்டாலும் தலைப்பிருந்தது. 'கலையும் தொன்மை மரபும் (Art and Antiquity) என்பதே அரங்கின் பொதுத் தலைப்பு. தலைவர் இன்மையால், தனிநாயக அடிகள் உரையாளர்களை அறிமுகப்படுத்தி உரையாற்றக் கேட்டுக் கொண்டார்.

முதலில் கோலன் பல்கலைக் கழகத்து திரு கிளாஸ் எல். ஜானர்ட் ''கேரளப் பெயர் பற்றிய முன்னை நாள் நிகழ்ச்சிகள்'' என்ற படவுரையை நிகழ்த்தினார். அடுத்து சென்னை அரசாங்கத் தொல்பொருள் துறைத் தனி அதிகாரி திரு ஆர். நாகசாமி ''தமிழகக் கட்டடக் கலை'' பற்றிய ஒரு சிறப்புரை வழங்கினார். அதில்:

''தமிழகத்தில் சங்ககாலத்துக்கு முன்னரே தோன்றி நெறிப்படி வளர்ந்து வந்த கலைகளே பல்லவர் காலத்தில் உன்னத நிலையை அடைந்தன. அண்மையில் காவிரிப் பூம்பட்டினத்தில் அகழ்வாராய்ச்சி நடத்திய போது கற்சிற்பங்களும் கதை உருவங்களும் கிடைத்திருக்கின்றன. இவை ஆந்திர நாட்டு அமராவதியிலும் நாகார்ஜுன கொண்டாவிலும் கிடைத்தவற்றை ஒத்திருக்கின்றன. ஆந்திராவில் காணப்படுவது போன்ற புத்தவிகாரம் ஒன்றும் காவிரிப் பூம்பட்டினத்தில் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. இவற்றால், தமிழக பாணிக்கும், ஆந்திரப் பாணிக்கும் உள்ள ஒற்றுமை புலப்படும். இங்ஙனமே, மகதம், அவந்தி, கூர்ஜரம் போன்ற இந்தியப் பகுதிகளில் காணப்படும் கலைகளும் தமிழகக் கலையுடன் தொடர்புடையனவாய் விளங்குகின்றன.

கடல் கடந்தும் நமது கலை மணம் வீசியதை ஈழம் முதலான வேற்று நாடுகளில் நாம் காண்கிறோம். பிற நாட்டுக் கலைகளுடன் தொடர்பு கொண்டு வளர்ந்தாலும் தமிழகக் கலை ஒருவகைத் தனித்துவம் உள்ளதாகவே துலங்குகிறது. குறிப்பாக மண்ணீட்டாளர்கள் (கதை ஓவியர்கள்) கோயிற் சுவர்களைக் கதை உருவங்களால் அழகூட்டினர். பல்லவர் கலை படைப்பான திரு அதிகை வீரட்டானம் இன்றும் அதை நமக்கெல்லாம் புலப்படுத்திக் கொண்டிருக்கிறது.

இம்மண்ணீட்டாளர்களின் நெறியை மனத்திற் கொண்டே பல்லவர்கள் குடைந்தும், பொளிந்தும், கட்டியும் கற்றளிகளைச் சமைக்கலாயினர். மண்ணீட்டாளரைப்பற்றிச் சிலப்பதிகாரமும், மணிமேகலையும் சிறக்கப் பேசுகின்றன. இவற்றை யெல்லாம் நாம் சிந்தித்துப் பார்க்கும் போது பல்லவர் கலை என்பது தொன்று தொட்டு வந்த தமிழகக் கலையேதான் என்பது தெள்ளிதிற் புலனாகும். ஆனதாலேதான், பல்லவர் படைப்பு தொடக்க முதலே, பிற இந்திய முறையிலிருந்து வேறுபட்டுத் தனித்து நிற்கும் தன்மையைக் காண்கிறோம்.

இவற்றை யெல்லாம் நாம் கருத்திற் கொண்டு ஆய்வோமானால், பல்லவர்க்கு முந்திய காலம் 'இருண்ட காலம்' என்பது எவ்வளவு பெருந் தவறு என்பது நன்கு புலப்படும் என்ற நற்கருத்துக்களைத் தக்க சான்றுகளுடன் விளக்கினார்.

அடுத்து நான் அழைக்கப் பெற்றேன். ''படிமக் கலையின் கோட்பாடுகளுள் சில'' என்பது எனக்குத் தந்த பொருள். அதை இருபத்தொரு படங்களுடன் கூடிய புத்தகமாக அச்சிட்டுக் கொண்டு போயிருந்தேன். அதை வழங்கி விட்டுச் சுமார் இருபத்தைந்து நிமிஷங்களில் எப்படியோ பேசி முடித்தேன். என்னைப்பற்றி நானே எப்படி விமரிசனம் செய்ய முடியும்? சில படங்களை வெள்ளித் திரையிலிட்டு அவற்றின் அமைதிகளையும், அதன் பொருளையும், உட்கருத்துக்களையும் விளக்கி விட்டும், அல்லது விளக்கிக் கொண்டும் உரையாற்றினேன். அதன் சாரத்தை மட்டும் ஒரு சில வரிகளில் கூறியமைகிறேன்.

என் பேச்சுத் தொடக்கத்தில் உருவ வழிபாட்டுத் தத்துவத்தை விளக்கினேன். அப்பொழுது 'சிவலிங்கம் ஆண் பெண் குறிகளின் இணைந்த தோற்றமே' என்று அறியாமையாலோ அன்றி இந்து சமயத் தத்துவங்களின்மீது கொண்ட வெறுப்பாலோ கூறுகிறார்களே, அது எத்தனை அபத்தம் என்பதைச் சான்றுகளுடன் விளக்கினேன். 'விநாயகர், நடராஜர், சுப்பிரமணியர் ஆகிய மூன்று' திருமேனிகளையும் பற்றிக் கலை, தத்துவம், விஞ்ஞானம் ஆகிய அடிப்படையில் சிறிது பேசி, இவை ஆறாதாரத்தில் அமைந்து ஓங்காரத்தை உணர்த்திக் கொண்டிருக்கின்றமையைப் படவுரையாக நிகழ்த்தினேன்.

மாநாட்டில் பங்குகொண்ட குமாரி பிருந்தா ஆங்கிலேயரானாலும் தமிழ் ஆர்வம் மிக்கவர்.



எத்தனை எத்தனையோ மூர்த்திகள் விளங்கும் இந்நிலத்தில் அத்தனையும் 'தியான சுலோக' அடிப்படையில் செய்யப்படவில்லை என்பதையும், அப்பர் போன்ற அருட்செல்வர்களின் பாடல்களும் தியான சுலோகமாய்ப் பயன்பட்டிருக்கின்றன என்பதையும் திருவலம்புரம் பண், மூர்த்தி, கல்வெட்டு ஆகிய மூன்றின் துணை கொண்டு விளக்கினேன்.

இறுதியில் தமிழகத் திருமேனிகளுள் இன்று வரை புத்தம் புது படைப்பாக

இருக்கும் 'தமிழ்த் தாயைப்' பற்றியும் குறிப்பிட்டு என் படவுரையை நிறை வேற்றினேன்.

பின்னர் திரு வி. பி. ராமன் ''பண் டைத் தமிழகத்தில் இசை'' என்ற எழுத் துரையைச் சமர்ப்பித்தார். அதில் பண் வேறு, ராகம் வேறு இரண்டுக்கும் எவ்விதத் தொடர்புமில்லை என்று வலியுறுத்தினார்.

இறுதியாகத் திரு ஐராவதம் மகாதேவன் ''சங்க காலத் தமிழ்ப் பிராமிக் கல்வெட்டு'' களைப் பற்றிய தமது எழுத்துரையைப் படவுரையாக நிகழ்த்தினார். சுமார் நாற்பது பக்கங்கள் கொண்ட தட்டெழுத்துப் படி யின் சாற்றைச் சுமார் முப்பது நிமிடங்களில் பிழிந்து தந்தார். கல்லைப் பிசைந்து கனி யாக்குவான் அந்த மகாதேவன் என்பார் மணிவாசகர். இந்த மகாதேவனோ கல்லைப் பிழிந்து ரசமாக்கி யாவரும் பருகி மகிழுமா றன்றோ செய்து விட்டார்!

1903ல் திரு வெங்கோபராவ் தமிழ்ப் பிராமிக் கல்வெட்டுக்களை வெளிப்படுத்தியது முதலாக திருவாளர்களான எச். கிருஷ்ண சாஸ்திரி, கே. வி. சுப்பிரமணிய ஐயர் ஆகிய வர்கள் ஆற்றிய பணி இடையாக இவ்வாண் டில் அவர் வெளிப்படுத்தியது ஈறாக ஒரு திறனாய்வே செய்து விட்டார். அவ்வளவும் பயனுள்ளவையே என்றாலும் முழுவதையும் அப்படியே எழுதாமல் சுருக்கித் தருகிறேன்.

பாண்டிய நாட்டிலும், கொங்கு நாட்டி லும் காணப்படும் அரிய கல்வெட்டுக்களை யெல்லாம் விளக்கினார். அரச்சலூர், மாங் குளம், விக்கிரமன் களம், புகளூர் (ஆறு நாட்டான் மலை) ஆகியவை இடம் பெற்றன. சேரல் இரும்பொறை, நெடுஞ்செழியன் போன்ற பண்டைத் தமிழ் மன்னர்கள் வந்து திருவோலக்கம் கொண்டருளினார்கள். அழகர் மலைக் கல்வெட்டு, அந்தக் காலத்தில் மதுரை மாநகரில் வாழ்ந்த பெருங்குடி வணிகர்களை எல்லாம் அழைத்து வந்து அவையில் அமர்த்திற்று.

இதுவரையில் கண்டவற்றுள் எல்லாம் மிக மிகப் பழைமையானதான ஓர் ''ஓட்டோலை யும்'' கூடவன்றோ வந்து நின்றது. ஏட் டோலையைக்கூட இக்காலத்தில் பலர் கண் டிருக்க மாட்டார்கள். அப்படிப்பட்டவர்கள் ஓட்டோலையைக் கண்டதும் விழித்த கண் ணும் திறந்த வாயும் மூடாமலே வியப்புக் கடலுள் மூழ்கி விட்டனர். இதென்ன ஓட் டோலை என்று கேட்கிறீர்கள்! (மண் சட்டி யின் ஓடு போல) கனக் குறைவாக மண்ணி னால் பலகை செய்து ஈரமாயிருக்கும் போதே அதில் பிடிபாட்டை எழுதிக் காள வாயில் வைத்துச் சுட்டு எடுத்துக் கொள் ளும் ஒன்றுதான் அது.

எங்கள் முன்னிலையில் வெள்ளித்திரையில் வந்து நின்ற அந்த ஓட்டோலை தேவ தத்தா எழுதிக் கொடுத்த ஓர் ஒத்திப் பத்திரமாகும். (தொடரும்)



''அதான் அட்மிஷன் எல்லாம் முடிந்து போச்சே, ஹெட்மாஸ்டர் வீட்டு வாசலில் இன்னும் ஏன் இந்த வரிசை?''

''கறிகாய்க்காரர், நெய்க்காரர், பால் காரர் முதலியவர்கள் கடன் பாக்கிக்கு நிற்கிறார்கள்!''



மணமாகாதவன்: நான் கல்யாணம் செய்து கொள்வது மாதிரி சொப்பனம் கண்டேன். அந்தச்சமயம் பார்த்து அநியாயமாய் இந்த அலாரம் மணி அடிச்சு என்னை எழுப்பிவிட்டது!

மணமானவன்: கல்யாணம் செய்து கொள்ளாமல் 'ஜாலி'யாக இருப்பது மாதிரி சொப்பனம் கண்டேன். அந்தச் சமயம் பார்த்து என் குழந்தைகள் ஒரேயடியாக அலறி என்னை எழுப்பிவிட்டன!

ஜலதோஷம் மற்றும் புளூ வரும்

தினத்திலே நினையுங்கள்

அனஸினை மனத்திலே.

வீட்டில் வேண்டிய அனஸின்

வைத்திருக்கத் தவறாதீர்கள்.

அது எப்போதும் தேவைப்படலாம்.

அறிகுறிகள் : தலைவலி, ஜலதோஷம் மற்றும் புளூ, பல் வலி, உடல் வலி, தசை வலி.

மருந்தளவு: வயது வந்தவர்களுக்கு 2 வில்லைகள். குழந்தைகளுக்கு 1 வில்லை. எத்தனை எளிய முறை!




அனஸின்

சிறந்தது

ஏனெனில் அது

4 வழிகளில் வேலை செய்கிறது



ASP/GM/AN-12 TAM

Registered user: GEOFFREY MANNERS & COMPANY LIMITED



# ஊர் வம்பு

## ஓவியக் கண்காட்சி

இம் மாதம் 12, 13ந் தேதிகளில் சென்னை மவுண்ட்ரோடில் உள்ள பிலிப்ஸ் மாளிகைக்குள் போனவர்கள் ஓர் அற்புதமான காட்சியைக் கண்டிருப்பார்கள். இளம் உள்ளங்களின் கற்பனைகளைக் காகிதத்தில் வடித்தெடுத்ததொரு கண்காட்சிதான் அங்கு எல்லோரது கவனத்தையும் கவர்ந்து கொண்டிருந்தது. இந்தியாவில் உள்ள பிரபல பிலிப்ஸ் நிறுவனத்தின் பல்வேறு பிராந்தியங்களில் பணியாற்றும் ஊழியர்களுடைய குழந்தைகளின் கற்பனைக்கும் கைவண்ணத்துக்கும் ஒரு போட்டி நடத்தினார்கள், அவர்களது குடும்பப் பத்திரிகையான 'பரிசய்' (பரிச்சயம் என்பதன் திரிபு) மூலம். அந்த ஸ்தாபனத்தின் வளர்ச்சி பற்றிய செய்திகளைத் தரும் பத்திரிகையான 'பரிசய்'. இதில் கலந்து கொண்டு வெற்றி பெற்ற குழந்தைகளுக்கு இந்தக் கண்காட்சித் திறப்பு விழாவில் பரிசுகள் வழங்கினார்கள். கண்காட்சியைத் திறந்து வைத்துப் பரிசுகளை வழங்கியவர் ஸ்ரீமதி சவுந்திரம் கைலாசம் அவர்கள். சாச்சா நேருவைப் பிஞ்சுக் கரங்கள் வரைந்த ஓவியங்களின் தனிப் பகுதியொன்றே அங்கு இருந்தது. மொத்தப் பரிசுகளில் பெரும் பகுதி தென் பிராந்தியத்துக்குக் கிடைத்திருப்பது தென்னகக் குழந்தைகளின் கலை உள்ளத்துக்கு ஒரு சான்று. ஒவ்வொரு ஆண்டுமே 'பரிசய்' இந்தப் போட்டியை நடத்துமாம். ஒருமைப்பாட்டைக் குழந்தை உள்ளத்திலேயே வளர்ப்பதற்குப் 'பரிசயின்' இந்த முயற்சியைப் பாராட்டுகிறோம். பிலிப்ஸ் நிறுவனம் தம் ஊழியர்களின் குடும்பம், குழந்தைகளிடையேயும் கவனம் செலுத்தும் பண்பாட்டைப் பாராட்டுகிறோம்.

படத்தில் நாம் காணும் யுவர்களும் யுவதிகளும் யாரைச் சுட்டிக் காட்டுகிறார்கள்? உங்களையும் என்னையும்தான்!

''எல்லாமே நல்லவையாக நடக்குமாறு பார்த்துக் கொள்வது என் சக்திக்கு அப்பாற்பட்ட விஷயம்; ஆனால் என்வரையில் நான் நல்லவனாக நடந்துகொள்வது என் சக்திக்கு உட்பட்ட விஷயம்தான். அப்படி நடந்து கொள்ளவே ஒவ்வொரு விநாடியும் முயலுவேன்'' என்றார் திரு ஒ. வா. ஐ.



## 'ஒரு சங்கீத அதிர்வேட்டு'

தமது மணி விழாக் கொண்டாட்டத்தின் இறுதியில் தமது பதிலுரையை நிகழ்த்தியபோது.

இதையேதான் எம். ஆர். ஏ. கோஷ்டியினரும் கூறுகிறார்கள். உலகை உய்விக்க நாம் பொறுப்பேற்க வேண்டாம்; நீங்களும் நானும் நேர்மையாகவும் ஒழுக்கத்துடனும் வாழ முயலலாம்; நட்புறவுடன் திகழலாம் என்கிறார்கள். இதனை வெறுமனே இப்படி வசன நடையில் இரண்டு வாக்கியங்களில் கூறி முடித்து விடுகிறார்களா? இல்லை! பாட்டு, வாத்திய இசை, நாடகம், நடனம் போன்ற பல உத்திகளைக் கையாண்டு இந்த எண்ணத்தை நமது மனத்தில் பதிய வைக்கிறார்கள்.

எம். ஆர். ஏ. குழுவினரால் தயாரிக்கப்பட்டு, பம்பாய், பூனா, பங்களூர், எர்ணாகுளம் ஆகிய இடங்களிலெல்லாம் வெற்றிகரமாய் அரங்கேறியிருக்கும் 'லிவ் அவுட் ஆஸ்திரேலியா' என்ற கதம்ப நிகழ்ச்சியினை 'ஒரு சங்கீத அதிர்வேட்டு' என்று ஒரு பத்திரிகை வர்ணித்துள்ளது.

ஐம்பது இளைஞர்கள் ஒன்றாகச் சேர்ந்து குதூகலத்துடன் கும்மாளம் போடுவதை இது பெருமளவுக்குச் சரியாக வர்ணிக்கிறது என்றே சொல்லலாம். சந்தோஷம் நிரம்பிய பாட்டு, நடனம், நாடகம் ஆகியவற்றை உள்ளடக்கிய — தரமுயர்ந்த இந்தக் கதம்ப நிகழ்ச்சியில் ஆஸ்திரேலியா, நியூஜிலாந்து, கொரியா, பார்மோஸா (டாய்வான்) ஆகிய தேசங்களிலிருந்தெல்லாம் வந்துள்ள திறமை மிக்க இளம் கலைஞர்கள் இடம் பெறுகின்றனர் என்று அறிகிறோம்.

ஜூலை 23 ஆம் தேதி முதல் 27 வரை இக்கதம்ப நிகழ்ச்சி சென்னை மியூஸிக் அகாடமி அரங்கில் நடைபெறவிருக்கிறது.

''பொம்மைகளாவது பேசுவதாவது? இதென்ன விக்கிரமாதித்தன் காலமா? அவன் சிம்மாசனத்திலுள்ள பதுமைகள் தான் பேசினவாம்!''

''இந்த இருபதாம் நூற்றாண்டிலேயே பொம்மைகள் பேசுவதைக் காணவேண்டுமானால் பழைய மாம்பலத்துக்கு இப்போதே என்னுடன் வரலாம் 'விழியாலே மொழி பேசும் ஜீவனுள்ள பொம்மைகள்!''

''பேஷ்! பேஷ்!... அந்த மாதிரி பொம்மைகளை அபூர்வமாகத்தானே பார்க்க முடிகிறது!''

★

ஆந்திர நாட்டைச் சேர்ந்த இரு சகோதரிகள், கனகதுர்க்கா, சாரதாதேவி ஆகியோர். இருவருக்குமே சித்திரக்கலையில் நல்ல பயிற்சி உண்டு. ஐந்து வருடங்களுக்கு முன்பு பொழுது போக்காகத் துணியினாலான பொம்மைகள் செய்ய ஆரம்பித்தார்கள். இப்போது பல உதவியாளர்களை வைத்திருந்தும் கூட அவர்களுக்குப் பொம்மைகள் தயாரிக்கப் பொழுது




போதவில்லை. காரணம், அவர்களுக்கு பம்பாய், கல்கத்தா, டில்லி போன்ற இடங்களிலிருந்தும், சென்னை நகரிலுள்ள, விக்டோரியா டெக்னிகல் இன்ஸ்டிடியூட், காதி கிராம உத்யோக்பவன் போன்ற வியாபார ஸ்தாபனங்களிலிருந்தும் ஆர்டர்கள் வந்து குவிகின்றன. இந்திய கலாசாரத்தைப் பிரதிபலிக்கின்றன என்ற பிரமிப்பில் வெளி நாட்டினர் வாங்கிச் செல்கிறார்கள். இருக்குமிடத்தை அழகு செய்கின்றன என்ற வியப்பில் நம்மவர் வாங்குகிறார்கள்.

சகோதரிகளில் மூத்தவரான ஸ்ரீமதி கனகதுர்க்காவைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தோம்.

''இந்தப் பொம்மைகளைத் தயாரிக்க ஆரம்பத்திலே என்ன செய்கிறீர்கள்?''

துணியிலே டிராயிங் போட்டு, அதைக் கட் பண்ணி எடுக்கிறோம். அந்தக் கட் பண்ணின துணியை அங்கே அங்கே தைத்துவிட்டு, கஞ்சியில் தோய்த்த பஞ்சை அந்தத் துணி உறைக்குள்ளே பக்குவமாக நுழைக்கிறோம். கை, கால்கள், உடல் இவைகளை இந்த வகையில் தயாரித்துக் கொள்ளுகிறோம். முகத்தில் 'மோல்டு'களை உபயோகிக்கிறோம். இந்த 'மோல்டு' தயாரிப்பது பற்றியும், உபயோகிப்பது பற்றியும் நாங்கள் பம்பாயிலுள்ள ஒரு தொழிற் பள்ளிக்கூடத்தில் பயிற்சி பெற்றிருக்கிறோம். முகத்தையும் பொருத்தி விட்ட பிறகு உருவம் பூரணம் பெறுகிறது. அப்புறம் அதற்குத் தேவையான வர்ணம் பூசிவிட்டு, தகுந்த ஆடை ஆபரணங்களை இணைக்கிறோம். கொண்டையோ, பின்னலோ, கிராப்போ, அதற்கான 'இரேப்' முடியைத் தலையில் ஒட்டவைத்து விடுவோம். பொம்மை தயார்!

''உங்க கிட்டே பல தொழிலாளிகள் இருப்பதாகத் தெரிகிறதே! அவர்கள் தினசரி, தலா, இத்தனை பொம்மைகள் தயாரிக்க வேண்டும் என்ற ஏற்பாடா?''

''இல்லே! இல்லே!...எங்கள் நிறுவனத்தில் பத்துப் பன்னிரண்டு பெண்கள் பணி செய்கிறார்கள். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு துறையில்தான் பயிற்சி. அதாவது, ஒருவர் உடல், கை, கால்கள் தயாரிப்பார். இன்னொருவர் தேவையான சாயம் கலந்து அவைகளுக்குப் பூசுவார். மூன்றுமவர், அவைகளுக்குத் தேவையான ஆடைகளைத் தைத்து மாட்டுவார். நான்காவது தொழிலாளி, அந்தப் பொம்மைகளுக்கான 'மேக்அப்பை'க் கவனிப்பார். இந்த வகையில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பணி. கடைசியில் 'ஃபினிஷ்' கொடுக்கும் பொறுப்பை நானும் சாரதா தேவியும் கவனித்துக் கொள்வோம்.

''முழுக்க முழுக்க இந்தத் தொழில் உங்கள் கைகளின் திறமையையே நம்பியிருக்கிறதா?''

''அப்படிச் சொல்லிவிடமுடியாது! ஏனென்றால் இந்தப் பொம்மைகளையெல்லாம் நிறுத்தும் மர பீடத்தை நாங்கள் வெளியிலிருந்துதான் மொத்தமாக வாங்குகிறோம். அதோ, அந்த 'மாடர்ன்' லேடி நிற்கிறாளே! அவள் கழுத்திலுள்ள மெல்லிய சங்கிலி அவள் உடுத்தியிருக்கும் பட்டுப் புடவை, அந்தக் கிராமத்துப் பெண் காதுகளில் தொங்கும் வளையங்கள், அந்தக் கூடைக்காரியின் தலையில் இருக்கும் ஓலைக் கூடைகள் எல்லாமே மொத்தமாக வாங்கப்படுகின்றன.''

''ஆந்திரர்களாகிய நீங்கள், உங்கள் நாட்டுப் பொம்மைகளைத் தயாரிக்கும் பொலிவுடனேயே, பாரதத்தின் இதரப் பகுதிகளைச் சேர்ந்தவர்களின் தோற்றங்களையும் அப்படியே வெளிக் கொணர்ந்து விடுகிறீர்களே! எப்படி?''

''ஒரு தமிழ் நண்பர் வீட்டுக்கு ஒரு திருமணத்தை ஒட்டிப் போயிருந்தேன். அங்கு அவர்கள் எந்த விதத்தில் உடை அணிகிறார்கள், தலையை அலங்கரித்துக்கொள்கிறார்கள் என்று கூர்ந்து கவனித்துவிட்டு வந்தேன். அடுத்த வாரம் ஒரு தமிழ் மணப்பெண் பொம்மை உருவாயிற்று. இப்படித்தான் பலபேர்களை, பல பிராந்தியக்காரர்

களைப் பார்த்துப் பழகும்போது அவர்களுடைய நடை உடை பாவனைகள், தோற்றம் எல்லாம் மனத்திலேயே பதிந்துவிடுகின்றன. பொம்மைகளும் உருவாகின்றன.''

''இந்தப் பொம்மைத் தொழிலுக்குச் சர்க்காரிடமிருந்து, கடன் வசதியோ மான்யமோ பெற்றிருக்கிறீர்களா?''

''இல்லை. இது முழுதும் எங்கள் சொந்தத் தொழிற்சாலை. 'டால்ஸ் ஆப் இந்தியா' (Dolls of india) என்ற பெயரில் எங்கள் நிறுவனத்தை ஸ்தாபித்திருக்கிறோம். பழைய மாம்பலம் வடிவேல்புரத்திலிருக்கும் எங்கள் வீடுதான் எங்கள் தொழிற்சாலை.''

'பொம்மைகள் அற்புதமாக இருக்கின்றன. ஆனால் விலை சற்று அதிகமாக இருப்பது போல் தோன்றவில்லையோ?

''நியாயமான கேள்வி. சராசரி ஒரு பெரிய பொம்மை பன்னிரண்டு ரூபாயாகிறது. ஆனால் ஒரு பொம்மை உருப்பெற எடுத்துக் கொள்ளும் நேரமும் அதற்கான அடக்க விலையும் வெளியாருக்குத் தெரிய நியாயமில்லை. ஒரு பொம்மை தயாரிக்கப் பத்திலிருந்து பன்னிரண்டு மணி நேர அவகாசம் பிடிக்கிறது. ஒரு பொம்மையில் எங்களுக்குக் கிடைக்கும் லாபம் கிட்டத்தட்ட ஒரு ரூபாய்தான். ஓரளவு அன்னியச் செலாவணி வசதியைக்கூட அதிகரிக்க எங்கள் பொம்மைகள் உதவுகின்றன என்று பெருமைப்படலாமே!



தயாரித்து முடிந்ததும் உயிருள்ள பெண்மணிகளோ என்று வியக்கச் செய்கின்றன இந்தப் பொம்மைகள்.

★

தென்னாட்டில் பிறக்காத கலையே இல்லை என்று சொல்லலாம். இந்தப் பொம்மைக் கலைக்கும் தென்னகமே தாயகம். நவராத்திரி விழா பண்ருட்டி பொம்மைகளையும் தஞ்சாவூர் தலையாட்டி பொம்மைகளையும் நினைவில் கொண்டு வருகிறது. சென்னையில் தயாராகும் துணி பொம்மைகள் வெளிநாட்டு நாணயச் செலாவணியைப் பெருக்குமளவுக்கு வளர்ந்திருக்கின்றன என்றால், ஒரு மன நிறைவு ஏற்படவில்லையா?

தொழிற்சாலையில் பெண்கள் பொம்மைகளை உருவாக்குகிறார்கள்.



ஓர் ஆந்திர மணமகன், மணமகள், ஜோடி, 'ரிசப்ஷ'னில் கம்பீரமாக நிற்கிறார்கள். எதிரே பஞ்சாபி கணவான் நிற்கிறார். பின்னால் சற்றுத் தள்ளித் தமிழ்ப் பெண்மணி நிற்கிறாள். வேடிக்கை பார்ப்பது போல் ஒரு மகாராஷ்டிரத் தொழிலாளப் பெண் எட்டிப் பார்க்கிறாள்.

அவர்கள் ஏதோ பேசிக் கொள்வது போல் நமக்கு ஒரு பிரமை.

பொம்மைகள் தான் என்றாலும் சாதாரண பொம்மைகளா இவை? தேசிய ஒருமைப்பாட்டையே ஒரு சிறு கண்ணாடி அலமாரியில் காண்பிக்கும் பொம்மைகள் அல்லவா? - மேனு

# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான

# ஹெடன்ஸா

உபயோகித்து
நிவாரணம் அடையுங்கள்
—ரண சிகிச்சையையும்
தடுங்கள்

பொறுக்க முடியாத வலியா! தாங்க முடியாத அரிப்பா! எரிச்சலெடுக்கும் உணர்ச்சியா! ரத்தக் கசிவா! உடனடியாக சிகிச்சை செய்யத் தாமதியாதீர்கள்! அலட்சியம் செய்தால், நோய் முற்றி ரணசிகிச்சை செய்ய வேண்டிவரும். 108 தேசங்களிலுள்ள டாக்டர்களால் சிபாரிசு செய்யப்பட்ட, நம்பிக்கையான ஜெர்மன் மூலநோய் களிம்பு ஹெடன்ஸா உபயோகித்து இப்பொழுதே நிவாரணம் பெறுங்கள்! ஹெடன்ஸா வலியையும் அரிப்பையும் சீக்கிரம் நிறுத்தி, மலப் பிரவிருத்தியைச் சுலபமாக கஷ்டமில்லாமல் செய்கிறது. முக்கியமாக, ஹெடன்ஸாவிலுள்ள சக்திவாய்ந்த மருந்துப் பொருள்கள் நீடித்த நிவாரணமளிப்பதோடு, வெடிப்புகளைச் சுருங்கச் செய்து, ஆரோக்கியமான தசைகளை வளர்க்கிறது. மூலநோய்க்குக் காலாகாலத்தில் ஹெடன்ஸா உபயோகித்தால் பிற்காலத்தில் ரணசிகிச்சை செய்யவேண்டிய நிலை ஏற்படாது என்பது ஞாபகமிருக்கட்டும்.

ஹெடன்ஸாவில் உணர்வழிக்கும் மருந்துகள் ஒன்றும் கிடையாது.

ஒரிஜினல் ஜெர்மன் முறைப்படி
இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

**தி டாலர் கம்பெனி**
337, தம்பு செட்டி தெரு
சென்னை-1

பிரபல மருந்து வியாபாரிகளிடம்
கிடைக்கும்.

53-DOL-2

# எக்ஸிமா சொறி

உங்கள் சருமத்தில் சுமார் 5 கோடி மெல்லிய அவாரங்களும் மடிப்புகளும் உள்ளன. கிருமிகள் அவைகளில் மறைந்திருந்து, தாங்க முடியாத அரிப்பு, வெடிப்பு, மேலாகப் பரவும்படை, தோல் உரிதல், எரிச்சல், பருக்கள் படர்தாமரை காலில் அரிப்பு முதலிய உபாதைகளை உண்டு பண்ணுகின்றன. சாதாரண மெச்சைகள் தற்காலிகமான நிவாரணம் அளிக்கும். ஏனெனில், அதன் மூலம் உபாதைகளுக்கு மூலகாரணமான கிருமிகள் அழிவதில்லை. விஞ்ஞான முறையில் தயாரித்த இந்த மருந்து நிக்ஸோடெர்ம் (Nixoderm) துரிதமாக இந்தக் கிருமிகளைக் கொன்று விடுகிறது. மற்றும் உங்கள் சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் வசீகரமாகவும் இருக்கச் செய்கிறது. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். சரும உபாதைகளின் மூலகாரணமான கிருமிகளை நிக்ஸோடர்ம் நிச்சயமாக அழிக்குமென்ற பூர்ண நம்பிக்கையுடன் வாங்குங்கள்.

57 ஆண்டுகளாகப்
புகழ்பெற்றது.

# ஆர்.எஸ்.பதி மருந்து



தலைவலி, ஜலதோஷம்,
ஜுரம், கைகால் வலி
முதலியவைகளுக்கு
சிறந்த மருந்து.

**ஆர்.எஸ்.பதி அன் கோ**
ஸ்தாபிதம்: 1909
மதுரை-1

# இந்திமொழி பற்றி இந்திராகாந்தி

எஸ்.கிருஷ்ணசாமி பாரதியார்

அண்மையில் கடப்பையில் பத்திரிகை நிருபர் ஒருவர் நமது மாண்பு மிக்க பிரதம மந்திரி திருமதி இந்திரா காந்தி அம்மையார் அவர்களை ஒரு கேள்வி கேட்டார்; அது, 'இந்தி மொழிச் சிக்கல் சம்பந்தமாக இதுவரை மனநிறைவளிக்கக் கூடிய முடிவு ஏதும் ஏற்படாமையால் காங்கிரசுக்கு எதிராகச் செயலாற்றப் போவதாகச் சென்னை மாணவர்கள் முடிவு செய்துள்ள செய்தியைப் பற்றித் தங்கள் கருத்தென்ன?' என்பதே கூறியாகும்.

அம்மையாரவர்கள் மறு மொழியில், 'நாட்டின் ஒருமைப்பாட்டுக்கு ஓர் இணைப்பு மொழி அவசியம்; அது இந்த நாட்டில் மிகப் பெருவாரியான மக்களால் பேசப்பட்டு வருவதும், புரிந்து கொள்ளப்பட்டு வருவதுமான ஹிந்தி மொழியாகும்' — என்று கூறினார்கள்.

'இந்தியாவில் மிகப் பெருவாரியான மக்கள் பேசும் மொழி இந்தி' என்ற திருமதி இந்திரா காந்தி அம்மையார் அவர்கள் கூற்று தவறுடைத்து, பிறரைத் தவறிய முடிவுக்குக் கொண்டு செல்லத் தக்கது என்பதைப் பணிவோடு ஆனால், துணிவோடு எடுத்துக் காட்ட விடை கொள்ளுகிறேன், புள்ளி விவரங்களோடு.

சென்ற ஜனசங்கியைப்படி இந்தியாவின் மக்கள் தொகை: 438,936,918. இதில் இந்தி பேசுவோர் தொகை: 123,028,489. இந்தியல்லாத பிற மொழிகள் பேசுவோர் தொகை: 315,911,429.

அதாவது 100க்கு 28 பேர்தான் இந்தியும், 72 பேர் பிற மொழிகளும் பேசுகிறார்கள். இது எப்படி **'நாட்டில் மிகப் பெருவாரியான தொகை'**யாகுமோ!

மேலும் இந்த 12 கோடி மக்கள் பேசும் மொழியான இந்தி எண்பது வகையான இந்தி மொழியாகும். ஒரு குழுவினர் பேசும் இந்தி இன்னொரு குழுவினருக்குப் புரியாது. எனவே, இதைக் கருத்தில் கொண்டால் மக்கள் யாவருக்கும் புரியக்கூடிய ஒரேவிதமான இந்தி பேசுவோர் தொகை மிக மிகக் குறையும்.

இப்பொழுது அரசினர், **இந்திய மக்கள் அனைவருக்கும் பொதுவெனச்** செய்து வரும் அகராதிச் சொற்களைக் கவனித்தால் இந்த என்பது வகை இந்திக்காரர்களும் பிற மொழியாளரும் புரிந்துகொள்ள முடியாத புதியதொரு விந்தை மொழி ஒன்று உருவாகி வருவது தெரிய வரும்!

அரசியல் சட்டத்தில் உள்ள சொற்களுக்கு மொழி நிபுணர்கள் இறுதியாகத் தயாரித்துள்ள பட்டியலிலிருந்து ஒரு சொற்றொடரும், சில சொற்களும் கீழே தருகிறேன், உதாரணத்துக்கு:

(1) சம்பூரண சம்பன்ன பிரபுத்துவலோக தந்த்ராத்மக கணராஜ்யம்; (2) நிர்வாசன க்ஷேத்ரம்; (3) மத்தாதா; (4) அப்யார்தி; (5) நிர்வாசன; (6) சதஸ்ய; (7) அரக்ஷக; (8) வேதன (9) விதான; (10) மதாதிகார (11) பீமா.

இவற்றின் பொருள் என்ன என்று யாருக்கேனும் ஏதேனும் புரிகிறதா? இவை இந்தி மொழிச் சொற்கள் என்று கூறிவிட்டால், நமக்கு எவ்வித ஆட்சேபணையும் இல்லை.— இருக்கவும் முடியாது. ஆனால் எல்லா மொழியினருக்கும் பொதுவான சொற்கள் (Indian Terms) நாம் எல்லோரும் அவற்றை ஏற்க வேண்டும் என்று சொல்லும்போதுதான், நாம் இவற்றை ஏற்றுக் கொள்ள மறுக்கிறோம். இச் சொற்கள் தமிழகத்தில் செலாவணியாகாது என்று சொல்லுகிறோம்! இச் சொற்களை —அமைத்து இதோ ஒரு வாக்கியம்: ''அக்டோபர் 18ம் நாள் மதுரை நிர்வாசன க்ஷேத்ரத்தில் நிர்வாசனம் நடைபெறும். மத்தாத்தாக்கள் வந்து சாலாகப் பண்ண வேண்டும்.'' இதன் பொருளை இந்தி மொழியினை ஆதரிக்கும் அன்பர்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள், அவசியமானால். இச் சொற்களைத் தமிழகத்தில் நிலவ விட்டால், தமிழ் மொழியின் கதி என்ன ஆகும்? சொல்லவும் வேண்டுமோ?

மேலே கொடுத்துள்ள பட்டியலில் சிலவற்றுக்குப் பொருள் தருகிறேன்:

(3) வாக்காளர்; (4) அபேட்சகர் அல்லது வேட்பாளர் (6) உறுப்பினர்; (7) போலீஸ் (9) சட்ட மன்றம்; (10) வோட்டுரிமை.

இன்று நம் நாட்டில் முப்பது கோடியே அறுபத்தைந்து லட்சம் பேருக்கு இந்தி தெரியாது! எனவே இணைப்பு மொழியின் பெயராலே இந்த முப்பது கோடிக்கு மேற்பட்ட மக்களையும் இந்தியைக் கற்கச் செய்வது என்பது என்றேனும் முடியக் கூடிய காரியமா? சாத்தியமா? அவசியந்தானா? சிந்திக்க வேண்டாமா? ஒருமைப்பாட்டு மந்திர ஜெபத்தில், சிந்தனையை அறவே கைவிட்டு விடலாமா?

ஒருமைப்பாட்டு உணர்ச்சி சிதைவுறலாகாதென்ற சீரிய காரணத்துக்காகவேதான் ஒரு வட்டார மொழியான இந்தியைப் பிற மொழியாளர் தலையில் சுமத்தாதீர்கள் என்று நாம் இடையறாது கூறுகிறோம்.

ஆங்கிலம் மத்திய அரசின் ஆட்சி மொழியாகத் திறம்படச் செயலாற்றி வருகிறது. இந்நிலையே இனியும் நீடிக்க வேண்டும்.

மாநில மொழியோடு இந்தப் பிரச்னையைக் குழப்பிவிடக் கூடாது. மாநிலங்களில் வட்டார மொழிகளே வட்டார ஆட்சி மொழி. அரசியல் சட்டத்தின் 343வது பிரிவு திருத்தி அமைக்கப்பட வேண்டும். அப்போதுதான் ஹிந்திப் பிரச்னை தீரும்.

# வெற்றித் திருநகர்

## அகிலன்

### அத்தியாயம் எட்டு

### இராமன்மீது ஆணை

லட்சுமியை விசுவநாதன் அவள் மாளிகையில் விட்டு விட்டுத் திரும்புவதற்குள் நன்றாக இருட்டி விட்டது. பிரிவதற்கு மனமின்றித் தவித்தவளிடம் பிரியாவிடை பெற்றுக் கொண்டு தன் மாளிகைக்குத் திரும்பினான் விசுவநாதன். அங்கே அவனுக்காக அரண்மனைப் பணியாளன் ஒருவன் காத்து நின்றான்.

''சக்கரவர்த்திகள் தங்களை அழைத்து வரும்படி கூறினார்கள்'' என்றான் அவன். வழக்கமாக இரவு வேளைகளில் அரண்மனையிலிருந்து அழைப்பு வருவதில்லை. பொழுது புலர்ந்தவுடன் விசுவநாதனே அரண்மனைக்குச் சென்று அச்சுதராயரைச் சந்திப்பதாக இருந்தான். அதற்குள் அழைப்பு வந்து விட்டது.

விசுவநாதன் அரண்மனைக்குச் சென்ற போது அங்கே அச்சுதராயரும் ராமராயரும் அவனை எதிர்பார்த்துக் காத்திருந்தனர்.

''உன்னிடம் தனியே சில முக்கியமான செய்திகள் கூற வேண்டும்'' என்றார் ராமராயர்.

பாண்டிய நாட்டில் அவன் நிறைவேற்ற வேண்டிய கடமைகளை அவனிடம் விவரித்து விட்டு, ''உன்னிடம் பெரிய சக்கரவர்த்திகள் கொண்டிருந்த நம்பிக்கைக்கும் நாங்கள் கொண்டிருக்கும் நம்பிக்கைக்கும் பங்கம் ஏற்படாமல் நடந்து கொள்ள வேண்டும்'' என்றார் அவர்.

அச்சுதராயர் உடனிருந்தாரே தவிர, அவர் ஏதும் கூறவில்லை. முன்பு சாளுவ நரசிம்மரைப் பேசவிட்டுப் பார்த்துக் கொண்டிருந்தது போலவே, இப்போது ராமராயரைப் பேசவிட்டுப் பார்த்துக் கொண்டிருந்தார். அதிலிருந்து ராமராயரின் செல்வாக்கு அவரிடம் வளர்ந்து வருவதை ஊகித்தறிந்து கொண்டான் விசுவநாதன். அவன் விரும்பி வரவேற்ற மாற்றம் இது.

''ஆம், என்றென்றும், உன் உடலில் உயிருள்ள வரையிலும் இந்த நம்பிக்கைக்குப் பாத்திரனான ஊழியனாகவே இருக்க வேண்டும். உன்னுடைய தலைமையில் அனுப்பப்படும் படை வீரர்களையும், உன்னிடம் ஒப்புவிக்கப்பெறும் பொக்கிஷத்தையும் நீ இந்த சாம்ராஜ்யத்தின் நலனுக்காகவே பயன்படுத்த வேண்டும்.''

அச்சுதராயரின் முகத்தில் ஒரு வகை அச்சம் பரவுவதைக் கண்ணுற்றான் விசுவநாதன். ராமராயர் விசுவநாதனின் விழிகளையே கூர்ந்து நோக்கினார்.

''பெரிய சக்கரவர்த்திகளின் ஆணையைச் சிறிதும் மாற்றாமல், அப்படியே நிறைவேற்றும்படி எனக்குக் கட்டளை இட்டிருக்கிறீர்கள். அவர்கள் என்னிடம் கொண்டிருந்த அன்புக்கும் நம்பிக்கைக்கும் நான் எப்படிப் பாத்திரமாக வேண்டும் என்று நினைத்தேனோ, அப்படியே இப்போதும் நினைக்கிறேன். இனி எப்போதும் நினைப்பேன். இந்த நினைவில் என்றுமே மாற்றம் ஏற்படாது'' என்றான் விசுவநாதன்.

ராமராயர் விரும்பியிருந்தால் அப்போது கூடத் தமிழ் நாட்டுக்குப் புறப்படாமல் தடுத்திருக்கலாம். ஆனால் அவர் அப்படிச் செய்யவில்லை.

''விசுவநாதா! விஜயநகரத்துக்கு இது சோதனை மிகுந்த காலம் என்பது உனக்கே தெரியும். பெரிய சக்கரவர்த்திகளுக்கு அஞ்சிப் பதுங்கியிருந்தவர்களும் அவர்களிடம் நண்பர்களைப் போல் நடித்தவர்களும் இனி நம்மீது பாய்வதற்குச் சமயம் பார்த்திருப்பார்கள். இந்த நிலையிலும் உன்னை நாங்கள் படையோடு தமிழ் நாட்டுக்கு அனுப்புவதற்குக் காரணம், அங்கு ஓர் உறுதி மிக்க ஆட்சி நிலவ வேண்டும் என்பதற்காகத்தான். அதிகார ஆசை பொல்லாதது; அதைப்போலவே பொருள்களின் மேலுள்ள பேராசையும் பயங்கரமானது. அதிகார ஆசைக்கும் பொருளாசைக்கும் அடிமைப்படாமல், தங்கள் கடமையில் மனத்தைச் செலுத்தக் கூடியவர்களால்தான் சாம்ராஜ்யத்துக்குச் சிறந்த ஊழியம் செய்ய முடியும். — அதிகம் கூறுவானேன்? நீயே விரும்பினால் விஜயநகரத்துக்கு எதிராகத் திரும்பும் அளவுக்கு உன்னிடம் படை பலமும் பொக்கிஷ பலமும் இப்போது இருக்கின்றன!''

செவிகளைத் தன் கரங்களால் பொத்திக் கொண்டு, ''வேண்டாம்! தயைசெய்து இப்படியெல்லாம் என்னிடம் கூறாதீர்கள்'' என்றான் விசுவநாதன். 'அப்பா அன்று செய்தது போலவே நானும் துரோகம் செய்துவிடுவேன் என்று நினைக்கிறீர்கள் போலும்...'

''நான் கூற விரும்பியதைக் கூறி முடித்து விடுகிறேன்; கேட்டுக் கொள்'' என்றார் ராமராயர். ''இந்த சாம்ராஜ்யம் ஒற்றுமையோடு ஒன்றுபட்டு வாழும் வரையில்தான் இதன் நிழலில் வாழும் அனைவரும் பத்திரமாக வாழ முடியும். இது பிளவுபட்டோ, சிதறுண்டோ போகுமானால் பிறகு இங்

யாருக்குமே வாழ்வு இருக்காது. ஐம்பத்தாறு தேசங்களாக இந்தப் பாரத கண்டம் சிதறுண்டு கிடந்ததாகச் சொல்கிறார்கள். ஐம்பத்தாறு தேசங்கள் மேலும் ஐந்நூறு தேசங்களாகப் பிளவுபட்டதால்தான் இது மீண்டும் அந்நியர்களின் படையெடுப்புக்கு ஆளாகியிருக்கிறது. பரத கண்டத்தில் சிறு நாடுகள் என்றாவது ஒற்றுமையாக வாழ்ந்து வந்தன என்று நீ கேள்வியுற்றிருக்கிறாயா? சாம்ராஜ்யம் சிதறுமானால் உட்பகை வளரும்; உட்பகை வளர்ந்தால் அது வெளிப் பகையை வரவேற்கும். மீண்டும் மீண்டும் பழைய சோகக் கதைகளே இந்த மண்ணில் நடைபெறும். இதை மட்டிலும் நீ மறந்துவிட வேண்டாம்!''

விசுவநாதனுக்குப் பேச நா எழவில்லை. 'என்மீது ராமராயருக்குச் சந்தேகம் பிறந்து விட்டதா?' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டான் அவன். அப்படி அவருக்குச் சந்தேகம் எழுந்திருக்குமானால் எப்படி அதைப் போக்குவதென்றும் அவனுக்கு விளங்கவில்லை.

அப்போது அரண்மனைக்குள்ளிருந்த இராம சுவாமி கோயிலின் மணி கணீர் கணீர் என ஒலிக்கத் தொடங்கியது. கிருஷ்ண தேவராயர் எழுப்பியிருந்த புதிய ஆலயம் அது. அதன் உட்புறத்துச் சுற்றுச் சுவர்களில் இராமனின் கதை முழுவதையும் காட்சிகளாகச் செதுக்கச் செய்திருந்தார் அவர். வெளிப்புறச் சுவர்களெங்கும் போர்க்களக் காட்சிகள் செதுக்கப் பெற்றிருந்தன.

விசுவநாதன் அச்சுதராயரிடமும் பொதுவாகவே கூறினான்:

''முடிசூடி நாடாளும் இருநாளை எதிர் பார்த்திருந்த இராமபிரான் தந்தையின் சொல்லைக் காப்பதற்காக முடி துறந்து காடாளச் சென்ற கதையும் இந்தப் பாரத கண்டத்தில்தான் நடைபெற்றிருக்கிறது. அவர் காடாளும் காலத்தில் இந்த விஜய நகரத்து மண்ணிலெல்லாம் நடந்து களித்திருக்கிறார். நாடாள்வதற்காகவே தாங்கள் என்னை இப்போது அனுப்பினாலும் என் உள்ளத்தில் இந்த இராமபிரானின் துறவுக் கோலத்தையும் சுமந்து கொண்டே செல்வேன். இதை நான் இராமபிரானின் மீது ஆணையிட்டுச் சொல்கிறேன்!'' என்றான். விசுவநாதனின் குரல் தழுதழுத்தது.

ராமராயர் உணர்ச்சி வயப்பட்டு அவனை அன்புப் பெருக்கோடு கட்டித் தழுவிக்கொண்டார். அச்சுதராயரின் கண்களும் கலங்கின. விசுவநாதனுக்கு முன்னால் அச்சுதராயருக்கு அவருடைய உருவமே சிறியதாய்த் தோன்றியது. அரியணையில் அமர்ந்து அதிகாரம் செலுத்த வேண்டும் என்பதற்காகப் பெரும் பாடுபட்டவர் அவர். கிருஷ்ண தேவராயரின் மூத்த குமாரன் கொல்லப் பெற்ற காலத்தில் அவரைப் போல் உள்ளூற மகிழ்ச்சியடைந்தவர்கள் வேறு யாருமில்லை.

ராமராயருக்கு எப்போதுமே விசுவநாதனிடம் தனியானதொரு பற்றுதல் உண்டு. விஜயநகரத்து லட்சியத் துடிப்பின் சின்னமாகவே அவன் அவருக்குத் தோன்றினான்.



''விசுவநாதா! மகனே! உன்னைப் போல் நூறுபேர் இருந்தால் இந்தப் பரத கண்டம் முழுவதுமே ஒரு கொடியின் ஓரே குடும்பமாக வாழச் செய்து விடலாம். உன்மீது இனி எங்களுக்கு அணுவளவும் நம்பிக்கை குறையாது. — நீ சென்று வா!''

விசுவநாதன் நடுநிசிப் பொழுதில் அரண்மனையிலிருந்து திரும்பினான். அவனுடைய குதிரைக் குளம்பொலி அவன் உள்ளத்தில் எழுந்த சொற்களை எதிரொலிப்பது போல் அவனுக்குத் தோன்றியது. 'நான் சாம்ராஜ்யத்தின் ஊழியன்; குடிமக்களின் ஊழியன்!' என்று மீண்டும் மீண்டும் அது அவனோடு ஒலித்துக் கொண்டே வந்தது.

சாளுவ நரசிம்மரின் மாளிகையை அவன் வழக்கம் போல் திரும்பிப் பார்த்தான். அங்கே விளக்குகள் எரியவில்லை. மேல் மாடத்துக் கூடத்தில் லட்சுமி உறக்கம் வராமல் புரண்டுகொண்டே இனிய கனவுகளில் தன் நெஞ்சைப் பறி கொடுத்திருந்தாள். மீண்டும் அயோத்திக்கு வந்து முடிசூடிக் கொண்ட இராமனின் திருக்கோலமும் அவனருகில் சீதை ஆடை அணிகளோடு அரசியாக வீற்றிருந்த திருக் கோலமும் அடிக்கடி அவள் மனத்தில் எழுந்து மறைந்தன.

அவளது மாளிகையைக் கடந்து சென்ற விசுவநாதனோ துறவு பூண்ட இராமனின் வைராக்கிய சிந்தையோடு சென்று கொண்டிருந்தான். இராமன் நாட்டின் முடியைத் துறந்துவிடத் துணிந்தானே தவிர சீதையைத் துறந்துவிடத் துணியவில்லை. விசுவநாதன் அதையும் இப்போது நினைத்துக் கொண்டான்.

### அத்தியாயம் ஒன்பது

# விடை கொடுத்தாள்

விஜயநகரத்தின் வெளிக் கோட்டை மதிலை அடுத்து, மதுரையை நோக்கிப் புறப்படுவதற்காகக் காத்திருந்த வீரர்களின் அணிகளை மேற்பார்வையிட்டு வந்தான் விசுவநாதன். அரியநாத முதலியாரோடு புறப்பட்ட வீரர்களைத் தவிர விசுவநாதனின் பிரிவைச் சேர்ந்தவர்களில் கால்நடையாகச் செல்வோர் முன்பே கிளம்பி விட்டனர். குதிரைப் படைகளும் யானைப் படைகளுமே விசுவநாதனுடன் செல்ல அங்கு காத்திருந்தன.

அந்தக் காட்சியே ஒருபுறம் அவனுக்கு மன எழுச்சியைத் தரும் காட்சியாகவும் மறுபுறம் மனத் துயர் தரும் காட்சியாகவும் இருந்தது. அவன் தனியே பொறுப்பேற்கும் காலம் வந்து விட்டது. விஜயநகரத்தின் சார்பில் அதன் தென் பகுதியான பாண்டிய நாட்டைப் பாதுகாக்கும் முழுப் பொறுப்பும் அவனுடையதுதான். சந்திர சேகர பாண்டியரே அரசராக இருந்தாலும், அந்த நாட்டுக் குடிமக்களுக்குப் பாதுகாப்பளித்து, அவர்களது வாழ்வில் புது மலர்ச்சியை ஏற்படுத்த வேண்டியது அவனுடைய கடமையாகி விட்டது. அந்த வகையில் அவன் மன எழுச்சி கொண்டான்.

மற்றொரு வகையில் அந்தக் கடமை அவனுக்கு மன வேதனை அளிக்காமலில்லை. பாண்டிய நாட்டுக் குடிமக்கள் அவனையும் அவனுடைய படை வீரர்களையும் பகைவர்களாகக் கருதாமல் இருக்க வேண்டும். குடிமக்களது நம்பிக்கைக்குப் பாத்திரமாவது அவ்வளவு எளிதல்ல. தமிழர் — தெலுங்கர் என்ற வேற்றுமை உணர்ச்சி அங்கு பரவத் தொடங்கி விட்டதால் அந்த வேற்றுமைக் கிடையே ஒற்றுமைக்காக அவன் பாடுபட வேண்டும். அதோடு விஜயநகரத்திலிருந்து அவனுடன் புறப்படும் வீரர்கள் பலர் பிறகு குடும்பங்களோடு தெற்கே குடிபெயர்ந்து வரவேண்டிய நிலையும் ஏற்படலாம்.

இந்த இரு வேறு சிந்தனைகளோடு படைகளை மேற்பார்வையிட்டு விட்டுப் படைவீட்டின் கூடாரத்துக்கு வந்தான் விசுவநாதன். மறு நாள் பொழுது புலர்வதற்கு முன்னும் அங்கிருந்து புறப்படவேண்டுமென்று அவர்களுக்குக் கட்டளையிட்டுவிட்டு நகரத்துக்குள் திரும்பினான்.

விஜயநகரத்தை விட்டு அதற்கு முன்பு பலமுறை அவன் வெளியூர்களுக்குச் சென்றிருந்தாலும், ஏனோ அம்முறை செல்வது அவனுக்கு அதை விட்டுப் பிரிந்து செல்வதாகவே தோன்றியது. நகரம் முழுவதையும் ஒரு முறை நன்றாகச் சுற்றிப் பார்த்து, அதன் காட்சிகளை அவன் தனக்குள் பதித்துக் கொள்ள விரும்பினான். பரந்து விரிந்து கிடந்த மிகப் பெரிய நகர மாதலால் அன்றைக்குள் அதைச் செய்ய முடியாதென்றும் தோன்றியது.

ஆகவே நகரத்தை அடுத்திருந்த குன்றுகளுக்கிடையே குதிரையைத் தட்டிவிட்டான். எந்த உயரத்துக்குக் குதிரையின் மீது செல்ல முடியுமோ அந்த உயரத்துக்குச் சென்று குதிரையின் மீது அமர்ந்தவாறு கண்ணுக்கெட்டிய தொலைவு வரையில் நகரத்தை உற்றுப் பார்த்தான்.

விஜயநகரத்தின் பரப்பும், வளமும், அழகும், கம்பீரமும், உயிர்த் துடிப்பும் அவன் விழிகளுக்குள் அடங்க மறுத்து விட்டன. நான்கு புறங்களிலும் குன்றுகளைக் கோட்டை மதில்களாக உயர்ந்தோங்கிய ஒரு நிலப் பரப்புக்குள், பொற் பேழைக்குள் சுடர் விட்டு ஒளி வீசும் வைர மணி போல் அது ஒளி சிந்திக் கொண்டிருந்தது. அதைச் சுற்றிப் பெருக்கெடுத்தோடிய துங்கபத்திரை அதன் ஆண்மையில் மயங்கிய பெண்ணரசி போல் அதை வளைத்துத் தழுவி மகிழ்ந்திருந்தாள். அவளது பெண்மையின் ஆக்க சக்தி நகரெங்கும் கரும்புத் தோட்டங்களாக, கனி தரும்

கல்யாண பட்டுச் சேலைகள், சோளிகளுக்கு
எமது தி. நகர் பனகல் பார்க் புதிய கடைக்கும்
விஜயம் செய்யுங்கள் !

# P. B. லக்ஷ்மணா ஸா & பிரதர்ஸ்

2-B, நாகேஸ்வர ராவ் ரோட், தி. நகர், சென்னை-17
போன் : 45455

தலைமை ஆபீஸ் : 109, அய்யா முதலித் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2
போன் : 86966



# கால்கேட் மென்தாலேடெட் ஷேவிங் க்ரீம்



இதுவரை
நீங்கள்
அனுபவித்திராத
அளவு
குளுமையான
க்ஷவரத்தை
அளிக்கிறது!











CMS. G.3.TAM

C I B A




# பினகா டால்க்

## புதுத் தோற்றத்துடன் மீண்டும் வருகிறது

என்றும் போலப் புதுமையும், மென்மையும், கொண்ட நேர்த்தியான பவுடர். இன்ப நினைவைப் போல நீடித்து நிற்கும். பரவசமூட்டும். சுகந்தமும், சருமத்தை மழமழவென வைத்திருக்கும் விசேஷ எண்ணெய்ப் பொருள்களும் அடங்கியது!

CIBA 66/63 TAM.

மரங்களாக, மலர் சொரியும் செடி கொடிகளாகக் குலுங்கிச் சிரித்துக்கொண்டிருந்தன. திரும்பிய திசைகளிலெல்லாம் கோயில்கள், கோயில்கள், கோயில்கள்! கோயில்களோடு ஆங்காங்கே மாளிகைகளும் உயர்ந்தோங்கி நின்றன!

நகர மாந்தரின் சுறுசுறுப்பு நிறைந்த வாழ்க்கை அவனை மிகவும் கவர்ந்தது. நடந்து செல்வோர், சிவிகைகளில் செல்வோர், குதிரைகளில் செல்வோர், இவ்வாறாக மக்கள் கூட்டம் விஜய நகரத்துத் தெருக்களில் அலை மோதிக் கொண்டிருந்தது. உலகத்தின் எந்தப் பகுதியில் விளையும் பொருளும் விஜய நகரத்துச் சந்தையில் கிடைக்கும் என்பது போல் வாணிபத்தை அங்கே வளர்த்திருந்தார் கிருஷ்ண தேவராயர்! 'உலகிலேயே இப்படி ஓர் அற்புதமான நகரை நாங்கள் கண்டதில்லை!' என்று பிற நாட்டார் கூறி வியக்கும் அளவுக்குச் செழித்தோங்கி இருந்தது விஜய நகரம்.

விஜயநகரத்தைப் பிரிவின் ஏக்கத்தோடு பார்த்துப் பெருமூச்செறிந்த விகவநாதனின் உள்ளத்தில் ஓர் ஆசை எழுந்தது. 'நான் இப்போது காணுவது பெரிய சக்கரவர்த்திகளின் உழைப்பால் உருவாகிப் புத்தெழுச்சி பெற்ற நகரம். இந்த நகரத்துக்கும் இதன் சாம்ராஜ்யத்துக்குமே அவர் புத்தெழுச்சி தந்து மறைந்து விட்டார். நானும் பாண்டிய நாட்டின் தலைநகரான மதுரையை மற்றொரு விஜயநகரமாகப் புத்தெழுச்சி பெறச் செய்ய முடிந்தால் எவ்வளவு சிறப்பாக இருக்கும்? அதைச் சுற்றியுள்ள பகுதிகளையும் இந்த நகரத்தை அடுத்த பகுதிகளைப் போல் புது வாழ்வு பெறச் செய்தால் எவ்வளவு சிறப்பாக இருக்கும்? பெரிய சக்கரவர்த்திகளின் நினைவை நான் இந்த வகையிலும் போற்ற வேண்டும்!

குன்றை விட்டுக் கீழே விகவநாதன் இறங்கி வந்தபோது துங்கபத்திரையின் மயானக் கரையிலிருந்து புகை எழும்பிக் கொண்டிருந்தது. இறந்து போய்க் கட்டையாகிவிட்ட யாரோ ஒரு மனிதனின் உடல் அங்கே வெந்து கருகிச் சாம்பராகிக் கொண்டிருந்தது. கிருஷ்ணதேவராயரின் பொன்னுடல் கூட இப்படித்தான் ஒரு நாள் கருகித் தீய்ந்தது. வாழ்க்கையின் வளத்தைச் சில விநாடிகளுக்கு முன்பு கண்ட விகவநாதன் இப்போது அதன் நிலையாமையையும் கண்டான். நிலைத்து நிற்பது எது? மனிதன் பிறக்கும்போது அவனுடைய உயிரையும் உடலையும் கொண்டு வருகிறான். போகும்போது உடலையுமே எரிபொருளாக்கி விட்டுப் போகிறான். எதையுமே அவனால் எடுத்துச் செல்ல முடிவதில்லை.

'எதையுமே எடுத்துச் செல்ல முடிவதில்லையா?... ஏன், புகழ்?... அவனுக்குப் பின்னே அவனால் புகழை மட்டும் அவனுடையதாக விட்டுச் செல்ல முடியும். அதற்குரியவனாக அவன் வாழ்ந்தால்!'

விகவநாதன் முடிசூடிச் சக்கரவர்த்தியாக நாடாள ஆசைப்படவில்லை. ஆனால் லட்சுமியின் துணையோடும், புகழோடும் வாழ ஆசைப்பட்டான். மயானக் கரையில் அவன் கண்ட காட்சிக்குப் பிறகும் இந்த இரண்டு ஆசைகளும் அவனை விட்டுவிடவில்லை. முடிசூடிக் கொள்ளாமலேயே பல நற் செயல்களைச் செய்ய வாய்ப்பும், ஆற்றலும் உள்ளபோது, சந்திர சேகரபாண்டியருக்குரிய முடிக்கு நாம் ஏன் ஆசைப்பட வேண்டும்?



ஒருவர்: நம்ப தம்பி பஸ்ட் கிளாஸிலே பாஸ் பண்ணி யிருக்குதுங்க. கெமிஸ்ட்ரிலே 'டி' பிளஸ், இங்கிலீஷிலே 'ஏ' பிளஸ், தமிழிலே 'பி' பிளஸ் இப்படி யெல்லாம் வாங்கியிருக்குதுங்க. ஒங்க பையன் எப்படி?

மற்றவர்: அதுவா? எல்லாப் பாடங்களிலேயும் தேறாப்லஸ்! - ந. துரைசுவாமி

அவனுடைய மாளிகைக்கு அவன் திரும்பியபோது அங்கே சாளுவ நரசிம்மர் முதல் அவர் குடும்பத்தார் அனைவருமே வந்திருந்தார்கள். அவனை வழியனுப்புவதற்காக நாகமநாயக்கர் சிறியதொரு விருந்துக்கு ஏற்பாடு செய்து, சாளுவர் வீட்டாரை மட்டிலும் அதற்கு அழைத்திருந்தார். நிச்சயதார்த்த விழா என்ற ஒன்றுக்குச் சாளுவர் இசையாததால், அதையே வேறு வேறு பெயரில் செய்ய விரும்பியவர் போல் நாகமர் இப்படி ஒரு வழி செய்திருந்தார்.

சாளுவ நரசிம்மர் அன்று அளவுக்கு அதிகமான கலகலப்போடு காணப்பட்டார். விகவநாதனை அருகில் அழைத்து அமர்த்திக் கொண்டு அவனிடம் உற்சாகமாகப் பேசினார்.

''எங்களுக்கெல்லாம் வயதாகி விட்டது. இந்த விஜயநகரத்துக்கு வயதாகி அது முதுமைப் பருவம் அடைந்தது போல் நாங்களும் முதுமைப் பருவம் அடைந்து விட்டோம். இனி எதிர்காலம் உன்னுடையது. அது உன் கையில் இருக்கிறது!'' என்று அவனைத் தட்டிக் கொடுத்தார் சாளுவர்.

''உங்களுக்கும் வயதாகிவிடவில்லை; விஜயநகரமும் இளமையோடுதான் இருக்கிறது'' என்று கூறிக் கலகல வென்று சிரித்தான் விகவநாதன்.

## தேடி அலைந்தேனே!

### (சிங்காரத்தின் ஊகங்கள்)

உணவு விடுதி மேஜை மீது காலியாகிக் கிடந்த சிகரெட் பாக்கெட் இந்தியாவில் கிடைக்காதது. பர்மாவில்தான் அந்த 'பிராண்ட்' சிகரெட்டுகள் உண்டு. இதிலிருந்து அந்த மனிதன் பர்மாவிலிருந்து வந்தவன் என்ற சந்தேகம் கொள்ள வாய்ப்பு இருக்கிறது.

சுவரில் ஒட்டியுள்ள பத்மஸ்ரீ சிவாஜி கணேசனுக்குப் பாராட்டுக் கூட்ட அறிவிப்பும் பத்திரிகை விற்கும் பையன் நடிகர் திலகத்தைப் பற்றிக் கூவிக் கொண்டிருந்ததும் புதியதொரு பெயருக்காகச் சிந்தித்துக் கொண்டிருந்த மனிதனுக்குக் கைகொடுத்து உதவியுள்ளன என்பதை அவனது தடுமாற்றத்தின் மூலம் ஊகிக்கிறான்.

நரேந்திர ராய் ஆடாமல் அசையாமல் முன் செல்ல மற்ற இருவரும் சற்றே பின்னால் சென்ற முறையிலிருந்தும் நரேந்திரனையொட்டியிருந்த அவர்களின் கைகள் அவன் உடலைத் தொட்டபடி இருந்த மாதிரியிலிருந்தும் அவ்விருவரும் ஓவர்கோட் பையில் மறைத்திருந்த துப்பாக்கி முனையால் அவனை நடத்திச் செல்கிறார்கள் என்பதை அறிகிறான் சிங்காரம். ரோடு மூடப்பட்டு, வழியில்லாத அபாயம் நிறைந்த அப்பகுதியில் அவர்கள் சென்றது சந்தேகத்துக்கு வலுவூட்டுகிறது.



''இப்படி நான் சொல்வதற்காக நீ வருத்தப்படாதே. உன்னைவிட நான் இந்த சாம்ராஜ்யத்துக்காக உழைத்துக் களைத்தவன். கிருஷ்ணதேவராயரோடு இந்தச் சாம்ராஜ்யத்தின் புகழும் மறையத் தொடங்கிவிட்டது. நானும் இந்த அரசியல் சிக்கல்களிலிருந்து விடுபட்டு ஓய்வு பெறப் போகிறேன். விரைவில் தஞ்சைக்கே குடும்பத்தோடு வந்து அங்கு தங்கிவிடப் போகிறேன். அங்கு நான் வர விரும்புவதற்கு மற்றொரு காரணமும் இருக்கிறது. நீ மதுரையில் இருப்பதால் உன்னையும் கவனித்துக் கொள்ள முடியும். அங்கு நீ சென்ற காரியம் முடிந்துவிட்டால், இடமென்று அரண்மனையில் உள்ளவர்கள் உன்னைக் கலிங்கத்துக்கு அனுப்பினாலும் அனுப்புவார்கள்!''

'அனுப்பினால் போவதில் தவறில்லையே என்று நினைத்தான் விசுவநாதன். என்றாலும் அவரோடு அவன் அப்போது வாதிட விரும்பவில்லை.

''நான் தஞ்சைக்கு வந்தவுடன் மதுரைக்குச் செய்தி அனுப்புகிறேன். அடிக்கடி என்னை வந்து பார்த்துச் செல்'' என்று கூறினார் சாளுவ நரசிம்மர்.

''வருகிறேன்'' என்றான் விசுவநாதன், லட்சுமியை நினைத்துக் கொண்டு.

ஃ ஃ ஃ

விருந்து முடிந்து சாளுவரும் அவர் மனைவியும் விடைபெற்றுக் கொண்டார்கள். லட்சுமி தயங்கித் தயங்கி நின்றபடியே, ''அப்பா! நான் சிறிது நேரம் இங்கே தங்கி அவனை வழியனுப்பி விட்டு வருகிறேனே!'' என்றாள். அவள் தந்தை சாளுவ நரசிம்மர், ''அதற்கென்ன? நீ இருந்து விட்டு வா. நாங்கள் போகிறோம்!'' என்றார். லட்சுமி சிறிது நேரம் அங்கு தங்கியிருந்துவிட்டு வருவதற்கு அவர் மறுக்கவில்லை. லட்சுமியின் தூண்டுதலால் விசுவநாதன் மன எழுச்சி பெற்றுச் சாம்ராஜ்யக் கனவுகள் காண வேண்டுமென்பதே அவர் ஆசை.

கருக்கிருட்டு நேரத்தில் விசுவநாதன் புறப்படுவதாக இருந்தது. ஆகவே புறப்படும் போது அவனை லட்சுமியால் சந்திக்க முடியாது. எப்படியோ இருவரும் தனிமையைத் தேடிக் கொண்டு சிறிது நேரம் பேசத் துடித்தனர். நேரமும் கிடைத்தது.

லட்சுமிக்கு ஏனோ நெஞ்சை அடைத்துக் கொண்டு வந்தது. ஏதேதோ பேச நினைத்தவள் ஒன்றுமே பேச முடியாமல் தத்தளித்தாள். விசுவநாதனும் அதே நிலையில்தான் இருந்தான்.

''சென்று வாருங்கள்! என்னையும் என் அப்பாவையும் மறந்து விடாதீர்கள். அவருக்கும் ஆண் பிள்ளை இல்லை..... அவர் கூறுவதெல்லாம் உங்கள் நன்மைக்குத்தான் கூறுவார்'' என்று கெஞ்சுவது போல் கூறினாள். அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்த விசுவநாதனுக்கு அவள் கூறியது ஒன்றும் செவியில் விழவில்லை.

சட்டென்று அவனுடைய வலது கரத்தைப் பற்றி அதன் ரேகைகளை அவள் உற்றுப் பார்த்தாள். பிறகு மெல்ல அதைத் தன் விழிகளிலும் இதழ்களிலும் பதித்துக் கொண்டாள். அவளுடைய இந்த எதிர்பாராத செயலால் மெய்சிலிர்த்தது விசுவநாதனுக்கு. தன்னை மறந்து நினைவழிந்து நின்று விட்டான் அவன்.

''நான் தஞ்சையில் தங்களைச் சந்திக்கிறேன்!'' என்று கூறிவிட்டுச் சிட்டென அங்கிருந்து பறந்து சென்றாள் லட்சுமி.

விஜயநகரமும் அவனுக்கு விடைகொடுத்தது; லட்சுமியும் கொடுத்து விட்டாள்.

(தொடரும்)




ரிஷபச் சூரியன் உச்சியில் நின்று அக்னி யாகம் நடத்திக் கொண்டிருந்தான். காஞ்சிக் கோட்டையின் உச்சியில் ரிஷபக் கொடி கம்பீரமாய்ப் பறந்து கொண்டிருந்தது.

சிறகு விரித்துப் பறக்கும் பறவை இனங்கள் வெயிலின் சகிப்புத் தாளாமல் மரங்களின் இலையடர்த்தியிலும், புதர்களிலும் மறைந்து ஆறுதல் தேடிக் கொண்டிருந்தன. மனித இனங்கள்தாம் உழைத்தே ஆக வேண்டுமே! பகுத்தறிவை ஆண்டவன் கொடுத்தாலும் கொடுத்து விட்டான்! அந்த ஒரு நற்பயனுக்காக எத்தனை பெரிய இப்பயன்களை அனுபவிக்க வேண்டியிருக்கிறது! கொடுமை நிறைந்த அந்த வெயிலைச் சட்டை செய்யாதவர்களைப் போல் உழைத்துக் கொண்டிருந்தனர் மனிதர்!

'ஏன் பிறந்தோம் இந்த மனித இனத்தில் என்று தனக்குத் தானே நொந்து கொண்டவளாய்த் தெரு வாசற்படியை நோக்கிய வண்ணம் நின்று கொண்டிருந்தாள் உத்தம சுந்தரி. பல்லவ நாட்டின் சேனாதிபதியின் மனத்துக்கினிய மனைவியவள்! அவளுக்கே இப்படி ஒரு பிறவியதுப்பா?

தூளியில் உறங்கிக்கொண்டிருந்த ஐயிரண்டு திங்கள் நிறைந்த ஆண் குழவி பசிக்குரல் எழுப்பியது. எண்ணங்களைத் தூக்கி வெயிலில்எறிந்து விட்டு உள்ளறை நோக்கி ஓடோடிச் சென்றாள். கைகளையும், கால்களையும் உதறியழுது கொண்டிருந்த பாலகனைத் தூக்கிப் பாலமுதூட்டக் கூடத்தை நாடிச் சென்று அமர்ந்தாள். மீண்டும் எண்ணங்கள் முற்றுகையிடத் தொடங்கின. கூடியவரையில் அவற்றை மறக்க முயன்றாள். குழந்தைக்கு அமுதூட்டும் போது எண்ணங்கள் சலனமற்றும், தூய்மை நிறைந்தவையாகவும் இருக்க வேண்டும் என்பார்கள். சலனம் ஏற்படுகிறதே!

மதுரையிலிருந்து திரும்பிய நாள் முதலாகவே உத்தம சுந்தரிக்கு மனநிம்மதியற்றுப் போய் விட்டது. இதற்கு முக்கியமாக இரண்டு காரணங்கள் உண்டு. ஏன் மதுரைக்குச் சென்றோம் என்றாகி விட்டது அவளுக்கு! என்ன செய்வது? தாய் வீடு அந்தப் பாண்டியரின் தலைநகரம்தான். பிரசவத்துக்கு அவள் சென்றே தீர வேண்டியிருந்தது! பெற்றோரற்ற கணவர். அண்டை அயலவர்களை விட்டுக் கவனிக்க அவருக்கு மனமில்லை. உடன் அவரும் வந்திருக்கலாம். வர முடியாத நிலைமை! எங்கிருந்துதான் இந்தப் போரும், பூசலும் மூளுகின்றனவோ? பகையற்றுத்தான் வாழ முடியாது; போரற்று வாழ மறுக்கிறதே இந்த மனித இனம்!

உத்தமசுந்தரியின் திருமணத்தின்போது பல்லவ நாடும், பாண்டிய நாடும் நட்பு நாடுகளாய்த்தான் இருந்தன. இடையில் ஏற்பட்டிருக்க வேண்டாம் அந்தத் தெள்ளாற்றுப் போர்! பாண்டியர் சீமாற சீவல்லபர் படுதோல்வி கண்டார்; பல்லவர் மூன்றாம் நந்திவர்மர் ஓங்கு புகழ் பெற்று உயர்ந்து விட்டார்! இதனால் ஏற்பட்டிருக்கும் குழப்பங்கள் எத்தனை எத்தனை!

நாட்டுக்கு நாடு ஆயிரம் பூசல்கள் இருப்பினும் மக்கள் தொடர்பு விஷயத்தில் அரசு குறுக்கே நிற்பதில்லை; அப்படி நிற்பதும் அறமாகாது. அந்த முறையில்தான் பிரசவத்துக்குச் சென்றிருந்தாள் உத்தம

சுந்தரி. அப்போது ஏற்பட்ட மனக் குலைவைத் தான் இப்போது அனுபவித்துக் கொண்டிருந்தாள். இன்னும் என்ன என்ன அனுபவிக்க வேண்டியிருக்கிறதோ!

இந்த லட்சணத்தில் குழந்தையின் ஜாதகம் வேறு சரியில்லாதது ஒரு காரணமாக முளைத்து விட்டது!

வெளியில் சென்றிருந்த சேனாதிபதி சென்னியப்பர் மாளிகை திரும்பினார். அவருடன் ஒரு சிவனடியாரும் வருவதைக் கண்டு, எழுந்து நின்று பணிந்து வரவேற்றாள் உத்தமசுந்தரி. குழந்தையைப் பஞ்சணையில் படுக்க வைத்தாள். அவளையும், அந்தக் குழந்தையையும் ஆசிர்வதித்தார் அந்தச் சிவனடியார்.

''அமருங்கள், அடிகளாரே!'' என்று பணிவன்புடன் மொழிந்தார் சேனாதிபதி சென்னியப்பர். சிவனடியாரும் அருகில் இருந்த ஆசனமொன்றில் அமர்ந்தார். அராசாபரணங்களைக் கழற்றி விட்டுத் தரையில் வந்தமர்ந்தார் சென்னியப்பர். அவருடைய அந்த ஆஜானுபாகுவான தோற்றத்தைக் கூர்ந்து கவனித்தார் சிவனடியார். கண்களின் கருமணிக்குள்ளே ஓர் இழையோடிய மருட்சி இருக்கத்தான் செய்தது. அதனை அத்துணை எளிதில் எவராலும் கண்டு கொள்ள முடியாது; புரிந்து கொள்ளவும் முடியாது.

''அடிகளாரே! இவள் என் மனைவி. பெயர் உத்தமசுந்தரி!' என் குழந்தை சொக்கேசன்!''

''அறிந்தேன் சென்னியப்பா, அறிந்தேன்! குழந்தைக்குத் நீர்க்காயுள் உண்டு; கவலைப் படாதே!''

கரகரப்பான அந்தப் புதிய குரலில் செயற்கைத் தன்மை இழையோடியது. உத்தமசுந்தரியின் மகிழ்ச்சியெல்லாம், குழந்தைக்குத் நீர்க்காயுள் உண்டு என்று அடிகளார் கூறியதிலேயே நிலைத்தது. அவள் தொண்டை குழையக் கேட்டாள்: ''சுவாமி! குழந்தையின் ஜாதகம்......'' அவள் முடிக்கவில்லை. கண்களில் நீர் திரையிட்டு விட்டது. இடைமறித்த சிவனடியார், ''அறிவேன், மகளே! பயம் வேண்டாம். ஜாதகத்தைக் கொண்டு வா, பார்ப்போம்!'' என்றார்.

சென்னியப்பர் ஒன்றை மறந்து விட்ட நிலையில் வாய் திறந்தார்: ''உத்தமசுந்தரி! அடிகளாரைப் பற்றி நான் உனக்குச் சொல்ல வில்லையே! மகாசக்தி வாய்ந்த சித்தர் பெருமான்! அஷ்டமா சித்திகளைப் பெற்றவர். பன்மொழி தெரிந்தவர். இமயத்திலிருந்து கால்நடையாக நமது கோயில்களைத் தரிசிக்க வந்திருக்கிறார். அறங்கூர் அவைத் தலைவரின் உறவினரான நமது செல்வரங்க உடையார் அறிமுகம் செய்து வைத்தார். விரல் அசைத்தால் விபூதி கொட்டும்! குனிந்து நிமிர்ந்தால் குங்குமம் கொட்டும்! நம் குழந்தையின் ஜாதகத்தில் இருக்கும் கிரகங்களையே மாற்றி நிற்க வைப்பதாக நம் வேண்டுதலுக்கு இணங்கி இங்கே எழுந்தருளியிருக்கிறார்!''

''நாம் மிகவும் பாக்கியசாலிகள்!'' என்று கூறிய உத்தமசுந்தரி, அடிகளாரின் காலில் விழுந்து வணங்கி எழுந்து, உள்ளே சென்று ஜாதகத்தை எடுத்து வந்து பக்தி சிரத்தையுடன் நீட்டினாள்.

ஜாதகத்தைப் பிரித்துப் பார்த்த சிவனடியாரின் கண்கள் ஒரு கணம் நிலைகுத்தி நின்றன. ''ஈசுவரா! மாரகனைக் கொண்டு வந்து ஆயுள் ஸ்தானத்தில் அமரச் செய்துவிட்டாயே!'' என்றார் பதற்றத்துடன்.

உத்தம சுந்தரி விக்கி விக்கி அழ ஆரம்பித்து விட்டாள். சென்னியப்பரால் அவளைத் தேற்றவே முடியவில்லை. சிவனடியார் தடித்த உதடுகளை விரித்து, ''கவலைப் படாதீர்கள். நாளைய வெள்ளிக்கிழமை இதற்கொரு சாங்கியம் செய்வோம். இந்தச் சாங்கியத்துக்கான நிபந்தனைகளை யெல்லாம் நீங்கள் கட்டுப்பாடுடன் நிறைவேற்றுவீர்களல்லவா?'' என்று கேட்டார்.

''நிபந்தனை எதுவானாலும் நிறைவேற்றுவோம் சுவாமி! பத்தாண்டுகளுக்குப் பிறகு, குழந்தையே இல்லாமல் குழந்தை பிறந்திருக்கிறது. அது அற்ப ஆயுளையுடையதாக இல்லாமல், நீர்க்காயுளையுடையதாக இருக்க, நீங்கள் என்ன நிபந்தனை விதித்தாலும் அதை ஏற்போம்!''

''அப்படியெல்லாம் பெரிய நிபந்தனையொன்றுமில்லை. வெள்ளிக்கிழமையன்று அறுபது நாழிகை வரை கடைப்பிடித்தால் போதும். நவக்கிரக பரிகாரம் என்பது சாதாரண விஷயமல்ல. கொடிய சோதனை. என் சித்துக்களை அதில் ஏவவேண்டி யிருக்கிறது. ஆகவே, நீங்கள் ஒருவரையொருவர் தொடக்கூடாது. அப்படி உள்ளத் தூய்மையுடன் எனக்குப் பணிவிடை செய்ய வேண்டும்!''

''மிக எளிதான நிபந்தனை ஸ்வாமி, இது!''

''பின்பற்றினால் போதும்!''

விருந்துபசாரம் நடந்தது. சிவனடியாரை வழிகூட்டி யனுப்பிவைத்தனர்.

வெள்ளிக்கிழமை. சூரியோதயத்துக்கு முன்பாகவே சிவனடியார் வந்துவிட்டார். கிழக்கில் கதிரவன் எழும்பொழுது பூசைகளைச் சிறப்பாக நடத்தினார். அடுத்து மறுநாள் காலை உதயம் வரை யாமத்துக்கு யாமம் பூசைகள் நடைபெற வேண்டும். அவற்றுக்கான ஏற்பாடுகளை மனத் தூய்மையுடன் கவனிக்கலானாள் உத்தமசுந்தரி.

இரண்டாம் யாமப் பூசை முடிந்து ஆறு நாழிகைகள் அகன்றன. அப்போது பார்த்து அரண்மனையிலிருந்து அவசர அழைப்பு வந்தது சென்னியப்பருக்கு. மன்னர் நந்திவர்ம பல்லவ போத்தரையரே அழைத்திருந்தார். மறுக்க முடியுமா?

உள்ளே குழந்தை சொக்கேசன் அழுகைக் குரல் கொடுத்தான். வேகமாக உள்ளே சென்ற சென்னியப்பர், குழந்தையைத் தூக்கி ஆறுதலாக முத்தமிட்டார். பின்னர் மனைவியாளிடம் கொடுத்துவிட்டு, சிவனடியாரிடம் சொல்லிக் கொண்டு விடைபெற்றார்.

உணவு வேளை நெருங்கியது. இன்னும் கணவனைக் காணோமே என்று தவியாய்த் தவித்துக் கொண்டிருந்தாள் உத்தம சுந்தரி. ''சுந்தரி! நாம் உணவுகொள்வோமே! மேலும் ஒருபொழுது விரதம்! நேரத்தைக் கடத்தலாமோ?'' என்று குழைவாகக் குரல்

# Kleertone

## நேர்த்திக்கும் சிக்கனத்திற்கும் கிளியர்டோன்

**இஸ்திரிப் பெட்டிகள்:**
"எலகெண்ட்" இஸ்திரிப் பெட்டி.
"இம்பீரியல்"
ஆட்டோமேடிக்
இஸ்திரிப் பெட்டிகள்.





**கெட்டில்கள்:**
சூடெதிர்க்கும் கைப் பிடியும்,
குமிழ் மூடியும், பாதமும்
பொருந்தியது
"இம்பீரியல்"
கெட்டில்.
சாஸ்-
-பேன்
கெட்டிலும்
கிடைக்கிறது.



**டோஸ்ட்டர்:**
முறுகலான பொன்னிற
டோஸ்ட்டுகள்
தயாரிக்க.



**ரேடியண்ட் ஹாட் பிளேட்:**
ஒரு தொல்லையில்லை, பரபரப்பு
இல்லை– உங்கள் சமையல்
வேலையே இலகு
வாகிவிடும்.



**மடக்கக்கூடிய எஃகு பர்னிச்சர்:**
கலையும் சிக்கனமும்
பொருந்தியவை.
சோபிக்கும்
வர்ணங்களிலே
நாகரீக வடிவழகு
வாய்ந்தவை.





கிளியர்டோன் தயாரிப்புகள்
என்றாலே உறுதியான பாதுகாப்பும்
நிலையான மதிப்பும் உங்களுக்குக்
கிடைப்பது நிச்சயம். செப்பம்
செய்வதிலே யாதொரு தொல்லையும்
இராது. ஏனெனில், நம் நாடெங்கும்
இவ் வசதிகள் கிடைக்கின்றன.
தவிர இத் தயாரிப்புகள்
எல்லாவற்றுக்கும் 1 வருட கால
உத்தரவாதம் தரப்படுகின்றன.

## நல்வாழ்வுக்கே கிளியர்டோன் தயாரிப்புகள்

முக்கியமான எல்லா எலக்ட்ரிகல் வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

**GRA** ஜெனரல் ரேடியோ & அப்ளையன்ஸஸ் லிட்.,
பம்பாய், கல்கத்தா, சென்னை, டெல்லி, பெங்களூர், செகந்திராபாத், பாட்னா.

கொடுத்தார் சிவனடியார். உத்தம சுந்தரிக்கு மனம் கேட்கவில்லை. "சுவாமி! அவர் வந்து விடுவார்!" என்றாள். குரலிலும் சொற்களிலும் 'உங்களைவிடக் கணவன்தான் எனக்குப் பெரிது' என்பதைத் தெரிந்துகொள்ள முடிந்தது சிவனடியாருக்கு! அவர் மெல்லத் தலையசைத்துக் கொண்டார்.

நேரம் நகர்ந்து கொண்டேயிருந்தது. கணவனின் வருகையைக் கவனிக்க உச்சி மாடம் சென்றாள். அங்கிருந்து கவனித்தால் சாலையின் தொலை தூரம்வரை பார்க்கலாம். வெகு நேரம் நின்று கவனித்தாள். கணவனைக் காணவில்லை. இனியும் காலதாமதம் செய்தால் சிவனடியாரின் சினத்துக்கு ஆளாக நேரிடும் என்பது ஒருபுறமிருக்க, 'சிவனடியார் கேட்டும் ஏன் காலதாமதம் செய்தாய்?' என்ற கணவரின் சீற்றத்துக்கும் ஆளாக நேரிடும் என்று நினைத்தவளாய், மாடத்தை விட்டுக் கீழே இறங்கி வந்தாள். அங்கே சிவனடியாரைக் காணோம். அங்கு மிங்கும் தேடிப் பார்த்தாள். எங்குமே அவரைக் காணோம். இடி விழுந்த நிலையில் சிலைபோல் நின்றுவிட்டாள் உத்தமசுந்தரி.

சற்றைக்கெல்லாம் சேனாதிபதி சென்னியப்பர் மாளிகைக்குத் திரும்பி விட்டார். "உத்தமசுந்தரி! சிவனடியார் எங்கே?"

மூச்சுத் திணற, முகம் சிவக்க, கண்கள் கலங்க, கருத்துத் தடுமாற நடந்தவை யனைத்தையும் கூறி முடித்தாள் உத்தமசுந்தரி. சென்னியப்பர் சினத்தின் அப்பாராக மாறி விட்டார்! கைக்கெட்டி வந்தது வாய்க் கெட்டாமல் போய்விட்டதே என்ற வருத்தம் கனலாய்த் தெறித்தது கண்களில்! காயகல்பத்தை இழந்துவிட்ட அதிர்ச்சி; கற்பக விருக்ஷத்தை முறித்துவிட்ட ஆவேசம்; காம தேனுவை விரட்டிவிட்ட ஆத்திரம்; இத்தனையுமாகச் சேர்ந்து உணர்ச்சியை இழக்க வைத்தன. ஓங்கிக் கன்னத்தில் பளீரென்று அறைந்தார் சென்னியப்பர்! "அம்மா!" என்ற அலறலுடன் தரையில் சாய்ந்தாள் உத்தமசுந்தரி. தொடர்ந்து குழந்தை சொக்கேசனின் 'அம்மா' என்ற குரல் மழலையாக ஒலித்தது. இரண்டு குரல்களையும் செவி சாய்க்க முடியாதவராய்ப் புரவியேறிக் காற்றென விரைந்தார் சென்னியப்பர். ஆனால் அந்தக் குரல்கள் மதுரைவாழ் மீனாட்சியம்மைக்கு நிச்சயம் கேட்டிருக்க வேண்டும். அவளுடைய வரத்தில் பிறந்தவளல்லவா உத்தம சுந்தரி!

சாலை, சாலையாக, வீதி, வீதியாக, கோயில் கோயிலாக, மற்றும் தோப்புத் துரவுகளிலும் பொட்டல் காடுகளிலும் தேடிப் பார்த்தார் சேனாதிபதி சென்னியப்பர். சிவனடியாரைக் காண வேண்டுமே! வெயிலின் கொடுமையால் உடல் தெப்பமாக நனைந்திருந்தது. தலை கலைந்து, முகம் குலைந்து, பார்க்க விகாரமாகக் காணப்பட்டார் சென்னியப்பர். வலம் வந்த காஞ்சிமாநகரை வெறித்து நோக்கினார். காஞ்சிமா நகரம் அவரைக் கண்டு கொல்லென்று சிரித்தது. 'சந்நியாசி மடம்' என்ற புகழ் பெற்ற மடத்தை நாடி விரைந்தார். அவர் ஊகித்த குறி தவறவில்லை. அங்கே சென்னியப்பர் வருவார் என்று சிவனடியாரும் எதிர்பார்க்கவில்லை.

"அடிகளாரே! கணவன் மீதிருந்த பற்றின் காரணமாகச் சிறு தவறு செய்து விட்டாள் உத்தமசுந்தரி. இதற்காகவா சினம் கொண்டு வெளியேறி விட்டீர்கள்?"

சிவனடியார் எல்லாமறிந்த ஞான நிலையில் சிரித்தார். "சென்னியப்பா! உன் மனைவி சிறு தவறு செய்யவில்லை. பெரிய தவறு செய்து விட்டாள். ஆமாம், நான் குறிப்பிட்ட 'ஒருபொழுது விரதத்'துக்குப் பங்கம் விளைவித்துவிட்டாள்! அவள் உத்தம சுந்தரி அல்ல; உன்மத்த சுந்தரி. உன் குழந்தையின் ஜாதகம் அவ்வளவுதான். போய் வா!"

குரலில் கண்டிப்பும், முகத்தில் அலட்சியமும் காட்டித் திரும்பிக் கொண்டார் சிவனடியார். வேறு வழி தோன்றாமல் திரும்பி விட்டார் சென்னியப்பர். மனத்தில் புயல்! அது அடங்கும் வரையில் மாளிகை நோக்கிச் செல்லவில்லை. இரவு வெகு நேரம் கழித்து மாளிகைக்குச் சென்றார். ஆனால் அந்த இரவு நேரத்தில் அவர் ஒன்றையும் பேசிக்கொள்ளவில்லை.

சனிக்கிழமைப் பொழுது சஞ்சலமாக விடிந்தது.

காலைக் கடன்களை இனிதாக முடித்துக் கொண்ட நந்திவர்ம பல்லவ போத்தரையர், சித்திரக் கூடத்துக்கு எழுந்தருளினார். அங்கே பல்லவப் பெருநாட்டின் பேரமைச்சர்—மகா அமாத்தியர் நம்பன் இறையூர் உடையார், மன்னரின் வருகைக்காகக் காத்திருந்தார். அவருடைய மதிமுகத்தில் கவலையின்

## எப்படி வாழ்த்துவது?

"பாலும் தேனும்போல வாழுங்கள் என்று மணமக்களை வாழ்த்த மாட்டேன். பாலும், தேனும் சாப்பிடக் கூடிய அளவில் இந்த அரசு நம்மை வைக்கவில்லை. வீரனும் போர் வாளும்போல் வாழுங்கள் என்று வாழ்த்தமாட்டேன். இனிமையான புதுமண மக்கள் போரை அதற்குள் சந்திக்க வேண்டாம். போர் இருந்தால்தானே, வீரனுக்கும் போர்வாளுக்கும் வேலை? வீணையும் அதன் நாதமும் போல என்றும் வாழ்த்தமாட்டேன். வீணையை மணமகள் மீட்டிக் கொண்டிருக்க மணமகன் கேட்டுக் கொண்டிருந்தால், வாழ்க்கை வீணையை யார் மீட்டுவது? பின் எப்படி வாழ்த்துவேன் என்றால், "அண்ணாவும் அவர் தமிழும் போல" என்று மணமக்களை வாழ்த்துகிறேன்" என்றார். திருமணக்கூடம் கரவொலியால் நிரம்பியது.

(குடந்தையில் ஒரு திருமண விழாவில் மு. கருணாநிதி பேசியது.)

தகவல்: டி. எஸ். சீதாராமன்



ரேகைகள் முற்றுகையிட்டுக் கொண்டிருந்தன. நந்திவர்மர் அதனைக் குறிப்பால் உணர்ந்து கொண்டார். ''அமாத்தியரே! முகத் தோற்றத்தி லிருந்து என் வருகையை முக்கியமாக எதிர்பார்ப்பது போல் தெரிகிறது. ஏதேனும் அவல நிகழ்ச்சி நடந்திருக்கிறதா?'' என்று கேட்டார்.

நம்பன் இறையூர் உடையார் பழுத்த தலையைப் பக்குவமாய் அசைத்தவராய்ச் சொன்னார்: ''பல்லவேந்திரா! நம் புரவிப் படைத் தலைவர் சென்னியப்பர் வீட்டில் ஓர் அவல நிகழ்ச்சி நடந்து விட்டது. அதன் காரணமாக அவருடைய மனைவி உத்தம சுந்தரியின் வாழ்க்கையே பாதித்துவிட்டது. வாழ்க்கை பாதிப்பது ஒருபுறமிருக்க, நாம் ஒரு திறமை வாய்ந்த சேனாதிபதியை இழந்து விடுவோம் போல் தெரிகிறது!''

நந்தி வர்ம பல்லவருடைய மனத்தில் அவலம் நிறைந்தது. ''என்ன நிகழ்ச்சி உடையாரே!''

''அதை என் வாயால் சொல்வானேன்? அதோ வெளியே அழுத கண்ணீரும், தொழுத கையுமாக உத்தமசுந்தரி நிற்கிறாள். அவள் வாயாலேயே சொல்லட்டும்!''

ஆணைக்குப் பிறகு பணி புரியும் சேவகன் உத்தமசுந்தரியை அழைத்து வந்தான். மன்னரைக் கண்டதும், மனத் தடம் புரண்டு கண்ணீர் மல்க அழுத உத்தம சுந்தரி நடந்தது ஒன்றையும் விடாமல் கூறி முடித்தாள்.

உடனே சேனாதிபதி சென்னியப்பர் வரவழைக்கப்பட்டார். குழந்தையும் கையுமாக மனைவி இருப்பதைக் கண்டு அரண்டு மிரண்டு விட்டார். மதுரையை நோக்கிச் செல்ல உத்தரவிட்டால், இவள் மன்னரை நாடி வந்திருக்கிறாளே!

''வாருங்கள், சேனாதிபதி! உங்கள் வழக்கைத் தருமாசனம் வரை கொண்டு போகாமல், அமைச்சர் மூலமாகவே தீர்த்துக் கொள்ள விரும்பிய உங்கள் மனைவி மகா புத்திசாலி. ஒரு பெண்ணுடன் புணர்ச்சி வாழ்வு நடத்துவது பெரிதல்ல சேனாதிபதி! புரிந்து கொண்டு வாழ்வதுதான் அறிவான வாழ்க்கை! யாரோ முன் பின் தெரியாத சிவனடியார் களங்கம் கற்பித்துவிட்டதாலேயே உன் மனைவி களங்கம் உடையவளாகி விட முடியுமா?'' — அமைதியாக அதே நேரத்தில் அழுத்தம் திருத்தமாகக் கேட்டார் மன்னர் நந்தி வர்மர்.

''மன்னர் அவர்கள் என்னைப் பொறுத்தருள வேண்டும். நான் கண்ட சிவனடியார் அஷ்டமாசித்தி பெற்றவர். விரலசைத்தால் விபூதி கொட்டும். குனிந்து நிமிர்ந்தால் குங்குமம் கொட்டும்.''

மன்னர் பொருளார்ந்த புன்னகை புரிந்தார்.

''சேனாதிபதி! மதுரை என் பகை நாடாக இருக்கலாம். ஆனால் மதுரைவாழ் பெண்கள் பத்தினிப் பெண்கள். ஏனென்றால் என் தமிழ் வளரும் தங்கத் திருமண அது. அந்த மண்ணில் பிறந்தவள் உத்தம சுந்தரி. அவள் மீது நீங்கள் பிறர் சொல் கேட்டுப் பழி போடுவது அடாத செயல்! பெண்களைக் கற்பழிக்கிறவனைக் காட்டிலும், கற்பின் மீது மாசு கற்பிப்பவர்க்கே நான் அதிக தண்டனை வழங்குவேன். ஆகவே இன்னும் ஒரு வாரத்துக்குள் அதாவது அடுத்த அதே வெள்ளிக் கிழமையில் நீங்கள் குற்றத்தை நிரூபிக்க வேண்டும். தவறினால் தண்டனையுண்டு. அதுவரை உத்தமசுந்தரி அரண்மனையில் இருக்கலாம்!''

வியர்த்து வெலவெலத்து வெளியேறினார் சென்னியப்பர்.

அரண்மனையில் இந்தச் செய்தி பரவாமல் வெகுவாகக் காக்கச் செய்தார் பல்லவ மன்னர் நந்தி வர்மர். ஆனால் இரண்டாம் பட்டத்தரசி மாறம்பாவைக்கு மட்டும் இந்தச் செய்தி தெரியும். அதுவும் உத்தம சுந்தரியே கூறியதால்தான். மாறம்பாவையும் மதுரையில் பிறந்து வளர்ந்த பாண்டிய குமாரியாயிற்றே!

நாளைப் பொழுது விடிந்தால் வெள்ளிக் கிழமை.

இரவு வெகு நேரம் வரை மன்னரும் அமைச்சரும் சிந்தனையில் மூழ்கி யிருந்தனர். அப்போது அங்கு வந்த மாறம்பாவை: ''மன்னர் அவர்கள் விரும்பினால் நான் ஒன்றைச் சொல்வேன். இரு தினங்களுக்கு முன் ஓர் ஒற்றன் பிடிபட்டானல்லவா?'' என்று தொடங்கினாள்.

''அவனை ஒற்றன் என்று எப்படி அவ்வளவு உறுதியாகச் சொல்லி விட முடியும்? அவன் சமயவாதி; தர்க்கவாதி; போரிஞன் என் நல்லவோ சொல்லுகிறான். காஞ்சியில் இப்படியான வாதங்கள் உண்டு. அவற்றில் கலந்துகொண்டு செல்ல வந்திருப்பதாக வல்லவோ கூறுகிறான்!''

''சுவாமி! அவன் பேரறிவைப் பயன்படுத்துங்கள் என்றுதான் கூறுகிறேன். இந்த வழக்குக்கான தீர்ப்பை அவனிடம் ஒரு சோதனைக்காக விட்டிருப்பதாகக் கூறி நாளை ஒப்படையுங்கள். இந்தத் தனி வழக்கின் முடிவை அவன் செவ்வனே தீர்த்தால் விடுதலையுண்டு என்று சொல்லுங்கள்!''

பல்லவ தேவி மாறம்பாவையின் இந்தக் கருத்தைப் பேரமைச்சரும் வரவேற்றார். மன்னரும் ஒப்புக் கொண்டார்.

பொழுது புலர்ந்தது. வழக்குத் தொடர்ந்தது. ஒருவருக்கும் தெரியாமல் தனி வழக்காக அது நடைபெற்றதால் வெளியில் காவல் பலமாக இருந்தது.

சேனாதிபதி சென்னியப்பர் ஒருமருங்கே நின்று கொண்டிருந்தார். சற்றே தள்ளி உத்தமசுந்தரி குழந்தையுடன் நின்றுகொண்டிருந்தாள். மன்னர் நந்திவர்மர், பேரமைச்சர் நம்பன் இறையூர் உடையார், பல்லவ தேவி மாறம்பாவை ஆகிய மூவரும் ஆசனங்களில் அமர்ந்து காணப்பட்டனர்.

''சேனாதிபதி! நீங்கள் சாட்டிய குற்றத்தை நிரூபிக்க முடியுமா?'' மன்னர் வழக்கைத் தொடங்கினார்.

''சிவனடியார் கிடைக்காதவரை என்னால் நிரூபிக்க முடியாது, பல்லவ பெருமானே!''

''அப்படியா? நீங்கள் அவரை அவ்வளவுக்கு நம்புகிறீர்களா?''

''பரிபூரணமாக நம்புகிறேன்!''

இந்தச் சமயத்தில்தான் அந்தச் சமயவாதியான புதிய மனிதனை அழைத்து வந்தார்கள். கனத்த மீசையும், தலைக் கேச மாறுதலுமாகக் காணப்பட்டான், அறிவு நிறைந்தவனாகச் சொல்லிக் கொண்ட அந்த மனிதன். அவனுக்குரிய நிபந்தனையை முன் கூட்டியே அறிவித்திருந்தார்கள். சேனாதிபதியையும், அவனுடைய மனைவியையும் உற்றுக் கவனித்தான்.

''வேடிக்கையான வழக்கு, சேனாதிபதி! நீங்கள் அன்று அரண்மனைக்குப் புறப்பட்ட போது, உங்கள் மனைவியைத் தொட்டீர்களா?'' என்று கேட்டான்.

''சத்தியமாக இல்லை. என் குழந்தையை எடுத்து முத்தமிட்டுச் சென்றேன்! அவ்வளவே!''

''ஓகோ! நல்லது. நான் ஒன்றைக் கேட்கிறேன். உங்கள் மன்னரை ஒருவன் எட்டி உதைத்தால் அவனை என்ன செய்வீர்கள்?''

''காலை இரண்டு துண்டாக வெட்டி எறிவேன்!''

அந்தப் புதிய மனிதன் சிரித்தான். ஆனால் மன்னருக்கு அது வியப்பாக இருந்தது. புதிய மனிதன் கேட்டான்: ''உங்கள் மன்னரை எட்டி உதைக்கு மளவுக்கு எவர்க்கேனும் துணிவு உண்டா?''

''கிடையாது!''

''துணிவுள்ளவன் ஒருவன் இருக்கிறான், அவனை யார் என்று சொல்ல முடியுமா?''

''தெரியாது.''

''நீங்கள் அவசரக்காரர். அதனால்தான் அறியவில்லை. அந்தத் துணிவுள்ளவன் மன்னர் பெற்ற செல்வன். இப்போது சொல்லுங்கள், இரண்டு துண்டாக வெட்டி எறிவீர்களா?''

''தயவு செய்து என்னை இப்படிச் சோதனைக்கு ஆளாக்க வேண்டாம். அந்தக் கால் முத்தமிட வேண்டிய கால்!''

''அப்படித்தான் நீங்கள் உங்கள் குழந்தையை முத்தமிட்டிருக்கிறீர்கள். நீங்கள் சென்றதும் உங்கள் மனைவி முத்தமிட்டிருக்கிறார். இந்த எச்சில் கலவையில்தான் ஒரு பொழுது விரதம் குலைந்து விட்டதாக அந்தச் சிவனடியார் களங்கம் கற்பித்திருக்கிறார். இப்போது சொல்லுங்கள். உங்கள் மனைவி குற்றமுடையவரா?''

பெரிதாகக் குழம்பிப் போன சென்னியப்பர் நாணத்துடன், ''இல்லை'' என்று கூறித் தலை குனிந்து கொண்டார்.

மன்னரை நோக்கிய அந்தப் புதிய மனிதன், ''நான் விடைபெறலாமா?'' என்று கேட்டான். அவனுக்கு உத்தரவு பிறந்தது. மன்னரும், அமைச்சரும், மாறம்பாவையும் ஒருவரையொருவர் நோக்கிக் கொண்டனர்.

''சேனாதிபதி! மனம் தெளிந்ததா?'' மன்னர் கேட்டார். சேனாதிபதி சொன்னார்: ''தர்க்க ரீதியாகத் தெளிவுதான். ஆனால் இதுதான் உண்மை என்று எப்படி ஏற்பது, மன்னர் பெருமானே! நான் தண்டனையை அனுபவித்தாலும் அனுபவிப்பேனே தவிர, மனம் பூரணமாகத் தெளியாமல் இவளுடன் வாழ மாட்டேன்.''

''அப்படியா! யாரங்கே! அந்தச் சிவனடியாரை அழைத்து வரலாம்!'' என்று கர்ஜித்தார் நந்திவர்மர். சென்னியப்பரும் உத்தமசுந்தரியும் திகைப்பும் வியப்பும் கொண்டனர்.



''ஏண்டா பையா? உங்கப்பா என்ன புஸ்தகத்திலே மூழ்கி விட்டாரே என்ன புஸ்தகம் படிக்கிறார்?''

''நீச்சலைப் பற்றிய புஸ்தகம், மாமா!''

---

சற்றைக்கெல்லாம் சிவனடியார் அழைத்து வரப்பட்டார். அவருடைய உடல் பெரிதாக நடுங்கிக் கொண்டிருந்தது.

''உத்தமசுந்தரி! இவர்தானே அந்தச் சிவனடியார்?'' என்று கேட்டார் மன்னர்.

''இவரேதான், பல்லவேந்திரா!'' என்று உணர்ச்சிவயப்பட்டுக் கூறினாள்.

''சென்னியப்பரே?''

''ஆம், பல்லவேசுவரா!''

சிவனடியாரை நோக்கினார் மன்னர்: ''சிவனடியாரே! உத்தமசுந்தரி களங்கமுடையவளா?''

''இல்லை; நான்தான் களங்கமுடையவன்!''

நகையொலி முழக்கம் செய்தார் நந்திவர்மர். ''உங்கள் வேஷத்தைக் கலைக்கலாம்.''

சிவனடியாரின் வேஷம் கலைக்கப்பட்டது. அப்போது ''அடப் பாவி, நீயா?'' என்றாள் உத்தமசுந்தரி. ''மன்னர் பெருமானே, இவன் என் அத்தை மகன்!''

''யாவும் அறிவேன். பல்லவ தேவியிடம் நீ கூறிய அந்தச் செய்தியை வைத்துத்தான் இவனைச் சந்தேகத்துடன் இப்படி நடத்தினேம். இவனுடைய ஒற்று வேலைக்கு உன்னைத் துணை புரியுமாறு மருட்டினான். நீ மறுத்திருக்கிறாய். உன்னைப் பழி வாங்க முனைந்தான். ஆனால் அவனை அவனே பழிவாங்கிக் கொண்டான். சேனாதிபதியாரே! கற்பால் கனல் கண்ட மதுரையில் பிறந்தவள் உங்கள் மனைவி. நீங்கள் சாட்டிய குற்றத்துக்காக உங்களைப் பொறுத்தருள்கிறோம்.''

பணிவு நிறைந்த இந்தப் பிரச்னையை, ஒரு சிறு சிந்தனைப் பொறியின் காரணமாகத் தீர்த்து வைத்த மதுரை மகள் மாறம்பாவையை நன்றியறிதலுடன் நோக்கினார் நந்திவர்மர். தமிழ் நந்தியின் தாள் பணிந்தனர் சென்னியப்பரும், உத்தமசுந்தரியும்.




## மனிதாபிமானம் மறையவில்லை

தங்களின் 3-7-66 இதழில், "விபத்தினும் பெரிய விபத்து" என்ற தலையங்கத்தின் கீழ் ஆஜ்மீர் ரயில் விபத்தின்போது விபத்து நிகழ்ந்த இடத்துக்கு வைத்திய உதவிகளையும் மற்ற உதவிகளையும் அனுப்பி வைக்கும் விஷயத்தில் ரயில்வே அதிகாரிகள் உரிய கவனம் செலுத்தவில்லை என்பதாகக் கருத்து வெளியிடப்பட்டிருக்கிறது.

ஆஜ்மீர் டிவிஷனின் ரயில்வே அதிகாரிகள், விபத்து நிகழ்ந்த ஸ்தலம் தங்களுடைய அதிகார வரம்புக்கு அப்பாற்பட்டது என்ற காரணத்தைக் காட்டி, விபத்து ஸ்தலத்துக்கு உடனடியாக விரைந்து செல்லவில்லை என்றும், அதிகார வரம்பு விஷயத்தில் ஜெய்ப்பூர் ரயில்வே அதிகாரிகளுக்கும் ஆஜ்மீர் ரயில்வே அதிகாரிகளுக்கும் இடையே வாக்குவாதம் ஏற்பட்டது என்றும், அதன் விளைவாக, காயமுற்றவர்களுக்கு வைத்திய உதவி அளிப்பதில் தாமதம் ஏற்பட்டுவிட்டது என்றும் புகார்கள் கூறப்பட்டதாகக் குறிப்பிட்டிருக்கிறீர்கள்.

இந்தப் புகார்கள் உண்மையில் நடந்தவைக்கு முற்றிலும் முரணானவை என்பதைத் திட்டவட்டமாக உங்களுக்கு நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

மேற்கத்திய ரயில்வேயில் ஜெய்ப்பூர் டிவிஷன் நிர்வாக வரம்புக்கு உட்பட்டதும், ஆஜ்மீரிலிருந்து 14 கிலோமீட்டர் தூரத்தில் அமைந்துள்ளதுமான லத்புரா ரயில் நிலையத்தில் 1966 ஜூன் 19ம் தேதி காலை 7.50 மணிக்கு இந்த விபத்து நிகழ்ந்தது. தகவல் கிடைத்த உடனேயே ஆஜ்மீரிலிருந்து ரயில்வே டிவிஷனல் வைத்திய அதிகாரி தமது காரில் புறப்பட்டு காலை 8-35 மணிக்கெல்லாம் விபத்து ஸ்தலத்துக்குப் போய்ச் சேர்ந்து விட்டார்; அங்கு போய்ச் சேர்ந்த முதல் அதிகாரி இவர்தான். அதன் பிறகு ரயில்வே ஆம்புலன்ஸ் கார், நான்கு ரயில்வே டாக்டர்களுடன் காலை 8-50க்கு லத்புரா போய்ச் சேர்ந்தது. அதையடுத்து ஐந்து நிமிஷங்களுக்குள், மீண்டும் ஆஜ்மீரிலிருந்து விசேஷ என்ஜின் பூட்டப்பட்ட மெடிக்கல் வான் அங்கு வந்து சேர்ந்தது. டிவிஷனல் ரயில்வே அதிகாரிகள் ஆஜ்மீரிலிருந்து சாலை மார்க்கமாகப் புறப்பட்டுச் சென்று காலை ஒன்பது மணிக்கு விபத்து ஸ்தலத்தை அடைந்தார்கள்; அதன் பிறகு கிரேனுடன் கூடிய பிரேக்டௌன் ரயில் வண்டி காலை 9-30 மணிக்கு அங்கு வந்து சேர்ந்தது. ஆஜ்மீரிலிருந்து மற்றோர் அதிகாரிகள் கோஷ்டி மோட்டார் டிராலியில் ஜெய்ப்பூர் காலை 9-35க்கு விபத்து ஸ்தலத்தை அடைந்தது. சாலை மார்க்கமாக எடுத்துச் செல்லக் கூடிய நிலையில் இருந்த காயமுற்றவர்களில் பெரும் பகுதியினரை ஆம்புலன்ஸ் வான் சாலை மார்க்கமாக எடுத்துச் சென்றது. ஆனால் படுகாயமடைந்தவர்கள் சாலை மார்க்கப் பிரயாணத்தைத் தாக்குப் பிடிக்க முடியாதாகையால் அவர்கள் மெடிகல் வானில் ஆஜ்மீருக்கு எடுத்துச் செல்லப்பட்டார்கள். அந்த வான் உண்மையிலேயே சக்கரம் பூட்டிய ஒரு சிறு ஆஸ்பத்திரியாகும். அவசர அறுவைச் சிகிச்சைக் கூடமொன்றும் ஆக்ஸிஜன் செலுத்துவது, இரத்தம் செலுத்துவது போன்ற மற்ற வசதிகளும் அந்த வானில் உள்ளன. உடனடியாக மெடிகல் வானிலேயே மிகச் சிறந்த வைத்திய உதவி அளிக்க முடிந்ததன் காரணமாகவே படுகாயமுற்ற ஒரு குழந்தையின் உயிர் காப்பாற்றப்பட்டது என்பது இங்கே குறிப்பிடத் தக்க தொரு செய்தியாகும்.

விபத்து நடந்தவுடன் கஷ்ட நிவாரண வேலைகளுக்குத் தேவையான பளு தூக்கிகளை ஆஜ்மீரிலிருந்தும், புலேராவிலிருந்தும் வரவழைப்பதற்கு ஏற்பாடு செய்யப் பட்டது. விபத்து நடந்த இடத்துக்கு ஆஜ்மீரிலிருந்து வந்து கொண்டிருந்த விபத்து உதவி ரயிலில் ஒரு பளு தூக்கி வந்தது; ஆனால் காயமுற்றோரைக் காலதாமதமின்றி ஆஜ்மீருக்கு வைத்திய வசதி உள்ள வண்டியில் கொண்டு செல்வதற்கு உதவியாக இதை மறுபடியும் ஆஜ்மீருக்கு எடுத்துச் செல்ல வேண்டியதாயிற்று. ஆனால் இதன் காரணமாகக் கஷ்ட நிவாரண அலுவல்கள் தடைப்படவோ அலுவல் வேகம் குன்றவோ இல்லை. ஆஜ்மீரிலிருந்து பளு தூக்கி மறுபடியும் கொண்டு வரப்பட்டது. புலேராவிலிருந்தும் ஒரு பளு தூக்கி கொண்டு வரப்பட்டது. மீட்பு வேலைகளுக்கு இவை பயன்படுத்தப்பட்டன.

அதிகார வரம்பு பற்றிய கருத்து வேறுபாடு என்ற பேச்சுக்கே இடமிருக்கவில்லை என்பது இவற்றிலிருந்து தெளிவாகிறது. இத்தகைய குற்றச்சாட்டுக்களைத் தெரிவிப்பது மிகுந்த சிரமங்களுக்கிடையே அலுவல் புரிய வேண்டியிருந்த ரயில்வே அதிகாரிகளுக்கும் சிப்பந்திகளுக்கும் எதிராக இழைக்கப்படும் அநீதியாகும்.

மதராஸ்
6-7-66

டி. எஸ். சுப்பிரமணியம்,
உதவிப் பொதுநலத் தொடர்பு அதிகாரி, தென்னிந்திய ரயில்வே.

Edited printed & published by I. Sadasivam on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Kalki Press Kilpauk Madras-10

## புது அழகுடன் விளங்க

# பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகியுங்கள்

### சருமத்தைப் பட்டுப்போல் மிருதுவாக வைத்துக்கொள்ளுங்கள்

வெண்பனி போன்ற பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமை உபயோகித்து உங்கள் சருமத்துக்கு புதுப் பொலிவை அளியுங்கள். பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் முகத்தில் கரும்புள்ளிகள் தோன்றுவதைத் தடுத்து, எண்ணெய் வழியும் தோற்றத்தை மாற்றி சருமத்தில் வெயிலினாலும் காற்றினாலும் வறட்சியேற்படாமல் பாதுகாப்பளிக்கும். பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமை மட்டுமே உபயோகித்தால்கூட முகம் பட்டுப்போல் விளங்கும். அதன் மீது பவுடரும் போட்டுக்கொண்டால் பவுடர் ஒரே சீராகப் படிந்து மணிக்கணக்கில் அப்படியே கலையாமல் இருக்கும்.




சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon




**The Amalgamations** Group is the largest Light Engineering Group In South India.

The Corporate strength of **Amalgamations** is due to a successful plan of acquiring or constructing a network of manufacturing units and progressively rationalising them to be complementary units of production in related fields of activity.

The Group Manufactures Automotive and Industrial Diesel Engines, Agricultural Tractors and farm implements, Castings, Stampings, forgings, Engineers Cutting Tools, spares and ancillaries such as pistons, piston rings, bimetal bearings, flywheel ring gear as original equipment or for use in the automobile and other industries, lead acid batteries for transport, telecommunication and industrial uses,
Builds coaches and bodies,
Fabricates mechanical light engineering specialities,
Formulates Synthetic resins, pigments, lacquers, paints, colours, varnishes, emulsions, enamels,
Operates transport and passenger services,
Produces tea and coffee,
Publishes an evening newspaper,

The Group's Industrial Estates cover over 150 acres and provide as many as 17 separate manufacturing units using latest equipment and modern techniques.
Its valuable experience of cost and quality considerations over many years in the domestic market enables the Group to export a wide range of first class products which have been accepted by discriminating buyers in over thirty countries in the world.

**Non-Engineering Group**

ASSOCIATED PRINTERS (MADRAS) PRIVATE LIMITED, MADRAS-2.

ASSOCIATED PUBLISHERS (MADRAS) PRIVATE LIMITED. 'THE MAIL' MADRAS-2.

HIGGINBOTHAMS PRIVATE LIMITED, MADRAS-2.

SIMPSON & GENERAL FINANCE COMPANY LIMITED. MADRAS-2.

SPEED-A-WAY PRIVATE LIMITED. MADRAS-2.

T. STANES & COMPANY LIMITED. COIMBATORE.

THE UNITED COFFEE SUPPLY COMPANY LIMITED, COIMBATORE.

WALLACE CARTWRIGHT & CO. LIMITED. 55/56. St. James Street. LONDON S. W. 1.

Total Number of Employees: About 14,000
Bankers: The Central Bank of India Limited, Madras-2.
Advertising Consultants:
THE MADRAS ADVERTISING CO. PRIVATE LTD., MADRAS-2.

# Amalgamations
**PRIVATE LIMITED**
802, Mount Road, Madras-2.
and subsidiary Companies
*(Unit Companies of Simpson Group Industries)*